# நூல் விளக்கம்

முதற் பதிப்பு : **1977**

மறு பதிப்பு : **1998**

| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | நனவோட்டங்கள் |
| ஆசிரியர் | : | ரா. சீனிவாசன் |
| பொருள் | : | புதினம் |
| தாள் | : | 13.6 kg. Maplitho |
| அளவு | : | டபுள் கிரௌன் |
| அச்சு | : | 10 புள்ளி |
| பக்கம் | : | 192 |
| பதிப்பகம் | : | அணியகம்,<br>5, செல்லம்மாள் தெரு,<br>செனாய் நகர்,<br>சென்னை – 600 030<br>தொலைபேசி : 644 96 30 |
| விலை | : | ரூ. 50.00 |
| ஒளிஅச்சு | : | எல்கேஎம் கம்ப்யூட்டர் பிரிண்டர்ஸ்,<br>சென்னை – 600 017 |
| அச்சகம் | : | நெல்சன் அச்சகம்,<br>சென்னை – 600 029. |

# முன்னுரை

கதை என்றால் அதற்கு ஒரு கரு தேவைப்படுகிறது. அதற்கு உதவியது ஒரு செய்தி; அழகு பெண்ணை உயர்த்துவது; அவளுக்கு மதிப்புத் தருவது; அது மலர் போன்றது.

பூமாலை குரங்கின் கையில் சிக்கினால் அழகு கெடுகிறது; சிதைவு ஏற்படுகிறது.

ஒரு பெண் அதற்காகவே வெறுக்கப்பட்டாள். அதனாலேயே அவன் அவள்மீது வெறுப்புக் காட்டினான்; இதை நம்பமாட்டீர்கள். இது உண்மைச் செய்தி; இதை வைத்து இந்தக் கதை பின்னப்பட்டது.

இதை எடுத்துச் சொல்ல ஒரு கதாநாயகன் தேவைப் பட்டது; அதுதான் 'நான்' என்று தொடங்கியது. நான் என்பவன் சலனமிக்கவன். அவன் உஷாவோடு தொடர்பு பெறுகிறான்; அவள் வாழ்க்கையை அறிகிறான்; அறிவிக்கப் படுகிறான்.

மற்றோர் பாத்திரம் 'கண்ணம்மா'; இது ஒப்பீடுக்காகத் தேவைப்பட்டது. இவள் கதை இயக்கத்திற்குத் தேவைப்பட்டாள்.

இவர்கள் வாழ்க்கை சமுதாயப் பார்வையோடு பிணைக்கப்படுகிறது; அதற்கு 'ஓவியர்' உதவுகிறார். மற்றும் இதை வற்புறுத்த 'ஒரு திரைப்படமும்' கதாபாத்திரம் ஆகிறது.

நனவோட்டங்கள் என்ற தலைப்பு இந்தக் கதையின் மைய ஓட்டமாக விளங்குகிறது.

இது சமுதாய நோக்கில் சித்திரிக்கப்படுகிறது. ஒரே நிகழ்ச்சியைச் சுற்றிக் கதை இயங்குகிறது.

இது பல்கலைக்கழகத்தில் எம்.ஏ. பட்ட வகுப்புக்குச் சிறப்புத் தமிழ் மாணவர்க்குப் பாடமாக வைக்கப்பட்டது.

நனவோடை உத்திக்கு இந்நாவல் ஓர் எடுத்துக் காட்டாக விளங்கியது.

இது ஓர் அழகிய சித்திரமாக உருப்பெற்றது. இதன் கருத்துகள் செய்திகள் இன்றும் பயன்படுவன. அதனால் மறுபதிப்புக் காண்கிறது.

**ரா. சீனிவாசன்**

சம உரிமை, சம அந்தஸ்து சம உடைமை இம்மூன்றும் அடங்கியதுதான் சமதர்மம். இதை அடையச் சீர்திருத்தம், சீரமைப்பு, அடியோடு மாற்றம் இம்மூன்று நிலைகளும் தேவைப்படுகின்றன. சமதர்மப் பாதையை நோக்கிச் சமுதாயம் இயங்கிக் கொண்டு இருக்கிறது. இதை ஓர் ஓவியமாக வடித்துத் தருவதே இந்நாவல்.

# "நனவோட்டங்கள்"

## 1

**நா**ன் அன்று திரைப்படம் பார்க்கப் போயிருந்தேன். எனக்கு எப்பொழுதும் கொஞ்சம் அகம்பாவம்தான். எது உயர் வகுப்பு என்று சுற்றுமுற்றும் பார்த்தேன். 2-90 அந்தத் தியேட்டருக்கு அது உயர்வகுப்பு. ஏன் 1-90க்குப் போகக் கூடாது. மேலே பால்கனி 2-90. கீழே தரை மட்டம் 1-90. அங்கேயும் நாற்காலிதான் இங்கேயும் நாற்காலிதான். அவள் ஏன் அந்தப் படத்தைப் பார்க்கச் சொன்னாள். கட்டாயம் பார்க்க வேண்டும் என்று சொன்னாள். "அதில் என் வாழ்க்கை அப்படியே சித்திரமாக்கப்பட்டிருக்கிறது". என்று சொன்னாள். அதை நம்ப முடியவில்லை. படம் என்பது வெறும் கதை. அதில் எப்படி அவள் வாழ்க்கை இடம் பெறும்? ஒவ்வொருவரும் அப்படித்தான் நினைக்கிறோம். வாழ்க்கையின் பிரதிபலிப்புதான் கதை. இல்லாவிட்டால் ஏன் இத்தனை பேர் போய்ப் பார்க்கிறார்கள்.

'சில நேரங்களில் சில மனிதர்கள்' அற்புதமான கதை. அவள் மாமா வக்கீல், அவர் தன் கைவரிசையைக் காட்டுகிறார். வயசானவர்களுக்கு இந்த மாதிரி ஆசைகள் வருமா? லட்சுமியை அவர் காதலிக்கிறார். அது காதலா? இல்லை..... கவர்ச்சி; இளமை அவரை அழைக்கிறது; அவ்வளவுதான். அவர் உழைப்பை எல்லாம் வாங்கிக் கொண்டாள். தூக்கி எறிந்து விட்டாள். பாவம் ஆனால் மற்றவர்கள் சிரிக்கத்தக்க வாழ்க்கை. யாரும் அவர் நடத்தை நியாயம் என்று சொல்லமாட்டார்கள். ஆனால் இதுமாதிரி நடக்காமல் இருக்கா? 'ஆசை' யாரை விட்டது. லட்சுமியை

எப்படியாவது வளைத்துக் கொள்ள வேண்டும். அவளும் பொறுத்துப் பொறுத்துப் பார்த்தாள்.

பிரபு அவளுக்குப் புதிய உத்வேகத்தைக் கொடுத்து விட்டான் என்றுதான் கூறமுடியும். அவனை நினைத்துப் பார்க்கிறாள். இந்தக் கிழட்டுப் புலி வாலை ஆட்டுவது அவளுக்குப் பிடிக்கவில்லை. எடுத்தாள் 'பில்ட்டு'; விளாசினாள்; பாவம் அவர் மனம் திருந்திவிட்டார். பெண்கள் இப்படி முரட்டுத்தனமாக மாறும்பொழுது ஆண்கள் மாறி விடுகிறார்கள். அவருக்கு அது வாழ்க்கையில் ஒரு படிப்பினை. இனிமேல் கங்காவின் ஜோலிக்குப் போவது இல்லை என்று ஒரு முழுக்குப் போட்டு விட்டார்.

கங்காவாக நடித்தவள் லட்சுமி; அதைச் சொல்ல மறந்துவிட்டேன்.

நான் ஏன் இந்தப் படத்தைப் பற்றி நினைத்தேன் என்பது எனக்கே புரியவில்லை. என்னமோ அந்தப் படம் அந்தக் காட்சி நினைவுக்கு வந்தது. குமுதத்தில் வந்த விமரிசனமும் பாராட்டத்தக்கதுதான். டெலிபோனில் அவள் மூன்று தரம் பேசுகிறாள். ஒவ்வொரு தடவையும் அவள் உணர்ச்சி வெளிப்படுவது பிரமாதம். மூன்றாவது தடவை உச்சநிலையை அடைந்துவிட்டது. பிரபு அவளிடம் தோற்றுவிடுகிறான். நடிக்க முயல்கிறான். முடியவில்லை. லட்சுமி கங்காவுக்காகவே பிறந்துவிட்டாள் என்று யாரோ அங்கே பேசிக்கொண்டிருந்தார்கள். நானும் பார்த்து இருக்கிறேன். சட்டைக்காரி பிரமாதம். அப்பொழுது நானும் நினைத்தது உண்டு. அதற்கு அவள்தான் சரியான நடிகை. அது மலையாளப் படம் அதுகூட மறந்து விட்டது லட்சுமி நடித்ததால் அது தமிழ்ப் படமாகவே என் மனத்தில் நின்றுவிட்டது.

அவள் திக்கற்ற பார்வதியில் நடித்திருக்கக் கூடாது என்று தோன்றியது. ஆனால் அவள் நடிப்பு அதிலேதான்

பிரமாதம். கதைதான் சரியாக இல்லை. இராசாசி எழுதியது. அவர் கதை நீதிக் கதைகள். படிப்பதற்கு நன்றாக இருக்கலாம். படத்துக்குச் சரியாக இல்லை. கதை படிக்கிறவர்கள் மனசாந்திக்குப் படிக்கிறார்கள்; படம் பார்க்கிறவர்கள் புதுமையை நாடுகிறார்கள். அந்தக் கதையில் அவள் தற்கொலை செய்து கொள்கிறாள். அது சரியான முடிவு அல்ல; தப்பு செய்கிறவர்கள் எல்லாம் தற்கொலை செய்து கொண்டால் இந்த உலகத்தில் ஒருவர் கூட உயிர் வாழ்ந்து கொண்டிருக்க முடியாது.

அதனால்தான் அந்தப் படம் எனக்குப் பிடிக்க வில்லை. ஆனால் நடிப்புப் பிரமாதம் என்று அப்பொழுது நினைத்தேன். இங்கே கதை பிரமாதம்; நடிப்புச் சாதாரணமாக இருந்தால்கூட அது எடுத்துக் கொடுக்கிறது.

எனக்கு இப்பொழுது ஜெயகாந்தன் என்றால் மிகவும் பிடிக்கும். அதுவும் 'சில நேரங்களில் சில மனிதர்கள்' பிரமாதமான கதை. பெண்ணின் உயர்வுக்குப் பாடுபடும் அதி அற்புதமான கதை. நாவலே ஒருமுறை படித்திருக் கிறேன். திரைப்படம் நல்ல வெற்றி. கவிஞர்களுள் எனக்கு நா. காமராசன் நிரம்பப் பிடித்திருக்கிறது. அது ஏன் என்று தெரியவில்லை. அப்படி ஒன்றும் அவர் நிறைய கவிதைகளை எழுதித் தள்ளவில்லை. ஒரு கவிஞனின் உயர்வுக்கு அவன் பாடும் பாடல்களின் எண்ணிக்கை அடிப்பை அல்ல; அந்த எழுத்து உலகுக்கு உணர்த்தும் உணர்வுதான் காரணம் என்று நினைக்கிறேன்.

மற்றவர்கள் ஒதுக்குகிறவர்களை அவர் ஒதுக்க வில்லை, அதுதான் எனக்கு மிகவும் பிடித்திருந்தது. அது என்னமோ எனக்கு இது மாதிரி மனநிலை; மற்றவர்கள் தவறு என்று சொல்லுவதை என்னால் ஒப்புக்கொள்ள முடிவதில்லை அது சரி என்று சொல்லுவதில் எனக்கு ஒரு திருப்தி. அதைக் குதர்க்கம் என்று ஒரு சிலர் நினைக்கலாம்.

எனக்கு அது தருக்கமாகவேபடுகிறது. தர்க்கம் குதர்க்கம் என்பது எல்லாம் அவரவர் மன நிலையைப் பொறுத்த விஷயம்தானே.

ஏன் இப்படி மாறுபட வேண்டும் என்று கேட்கலாம். ஏன் மாறுபடக் கூடாது என்று திருப்பிக் கேட்கத் தோன்று கிறது. வாழ்க்கையில் ஒரு சில பழக்கமான சிந்தனைகள் ஏற்பட்டு விடுகின்றன. இது நியாயம் என்றுதான் சொல்ல லாம். அது நியாயமாக இருந்தால் ஏன் இந்த உலகத்தில் இவ்வளவு துன்பம்? இவ்வளவு கவலை? வாழ முடியாமல் மனிதன் சிக்கித் தவிக்கிறான்.

அவள் சொன்னாள் "எங்களுக்கு எல்லாம் இருக்கிறது. எங்கள் வீட்டிலே என்ன குறை? ஒரு மாதத்துக்கு முன்னாலே 'டெலிவிஷன்' கூட வாங்கி வைத்திருக்கிறோம். எல்லா வசதிகளும் இருந்தாலும் ஒரு திணறல் இருக்கத்தான் செய்கிறது."

'டெலிவிஷன்' என்றதும் எனக்கு ஒரு நினைவு வருகிறது. இந்தத் தொலைக்காட்சிக் கருவி வாங்குவதற்கு பாங்கி கடன் தருகிறார்களாம்; அதை நம்பி சாதாரண வருவாயுள்ளவர்களும் துணிந்து வாங்கி விடுகிறார்கள். அப்புறம் பற்றாக்குறை. இப்பொழுது எல்லோரும் எதையும் அனுபவிக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறார்கள்.

பொதுவாக ஒரு வசதியான வீடு என்றால் புதிய சேர்க்கை டெலிவிஷன் தான். எல்லாரும் பெட்டியில் அடங்கிய பணம்போல அடக்கமாக உட்கார்ந்து கொண்டு கேட்கிறார்கள்.

அதைவிட எனக்கு நிரம்ப பிடித்து இருந்தது அந்த ஏழைகள் வாழும் பகுதிதான், அங்கே வீட்டிலே விளக்கு இல்லை. இருள்தான். ஆனால் அது அவர்களுக்கு ஓய்வைத் தருகிறது. பத்து வீட்டுக்கு ஒரு டிரான்சிஸ்ட்டர் பாடிக் கொண்டு இருந்தது. சினிமாப்பாட்டை ரசித்துக்

கொண்டிருந்தார்கள். கத்திக் குரைக்கும் நாய்கூட அடங்கிப் பாட்டைக் கேட்டுக் கொண்டிருந்தது.

ஏன் அந்த வீடுகளில் 'டெலிவிஷன்' போகக்கூடாது. அவர்கள் முகத்தில் எவ்வளவு சந்தோஷம் நிரம்பும்! ஒலி புகுந்தது ஆனால் அவர்கள் வாழ்வில் ஒளி புகவில்லை என்று நினைத்துப் பார்த்தேன்.

அந்தக் குடிசை வீட்டுப் பிள்ளைகள் அடையாளம் சொல்லித் தெரிய வேண்டியது இல்லை. பார்த்தாலே தெரிகிறது. ஒழுங்காகச் சட்டை அணிந்து கொண்டு கான்வெண்டில் கற்றுக்கொள்ளும் ஆங்கிலம் பேசும் சிறுவர்களைக் கண்டால் எனக்குப் பிடிப்பது இல்லை. அவர்கள் பேசும் ஆங்கிலம் என்னைக் கவர்வது இல்லை. சின்ன வயதில் தாய்மொழி பேச வேண்டும் குழந்தைகள் ஆங்கிலத்தைத் தடுமாறி 'ஆய் ஊய்' என்று கத்திப் பேசுவது என்னைக் கவரவில்லை. இவர்கள் பேசும் தமிழ் என்னைக் கவர்ந்து விடும். அக்கா அம்மா என்று உறவுச் சொற்களை அவர்கள் பேசும் பொழுது அவர்கள் யார் என்பதை என்னால் தெரிந்து கொள்ள முடிகிறது.

இந்த நாட்டு எதிர்காலக் குடிமக்கள் இவர்கள்; வாக்குரிமை ஒன்றுக்கு மட்டும் அவர்கள் சொந்தக் காரர்கள். வேறு எந்த உரிமைக்கும் அவர்கள் சொந்தக் காரர்கள் அல்ல. அவர்கள்தான் நாட்டின் எதிர்காலத்தை நிச்சயிக்கப் போகிறார்கள். நாம் மேலே என்னன்னவோ செய்ய முயல்கிறோம். வாழ்க்கையில் ஒழுங்கு கட்டுப்பாடு என்னன்னமோ பேசுகிறோம்.

அந்தச் சிறுவர்கள் தாம் யார் என்பதைப் பற்றி எப்பொழுதோ மறந்தவர்களாக இருந்தார்கள். அப்பா அம்மா இந்த பாச பந்தங்களை எப்பொழுதோ அறுத்து எறிந்த ஞானிகளாகக் காணப்பட்டார்கள்.

வேலைக்குப் போகவில்லை என்றால் 'வாங்கு வாங்கு' என்று அவர்கள் பெற்றோர்கள் அடிக்கும்

உதைகளை அடுத்த நிமிஷமே மறந்து விடுவதைப் பார்த்திருக்கிறேன்.

"ஏம்பா அவனை அடிக்கிறே?" என்று கேட்டு இருக்கிறேன்.

"மக்கார் பண்றான் சார்! எவ்வளவு கொடுத்தாலும் வாங்கிக்கிறான். வேலைக்கு மட்டும் போகமாட்டான் சார்"

என்னை 'சார்' என்ற போது என் மதிப்பு உயர்வு பெற்றதை எண்ணிப் பார்க்கிறேன். எனக்கு அவன் இந்தச் சமுதாயத்தில் கவுரவம் அளிக்கிறான் என்பதைத் தெரிந்து கொண்டேன். நான் வெள்ளைச்சட்டை அணிந்திருந்தேன். மரியாதைக்கு உரிய நடுத்தர வயதும் எனக்கு உயர்வைத் தந்திருக்க வேண்டும். எனக்கு இந்நேரம் கலியாணம் ஆகி இருந்தால் இரண்டு குழந்தைகளுக்குத் தகப்பனாக இருந்திருப்பேன் என்று என் அம்மா அடிக்கடி சொல்வாள். அவள் ஆசையை அதிலிருந்து தெரிந்து கொள்ள முடிகிறது.

ஒவ்வொரு தாய்க்கும் இந்த ஆசை இருக்கிறது. மணமானவுடன் இரண்டு குழந்தை இருக்கவேண்டும். அதன் எதிர்காலத்தைப் பற்றி அவர்கள் கவலைப்பட்ட தாகத் தெரியவில்லை, குழந்தை இல்லாத வீடு ஒரு குட்டிச் சுவர் என்று நினைக்கிறார்கள். மனைவி இல்லாத வீடு ஒரு வீடு அல்ல என்பது எனக்குத் தெரியும்; தெரிகிறது அம்மாவுக்கும் அதுதான் கவலை; "ஏன்டா கலியாணமே பண்ணிக் கொள்ளமாட்டாயா? என்று ஒருநாள் மனம் வெறுத்துக் கடைசிக் கேள்வியாகவும் கேட்டு விட்டாள். 'இல்லை' என்று சொல்லி இருப்பேன். என் அம்மாவை இழக்க நான் விரும்பவில்லை. அந்த ஒரு ஆசையால்தான் அவள் என்னோடு ஒட்டிக் கொண்டிருந்தாள். எனக்குத் தெரியும், 'இல்லை' என்று சொல்லிவிட்டால் அவள் என்னோடு இருக்க மாட்டாள். காலத்துக்கும் எனக்குச் சோறு வடித்துக் கொட்டுவதில் அவள் என்ன சுகம் காணப் போகிறாள்.

அவள் ஆசை எனக்குத் தெரியும். இந்த உலகத்திலே ஈர்ப்பு சக்தி என்ற ஒன்று இருக்கிறது என்றால் அது இந்த உறவுதான்; அவள் வயிற்றில் நான் ஒரு சுமையாக இருந்தேன். அவள் ஒரு நாளும் என்னைச் சுமையாகக் கருதி இருக்கமாட்டாள். அவள் என்னை வயிற்றில் தாங்கியவுடன் எவ்வளவு சந்தோஷம், அந்த முகப் பொலிவு என்னால் எப்படித் தெரிந்து கொள்ள முடியும். மற்ற தாய்மார்களைக் கண்டு என்னால் யூகித்துப் பார்த்து அறிய முடிகிறது, தாய்மை பெறும் பொழுதுதான் பெண்ணே அழகு பெறுகிறாள். என் தாயும் என்னை வயிற்றில் தாங்கிய போது அழகாகத்தான் இருந்திருப்பாள். அதற்கப்புறம் அந்த ஒரு சந்தோஷத்துக்காகவே வாழ்நாள் எல்லாம் போராடி இருக்கிறாள். நான் ஒருவன் இல்லை என்றால் அவள் இந்த உலகத்தில் வாழ்ந்திருப்பாள் என்று கூற முடியாது. வாழாமல் என்ன செய்ய முடியும். அது ஒரு வாழ்க்கை என்று கூற முடியாது. அவள் நிச்சயமாக அழகாய்த்தான் இருந்திருப்பாள். இளமை அவளுக்குத் தனிக் கவர்ச்சியைத் தந்திருக்கும்; பழி நிறையத் தொடர்ந்திருக்கும்.

அவள் மானத்தோடு வாழ்ந்தாள். அதை அடிக்கடிச் சொல்லிக் கொள்வதில் பெருமைப்படுவாள். அதாவது தன்னைப் போல மற்றவர்களும் நல்ல பெயரோடு வாழ வேண்டும் என்பது அவள் நினைப்பு. நீ ஒருவன் பிறக்க வில்லை என்றால் ஏதோ இப்படிப் பேசி அறுப்பாள். எல்லாமே அப்படித்தான். ஒரு சில தொடர்புகள் ஏற்பட்டு விட்டால் அவையே வாழ்வின் பிடிப்புகளாக அமைந்து விடுகின்றன. மகன் தாய் என்ற உறவு இயற்கை உண்டாக்கித் தரும் பிடிப்பு. அவள் என்னைப் பெறவில்லை என்றால் என்னைப் பொறுத்தவரை 'நான்' என்ற ஒரு சொல்லே எழவேண்டிய அவசியம் இருக்காது. இந்தக் கதைக்கே 'நான்'தான் தலைவனாக இயங்குகிறேன். இந்த 'நான்' இதுதான் என் கதை; ஒவ்வொருவரின் கதையும் இதுதான்;

'நான்' என்ற எண்ணத்தையே விட்டு ஒழிக்க வேண்டும் என்று சில வேதாந்திகள் சொல்லக் கேட்டிருக்கிறேன். அதை விடக் கூடிய நிலையில் நான் இல்லை. ந்ான் என்பதைச் சுற்றித்தான் இந்த உலகமே சுழல்கிறது. உலகம் எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் இந்த நான் என்பதும். இரண்டும் பிரிக்க முடியாத சொற்கள். இது தத்துவம் அல்ல; உண்மை.

அந்த 'நான்' என்பதற்கு மூல காரணமாக இருந்த என் அம்மாவைத் தாய் என்று சொல்லுவதற்கு எனக்கும் பிடிப்பது இல்லை. அம்மா என்றுதான் குழந்தையிலிருந்து அழைத்திருக்கிறேன். அந்தச் சொல்லை மாற்றிக் கொள்ள எனக்குப் பிடிக்கவில்லை. உங்களுக்காக நான் ஒரு சில சமயம் கைதவறித் தாய் என்று எழுதிவிடுகிறேன். ஆனால் என்னைப் பொறுத்தவரை அவள் அம்மா தான் அம்மா தான் வேறு சொல்லத் தெரியாது.

அவளுக்கு நான் கலியாணம் ஆனவனாக ஆக வேண்டும் அதுதான் ஆசை; லட்சியம்; உயிர்; எண்ணம்; செயல்; எல்லாம். எனக்கு இல்லாத ஆசை அவளுக்கு ஏன்? சில சமயம் குழந்தைகள் விளையாடுவதைப் பார்க்கிறேன். அவர்கள் எப்பொழுதும் சந்தோஷமாக இருக்கிறார்கள்! பக்கத்து வீடுதான். பெரிய பெண் கொஞ்சம் மக்கு என்று தான் கூறமுடியும். உடம்பு கொஞ்சம் பருத்து இருக்கும். மூன்றாவதும் பெண்தான். அவருக்கு நம்பிக்கை எப்படியும் ஆண் குழந்தை ஒன்று பிறக்காமல் போகாது என்று. மூன்றுக்குமேல் வேண்டாம் என்ற விளம்பரம் அவரைக் கவர்வதாக இல்லை. ஓர் ஆண சந்ததி வேண்டும் என்ற ஒரே ஆசை. தொடர்ந்து தவறுகள் செய்தார். ஐந்தும் பெண்கள் எனக்கு அந்தக் குழந்தைகள் விளையாடுவது மகிழ்ச்சியை உண்டாக்கும்.

என்வீடு தனி வீடுதான். யாரும் இல்லை. என் அம்மாவும் நானும் தான். ஒரு மூலையில் ஒரு

மேசையொன்று இருக்கும். என் ஊதாரித் தனத்திற்கேற்ப எல்லாம் அதிக விலை கொடுத்தே வாங்கி வந்தேன். வருகிறவர்கள் என்னைப் பற்றி விசாரிப்பதை விட என் மேசையையும், நாற்காலியையும் விசாரித்துக் கொண்டிருந் தார்கள். என் வீட்டுப் பொருள் அனைத்துமே விசாரணைக்குள் ஆயின. தயவு செய்து நீங்கள் தவறாகக் கருத வேண்டாம். எல்லாம் அதிக விலை கொடுத்து வாங்கியது. அதனால் அவை விசாரணைக்குள் ஆயின.

பொதுவாகக் கல்யாணமாகாதவர்கள் எப்படி அலங் கோலமாக அறையை வைத்துக் கொள்வார்களோ அதில் பாதி என்னிடம் பார்க்கமுடியும். இந்த உலகத்தில் மறக்க ஏதாவது வேண்டும் என்றால் அது என்னைப் பொருத்த வரையிலும் புத்தகங்கள் தாம்.

என் மேசை மேல் எப்பொழுதும் ஏதாவது புத்தகம் இருக்கும். அதுகூட ஒரு கெட்ட பழக்கம் என்று நினைக்கிறேன். சிகரெட்டு குடிப்பவர்கள் தொடர்ந்து சங்கிலி போலப் பிடிப்பதைப் பார்த்திருக்கிறேன். அதே போலத் தொடர்ந்து நான் எதையாவது படித்துக்கொண்டு இருப்பது பழக்கமாகிவிட்டது. ஒருசில ஆபீஸ் கடிதங்கள் மேசைமேல் சிதறிக் கிடக்கும். யாராவது எழுத்தாளர்கள் வந்து பார்த்தால், இதைத்தான் நினைப்பார்கள். காதல் கடிதம் எழுதித் தீர்ந்துவிட்ட நிலையில் பேனாவில் 'மை' இல்லாமல் அசந்து உட்கார்ந்து இருப்பதாக நினைப்பார்கள். என்னையும் அறியாமல் என் முகத்தில் வெறிச்சென்ற நிலைமை காணப்பட்டது. என்னைப் பார்த்தால் அவர்கள் கற்பனை அப்படித்தான் நினைக்கும். தனிமை என்பது எவ்வளவு கொடுமை என்பது எனக்குத் தான் தெரியும்.

வாலிபன் என்றால் உடனே காதல். இது எழுத்தாளனின் கற்பனை. எழுத்தாளர்கள் யாரும் என் வீடு

தேடி வருவதில்லை. அவர்கள் எழுத்து மட்டும் வரும். பத்திரிகை வடிவில்; நூல்வடிவில். எப்பொழுதும் ஏதாவது தமிழ் நாவல் வாங்கிவந்து வைப்பேன். நாவல் ஓசியில் படிப்பது எனக்குப் பிடிப்பதில்லை. அதே சமயத்தில் அது பலருக்கு ஓசியில் கொடுப்பதற்கு அதை ஒரு வாய்ப்பாகப் பயன்படுத்திக் கொள்வேன். நான் படித்தால் மட்டும் போதாது. மற்றவர்களும் படிக்கவேண்டும் என்ற ஆசை என்னைப் பிடித்துத் தள்ளும். அது நல்ல நாவலாக இருந்தால் "இது படித்துப் பாரு" என்று வலிய அவர்களுக்குக் கொடுப்பேன் அந்த நாவல்கள் திரும்பி வராது. அதுவும் நல்லதுதானே. இல்லாவிட்டால் இந்த ஆராய்ச்சியாளர்கள் ஒருசிலருடைய வீட்டில் உள்ள புத்தகங்களைப் போல என் வீட்டிலும் குப்பை சேர்ந்துவிடும். நாவலில் இது ஒரு பெரிய நன்மை. அநாவசியமாக நம்மிடம் தங்கி இடத்தை அடைக்காது. அம்மா மட்டும் திட்டிக் கொண்டே இருப்பாள். இந்த நாவல் கதைகளை ஏன் வாங்குகிறாய்? என்று கேட்பாள்.

"இனிமேல் இராமாயணத்தை வாங்குகிறேன்" என்பேன்.

"பெரிய பெரிய நீதிபதிகளெல்லாம் விரும்பிப் படிக்கிறார்கள். நீ என்னடா சுண்டைக்காய்" என்பாள்.

'நான் ஒரு சுண்டைக்காய்தான்'. அப்பொழுது நினைப்பதுண்டு. நாமென்ன இந்த உலகத்திலே சாதித்து விடப் போகிறோம். இப்படிச் சலிப்பு வருவதுண்டு. ஏதாவது நாவல் படிப்பேன். எதற்கு? மன ஆறுதலுக்கல்ல. அதுக்கு அம்மா சொல்கிற இராமாயணமே போதும். புதிய சிந்தனைகளைப் பெற நாவல் கட்டாயம் படிக்கவேண்டு மென்பது என் முடிவு.

எனக்குப் பிரச்சார நாவல்கள் பிடிப்பதே இல்லை. அதே போல வெறும் கற்பனை அளப்புகளும் என்னால்

ஏற்றுக்கொள்ள முடியவில்லை. வாழ்க்கையைப் பற்றி விளக்குவதாக இருக்கவேண்டும். என்ன வாழ்க்கை. என்னமோ எழுதுகிறார்கள். நானும் படிக்கிறேன். படிக்காமல் என்ன செய்வது. ஒன்று படிக்க வேண்டும். இல்லாவிட்டால் எழுதவேண்டும். இரண்டாவது எனக்குத் தெரியாது. முதலாவது தான் என்னால் செய்ய முடியும்.

எனக்கு அப்படி ஒன்றும் எழுத்தாளனாக ஆக வேண்டும் என்ற ஆசையும் இல்லை. நன்றாக எழுதுகிற வர்கள் எழுதவேண்டும். நாமெல்லாம் படித்தால் போதும். நாம் புகுந்து எழுதி எழுத்தைக் கெடுக்கக்கூடாது என்று நினைப்பவர்களுள் நானும் ஒருவன்.

இந்த எழுத்தாளர்களுக்கு என்னைப் பார்த்தால் நான் எழுத்தாளன் அல்ல என்பதைக் கண்டு கொள்வார்கள்; இவன் 'ஒரு காதல் பைத்தியம்' என்று தப்புக் கணக்குப் போடுவார்கள் அவர்களைப் போலவே நானும் சூழ்நிலையை மறந்து வாழ்வதால்.

## 2

எங்கேயோ தொடங்கினேன். தொடங்கியதை என்னால் முடிக்கவில்லை. தொடர்கதை படிப்பதனால் வந்த பழக்கம் அது என்று நினைக்கிறேன். அந்தத் தியேட்டருக்குப் போனேன். பழைய தியேட்டர்; புதிய படம். இது ஆச்சரியமாகத்தான் இருக்கும். புதிய படங்களெல்லாம் பழைய தியேட்டருக்கு மிக வேகமாக வந்து சேர்ந்து விடுகின்றன. பழைய படங்கள் புதிய தியேட்டருக்குள் சர்வ சாதாரணமாகப் புகுந்து விடுகின்றன. படவுலகில் இது ஒரு பெரிய புரட்சி.

'புரட்சி' மிகப் பழைய சொல்; பழகிப்போன அர்த்த மில்லாத சொல், இன்னும் இப்படித்தான் சொல்லிக்

கொண்டிருப்பார்கள். உண்மையான புரட்சியைப்பற்றி அறிகிறவரை, சின்னச் சின்ன விஷயங்களை எல்லாம் 'புரட்சி' 'புரட்சி' என்று சொல்வது சகஜமாகி விட்டது. ஒருவன் ஒருத்தியைக் காதலித்துக் கலியாணம் செய்து கொள்வான். அவன் உடனே தன் வாழ்க்கையில் பெரிய புரட்சி செய்து விட்டதாகக் கூறுவான், சாதியை விட்டு மற்றொரு சாதிப் பெண்ணை மணந்துகொள்வான். அதுவே அவன் அன்றாடப் பேச்சாக இருக்கும், தன்னைப் போலப் புரட்சி, யாருமே செய்ய முடியாது என்று கூறுவான். தமிழிலே கையெழுத்துப் போடுவான், இது பெரிய புரட்சி என்று கூறுவான். இதெல்லாம் வாழ்க்கையில் ஒருவன் மேற்கொள்ள வேண்டிய சாதாரண நிகழ்ச்சிகள். இதைப் புரட்சி என்றால் எது புரட்சி என்பதற்கே அர்த்தமில்லாமல் போய்விடுகிறது என்பதுதான் என் அபிப்பிராயம். ஒரு சொல்லை அடிக்கடி பயன்படுத்துவதால் அது தன் பொருளை இழந்து விடுகிறது என்பதுதான் இந்தச் சொல் எனக்குக் கற்றுக் கொடுக்கும் பாடம். 'காதல்' இதுவும் அழகான சொல். இந்தச் சொல்லை அடிக்கடி நான் இப்பொழுது பயன்படுத்திக் கொண்டு வருகிறேன். அது ஒரு 'பருவம்' என்று நினைக்கிறேன். பருவத்துக்கேற்பச் சொற்கள் வரும் என்று நினைக்கிறேன். ஒரு சிலர் இதே இந்தப் பருவத்திலேயே 'பத்தி' 'முத்தி' என்று பேசுவதும் வியப்பாக இருக்கிறது. என்னமோ இந்த இரண்டு சொற்கள் என்னைப் பிடித்து ஆட்டிக் கொண்டு இருந்தன. 'புரட்சி' நான் என்ன செய்யப் போகிறேன். ஏதாவது தவறு செய்து விட்டு உடனே அது புரட்சி என்று சொல்லிவிடுவேன் என்று நினைக்கிறேன். மலையாளப் படங்கள் பல வெளி வந்து கொண்டு இருந்தன. அதைத் தமிழ் மக்கள் பாராட்டினார்கள். அது ஏன் என்று தெரியவில்லை. பட வுலகில் ஒரு மாற்றம் என்று நினைக்கிறேன். நான் யாரைக் காதலிக்கப் போகிறேன்.

அவன் ஒரு 'கட்டைப் பிரம்மச்சாரி' என்று ஆபிஸில் என்னைப் பற்றிப் பேசுவார்கள். பிரம்மச்சாரி என்றால் தெரிகிறது. 'கட்டை' என்று சொல்வதில் அர்த்தமே தெரிவதில்லை. உணர்ச்சியற்றவன் என்பது தானே அர்த்தம்; அப்பொழுதெல்லாம் நான் கதர் போட்டிருப்பேன். ஜிப்பா தான் தைத்துப் போட்டிருப்பேன். கதர், காந்தி, பிரம்மசரியம் இதெல்லாம் ஒன்றோடொன்று தொடர்பு பெற்றிருக்கிறது என்று நினைக்கிறேன். 'பிரம்மச்சரியம் காப்பது எப்படி' இந்த மாதிரி பைத்தியக்கார விஷயங்களில் மண்டையைக் குழப்பிக் கொண்டிருந்த காலமும் உண்டு. நேரு தொப்பி போட்டிருப்பதைப் படத்தில் பார்த்திருக்கிறேன். அரசியலுக்கும் தொப்பிக்கும் நிறைய தொடர்பு இருந்ததென்று நினைக்கிறேன். நானும் ஏன் போடக் கூடாது. சே. வடநாட்டுக்காரனாகி விடுவேன். அது எனக்கு ஒத்துக் கொள்ளவில்லை. ஒரு நாள் கதர்க் குல்லாயும் துணிந்து போட்டுக் கொண்டு ஆபீசுக்குப் போனேன். எல்லாரும் என்னையே கவனித்தார்கள். சென்னைக்கு வரும் கவர்னர்கள் இப்படித்தான் வருகிறார்களென்று நினைக்கிறேன். உண்மையிலேயே பெரிய மனிதன் ஆக ஏதாவது இப்படிச் செய்வது அவசியம் என்று எனக்குப் பட்டது. ஆனால் அந்தத் தொப்பி போட்டுக் கொண்ட போது என்னால் சிரிக்க முடியவில்லை. மற்றவர்கள் தான் சிரித்தார்கள். இதை நினைத்துப் பார்க்கும்போது இப்போதும் எனக்குச் சிரிப்புத்தான் தோன்றுகிறது.

இதுவே காந்தி காலத்தில் நான் இப்படிப் போயிருந்தால் யாராவது என்னைப் பார்த்துச் சிரிப்பார்களா? அப்போது அதற்குத் தனி அர்த்தம். சிறை செல்லத் தயார் என்று அர்த்தம்; தேசபக்தன் என்று அர்த்தம். 'தியாகபூமி' படம் பார்த்தேன். பழையபடம் அப்படி ஒன்றும் பிரமாதம் இல்லை. அதிலே 'உமா ராணியைக்' கல்யாணம் பண்ணிக் கொண்டானே அந்த ஹிரோ, அவன்தான் நினைவிற்கு

வருகிறான். ஸ்ரீதர் பி.ஏ. முதலில் சூட்டும் கோட்டும் போட்டிருந்தான். பின்னால் மனம் மாறிவிடுகிறான். அவனும் தியாக பூமியிலே அடியெடுத்து வைக்கிறான். 'காந்திக்கு ஜே' என்று கத்துகிறான். லாரியிலே ஏற்றிக் கொண்டு போகிறார்கள். அவன் ஜிப்பாதான் போட்டுக் கொண்டு இருந்தான். அதுக்கப்புறம் அந்த ஜிப்பா எனக்கு ரொம்ப பிடித்திருந்தது. அதைப் போன்ற வாய்ப்பு எனக்கு ஏற்படவில்லை. ஏற்பட்டாலும் எனக்கு ஒரு 'உமா' கிடைக்க வேண்டுமே! அதுக்கு நான் ஓர் அக்கிரகாரத்தைத்தான் தேடிப் போக வேண்டும். அக்கிரகாரமெல்லாம் எப்பவோ மாறிவிட்டது. ஆனால் அதைத் தெரிவிக்கும் பெயர்ப்பலகை மட்டும் அத்தெருக்களில் ஒட்டிக்கொண்டு தன் பழைய வரலாற்றைச் சொல்லிக் கொண்டிருக்கிறது. அங்கே அதிகாரிகள் தாம் இப்போது குடி இருக்கிறார்கள். ஏன் அதிகாரிகள் தெரு என்று பெயர் வைத்தால் பொருத்தமாத்தான் இருக்கும் என்று நினைக்கிறேன். சமுதாயத்தின் வளர்ச்சி, உயர்வு எல்லாம் அங்கேதான் இப்பொழுது குடிகொண்டு இருக்கிறது. பட்டிக்காட்டுப் பெண் உமா அங்கே எங்கே கிடைக்கப் போகிறாள்.

'பட்டிக்காட்டுப் பெண்' ஏதாவது கட்டிக் கொண்டால் நல்லது என்று எப்பொழுதாவது நினைப்பேன். நினைக்கிறதும் உண்டு. ஏன் கட்டிக் கொள்ளக்கூடாது. காடு மேடுகளில் சுற்றித் திரிந்த அந்த மேனி கடுவெய்யிலைக் கண்டிருக்கும். கனத்த மழையைப் பார்த்திருக்கும். படிப்பு வாசனையே இருக்கக் கூடாதென்று நினைப்பதுண்டு. அவள் இதழ்கள் சிவந்திருக்கும். கன்னம் கனத்து இருக்கும். தலை மயிர் சுருண்டு அடங்காமல் இருக்கும். மென்மை அவளிடம் இருக்காது; ஆனால் நல்ல தன்மை குடிகொண்டிருக்கும். பரந்த உலகம் அவளுக்குத் தெரியாது.

அது ஒரு தனி அழகுதான்; பெண்ணுக்கு நிறைய தெரியக்கூடாது; ஆனால் தெரியாமலே போகக் கூடாது. மெல்ல மெல்ல எல்லாம் தெரிந்துகொள்ளவேண்டும்.

அம்மா அதுக்கு ஒப்புக்கொள்ளவே இல்லை. பட்டிக் காடு பட்டணத்திற்கு வந்தால் அவள் இரண்டும் கெட்ட நிலையை அடைந்து விடுகிறாள் என்று அம்மா யாரையோ மனத்தில் வைத்துக்கொண்டு சொல்வாள். நானும் நினைப் பேனே தவிர தைரியமாக முடிவெடுக்கவில்லை. அதுவும் நல்லதுதான். எனக்கு இப்பொழுது அழகு எல்லாம் அவ்வளவாகப் பிடிப்பதே இல்லை. 'அன்பு' என்பது எங்கே இருக்கிறது என்று தேடிக் காண முயல்வது உண்டு.

விஷயத்துக்கு வராமல் எங்கெங்கோ சுற்றிக்கொண்டு இருக்கிறேன். அது இப்போ எல்லாம் பழகிவிட்டது. என்ன செய்வதென்று தெரியவில்லை. இதைப் போலப் பல நாட்களைக் கழித்துவிட்டேன். எதையும் பளிச்சென்று பேசவும் முடிவதில்லை. அந்தப் பழக்கம் எனக்கு இயல்பாகி விட்டது.

அம்மாவுக்கு எனக்குக் கல்யாணமாகி அவள் ஒரு பாட்டியாக ஆகவேண்டும். நான் நினைத்தது உண்டு. பெண்கள் பாட்டியாக விரும்புவதில்லை என்று. அவர்கள் வயதையே சரியாகச் சொல்ல மாட்டார்கள் என்ற நகைச் சுவைத் துணுக்குகளைப் படித்து இருக்கிறேன். அவர்கள் என்றும் இளமையாகவே இருக்க 'மேக்கப்' செய்து கொள்கிறார்கள் என்று நினைத்ததுண்டு. அம்மாவைப் பார்த்த பிறகு அந்த எண்ணத்தை மாற்றிக்கொண்டேன். அவர்களும் பாட்டியாக விரும்புவதைத் தெரிந்துகொள்ள முடிந்தது. அழகாக 'மேக்கப்' செய்து கொள்கிற பெண்களைப் பார்க்க விரும்புவதைவிட இயற்கை வனப்புதான் என்னைக் கவர்வதுண்டு.

அந்த இயற்கைவனப்பு ஏழ்மையின் வடிவில் உருவெடுத்து வருமென்று நான் எதிர்பார்த்ததே இல்லை.

அவள் அன்று என் வீட்டின் முன்னால் நின்றாள். கட்டான உடல்; திட்டமிட்ட அழகு; வனப்பைக் காட்டும் முகம்; மாசுபடிந்த மயிர்முடி. அது அவள் வறுமையின் சின்னம். கந்தல் புடவை; அது அவள் உடம்பை வெளிப்படுத்திக் காட்ட உதவியது. கழுத்தில் இல்லாத தாலி அவள் விதவை என்பதை எடுத்துக்காட்டியது. அந்த இடம் வாழ்ந்து கெட்ட நினைவை எழுப்பியது. நான் முதலில் அவளை விதவையென்று நினைக்கவே இல்லை, யாரும் அப்படி நம்ப மாட்டார்கள். பொதுவாக விதவைகள் முகத்தில் பொலிவை இழக்கிறார்கள். ஏன் அது தெரியவில்லை. மகிழ்ச்சி இல்லாததால் தான். திடீரென்று எனக்கு ஓர் எண்ணம் உண்டாயிற்று. அந்த மகிழ்ச்சியை நான் ஏன் கொடுக்கக்கூடாது. ஏதோ முன்னால் ஊறிக் கொண்டிருந்தேனே அந்தப் புரட்சி உள்ளம் என்று நினைக்கிறேன் இந்தப் புதிய எண்ணத்தை உண்டாக்கியது.

அவள் அழகாக இருந்தாள் என்பதை விட, கவர்ச்சி யாக இருந்தாள் என்று தான் கூற முடியும். சிலரைப் பார்க்கும் போது இதைப் போன்ற எண்ணம் உண்டாகிறது. அதில் அவளும் ஒருத்தியாகப்பட்டாள் என்று தான் சொல்ல முடியும். பின்னால் தான் தெரிந்தது அவள் இரண்டு குழந்தைகளுக்குத் தாய் என்று. அவளை வெறும் விதவை என்றுதான் நினைத்தேன். ஆரம்பத்தில் இந்த முயற்சி என்னைக் கவரவில்லை.

நான் நினைத்தேன் அவள் ஒரு விதவை அதோடு வறுமை; நிச்சயமாக அவள் ஒரு குடிசை வீட்டில்தான் இருப்பாள், எப்படியோ ஒன்றிரண்டு குழந்தைகள் இருக்கலாம். அதற்குமேல் இருக்க வாய்ப்பில்லை. அப்படி யிருந்தால் நிச்சயமாக எனக்கு அவள் மீது கவர்ச்சி உண்டாகி இருக்காது, அதை வைத்துக் கொண்டுதான் இப்படிச் சொல்கிறேன். இரண்டு குழந்தைகள் இருக்கக் கூடிய வயதாகப்படவில்லை. அவளுக்குக் குழந்தைகள்

இருக்கக் கூடாது என்று நினைத்துக் கொண்டேன். அவளுக்கு உற்ற கணவனாக நான் ஏன் இருக்கக்கூடாது. அந்த வறுமை என்னால்தான் நீங்கட்டுமே. இந்தப் பெருமை எனக்குத்தான் கிடைக்கட்டுமே. அவளுக்குக் குழந்தை இருந்தால் இருக்கட்டுமே.

'ஓடி விளையாடு பாப்பா—நீ
ஓய்ந்திருக்க லாகாது பாப்பா'

என்று சொல்லிக் கொடுப்பது அவ்வளவு கஷ்டமா என்ன.

எனக்கு எப்படி ஒரு பெண்ணிடம் பழகுவது என்பதே தெரியாது. வயது ஆகிவிட்டது அம்மா அப்படிப் பல முறையும் சொல்கிறாள். இந்தச் சின்னவிஷயம் கூடத் தெரியவில்லை, அவளை எப்படி அணுகுவது. அவள் ஏதோ காசுகேட்க வந்திருக்கிறாள் என்று மட்டும் தெரிந்தது. அவள் என்ன எதிர்பார்க்கிறாள். பத்துக்காசு இதைத்தான் பலர் கொடுப்பதைப் பார்த்திருக்கிறேன். இந்தப் பிச்சைக் காரப் புத்திதான் பலரிடம் பார்த்திருக்கிறேன். ஏன் அவளிடம் பத்துரூபாய் தரக்கூடாது.

அம்மா வீட்டில் உள்புறத்தில் இருந்தாள். துணிந்து பத்துரூபாய் நீட்டினேன். அவள் வாங்கிக்கொண்டாள். ஆபிஸில் சிலர் இப்படி நீட்டுவது வழக்கமெனக் கேட்டிருக் கிறேன். எனக்கு நிரம்ப சந்தோஷம். வெற்றி என்று நினைத்தேன். நீ எங்கே இருப்பது என்று துணிந்து கேட்டேன்.

அவள் என்னை ஒருமுறை முறைத்துப் பார்த்தாள். உண்மையில் நடுங்கி விட்டேன். இது என் முதல் அனுபவமென்று நினைக்கிறேன். அந்தப் பத்து ரூபாயைச் சுக்கு நூறாகக் கிழித்துப் போட்டாள். பத்து எப்படி நூறாகிறது என்பதை அப்போது தெரிந்து கொண்டேன். தெருவிலே கோலம் போட்டிருப்பதைப் போல அது அலங்கோலமாகச் சிதறிக்கிடந்தது.

"நல்ல நோட்டுத்தான்" என்றேன்.

"நான் அதைக்கேட்டுப் பெறவில்லையே" என்றாள்.

"பிச்சை"

"அப்படித் தவறாக நினைத்துவிட்டீர்கள். உங்கள் வீட்டில் ஒருவேலை கிடைக்குமா என்று கேட்கத்தான் வந்தேன்" என்றாள். அவள் எங்கள் வீட்டில் நுழைய வந்த வேலைக்காரி என்பதை உணர்ந்தேன். அதற்குமேல் அம்மா வந்தாள்.

"யார்" என்றாள்.

'பணத்தை மதிக்காத ஏழை' என்று சொல்ல வாயெடுத்தேன், சொல்லத் தைரியம் வரவில்லை நான் வெளிப்பட்டு விடுவேன் என்பதால்.

"வேலை வேண்டும்" என்றாள் அவள்.

அம்மா அவளைக் கண்டு கொஞ்சம் அச்சம் கொண்டாள் எனத் தெரிந்தது. என்னை வைத்துக் கொண்டு அவளை ஏற்றுக் கொள்ள விரும்பவில்லை.

"கொஞ்சம் வயசானவர்களைத்தான் கேட்டு அனுப்பினேன்" என்றாள்.

அம்மா சொல்லித்தான் வந்தாள் என்பதைத் தெரிந்து கொண்டேன்.

"எனக்கு இரண்டு குழந்தைகள் இருக்கின்றன" என்றாள். அப்பொழுதுதான் அவள் குழந்தைக்காரி என்று தெரிந்துகொண்டேன், நான் நினைத்தது தவறு. அவள் பிச்சைக்காரியல்ல, குழந்தைக்காரி. அவள் வேலைக் காரியாக வந்திருக்கிறாள். அவள் ஏன் வீட்டுக்காரியாக ஆகக் கூடாது.

"அவள் வந்த காரியம் வெற்றி பெறவில்லை". அவள் திரும்பிவிட்டாள். போகிற வரையும் அவளைப் பார்த்துக்

கொண்டிருந்தேன். அம்மா அவள் போகவேண்டும் என்பதற்காகவே 'விறு விறு' என்று உள்ள போய் விட்டாள்.

அவள் என் கற்பனையை எப்படியோ புரிந்து கொண்டாள் என்று நினைக்கிறேன். அவள் தன் அடி மனத்தில் ஒரு தாய்; மேல் நோக்கில் ஒரு பெண்; அவள் பெண்மை எனக்குத் தெரிந்தது. அவள் தாய்மை எனக்குப் புலப்படவில்லை.

வேலைக்காரியாக வந்த அவளைப் பிச்சைக்காரியாக மாறி நினைத்தேன். அவள் இளமையானவள். அதனால் தான் அம்மா ஏற்றுக்கொள்ளவில்லை. அவள் பிச்சைக்காரி ஆகக் கூடாது. நிச்சயம் ஆகக் கூடாது. அவளைத் தேடினேன், அவளை பஸ் நிலையத்தில் தேடினேன். அவளைப் பற்றிப் பயங்கரமான நினைவுகள் உண்டாயின. வறுமை அந்தச் சித்திரத்தை நிச்சயமாக அழித்துவிடும். அவள் அங்கே நின்று கொண்டிருந்தாள். அந்தக் குழந்தை களுக்கு ஏதோ தின்பண்டம் வாங்கித் தருவதைப் பார்த்தேன். பக்கத்தில் ஓவியர் ஒருவர் படம் வரைந்து கொண்டிருந்தார். அவர் ஆதரவில்தான் அவள் இருக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டேன், அவளிடம் துணிந்து பேச எனக்குத் தைரியம் கிடையாது. அவளிடம் என்ன பேசுவது, எனக்கே என்ன பேசுவது என்று தெரிய வில்லை. அம்மா அவளை வேலைக்காரியாகவே ஏற்க வில்லை. அவள் எப்படி மருமகள் என்ற இடத்தைப் பிடிக்க முடியும். அந்த ஓவியர் சாக்குத்துண்டில் அழகிய ஓவியங்களை வரைந்து கொண்டு இருந்தார்.

சிலர் நடுச்சந்தியில் பாட்டுப் பாடுவதைக் கேட்டிருக் கிறேன். அதைச் சுற்றித் திரளாக நின்று கொண்டிருப் பார்கள். அதை ரசிப்பார்கள். அவருக்குக் காசு போடுவார்கள். சங்கீதம் நடுத்தெருவுக்கு வருவதைப் போல இந்த ஓவியரும் நடுத்தெருவுக்கு வந்துவிட்டாரோ என்று எண்ணத் தொடங்கினேன்.

“நீங்கள் சின்ன வயசில்”

“டிராயிங் மாஸ்டர்” என்றார்.

அதுதான் நடுத் தெருவுக்கு வந்துவிட்டார். அதிக மாகப் பழகவில்லை என்று தெரிந்துகொண்டேன்.

“நான் இரண்டு தலைமுறைகளைப் பார்த்திருக் கிறேன்” என்றார். அதாவது இரண்டு ஆட்சிகளைப் பார்த்து இருக்கிறார் என்பது அதன் அர்த்தம் என்பதை அறிந்து கொண்டேன். இது கௌரவமான பிச்சை தான் என்று எண்ணத் தொடங்கினேன். அந்த எண்ணத்திற்கே இடமில்லாமல் போய்விட்டது. அவர் யாரையும் காசு கேட்கவில்லை வெறும் படத்தை மட்டும் போட்டார்.

நான் அவசரப்பட்டு விட்டேன். பத்து ரூபாய்ப் பழக்கம் என்னை விட்டு நீங்கவில்லை. ஒரு புதிய பத்து ரூபாய் நோட்டை அவரிடம் தந்தேன். “நீங்கள் கோயம்புத்தூரா” என்று அவர் கேட்டார். இது இப்பொழுது பேச்சு வழக்கில் புகுந்த உருவகம் என்பதைத் தெரிந்து கொண்டேன். எனக்கு முதலில் விளங்கவில்லை. பிறகு விளங்கியது. நான் சரியான முறையில் சம்பாதிக்காத பணம் என்பது அவர் குறிப்பு.

“உங்களுக்குத் திருமணம் ஆகிவிட்டதா”

பொதுவாக மணமாகிவிட்டால் பணத்தைக் கட்டிப் பிடிப்பார்கள் என்பது அவரது கருத்து என்று நினைக்கிறேன்.

“இல்லை”—இந்தச் சொல் ‘அவள்’ காதிலும் பட்டது. அவள் அதை வாங்கிக் கொண்டதாகத் தெரியவில்லை.

“நான் பணம் வாங்குவதில்லை” என்றார்.

“பின் ஏன் நீங்கள் படம் வரைகின்றீர்கள்”

“இது எனக்குப் பொழுது போக்கு”

"தினந்தோறும் சாமி படத்தையே போடுகிறீர்களே ஏன் அரசியல் தலைவர்கள் படம்"

"கலையில் அரசியல் கலக்கக்கூடாது" என்றார். எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

"தலைவர்களின் படம்"

"மறைந்த தலைவர்களைத்தான் போடுவேன்."

"இருப்பவர்கள்".

"அவர்களுக்கு நான் விளம்பரம் தரத் தேவை இல்லை."

"நடிகர் படம்"

"அவர்தான் அமைச்சராகி விட்டாரே"

நான் பொதுவாக நடிகரென்று சொன்னேன், இந்த பதிலை எதிர்பார்க்கவில்லை.

"அதனால் என்ன?"

"தேவையில்லை. அதுதான் தினம் பத்திரிகையில் வருகிறதே."

கலையில் உண்மை மனிதர்களை இழுக்கக்கூடாது என்றார். மேலும் சொன்னார். வாழ்க்கையைத் தீட்டலாம் மனிதர்களை இழுக்கக் கூடாதென்றார். இது நாவலுக்கு விளக்கம் சொல்வது போல இருந்தது.

"நீங்கள் கதை எழுதியிருக்கிறீர்களா?"

"கதை உருவாக்கி இருக்கிறேன்" என்றார். அதற்கு அர்த்தம் தெரியவில்லை.

"கதா பாத்திரம்"

"அவள் ஒரு விதவை; அவளுக்கு இரண்டு குழந்தைகள். அவள் நடுத்தெருவில் விடப்பட்டாள்; திக்கற்றவர்களுக்குத் தெய்வம் துணை. அந்த நிலையில் ஒரு

ஓவியர் உதவினார். அவருடைய குடிசையில் அந்தத் தாய்க்கு இடம் கிடைத்தது. அந்தத் தாய் எங்கெங்கோ வேலை தேடினாள். எங்கும் கிடைக்கவில்லை. அவள் அந்த ஓவியர் வீட்டில் இருக்கிறாள்" என்று சொன்னார்.

ஏன் அவர் அந்தக் கதையை என்னிடம் சொல்ல வேண்டும். அம்மா அவளுக்கு வேலை கொடுக்கவில்லை என்பதைச் சுட்டிக்காட்டவே என்று நினைக்கிறேன்.

நான் பேச்சை மாற்ற விரும்பினேன். அவர் தொடர்ந்து பேசினார்.

"நான் ஓவியத்தில் வெற்றி பெற்றவன் என்று கூற முடியாது. கலைக்குக் கற்பனை அவசியம். எனக்கு அது இல்லை. பெரிய வித்வான்களைப் பார்த்திருக்கிறாயா? அவர்கள் கதா காலட்சேபப் பிரசங்கங்கள் செய்வார்கள். பிரமாதமாகப் பேசுவார்கள். அவர்கள் என்ன சொல்கிறார்கள், மற்றவர்கள் எழுதி வைத்ததை அப்படியே கிளிப்பிள்ளை போல ஒப்புவிக்கின்றார்கள். அந்த நிலை தான் என்னுடையது" என்று கூறினார்.

எனக்கு ஆச்சரியமாக இருந்தது. உண்மையை ஒப்புக் கொண்டாரே என்பதற்காக, அப்போதுதான் 'டிராயிங் மாஸ்டர்' வேறு, 'ஓவியர்' வேறு என்பதைத் தெரிந்து கொண்டேன்.

"பின் ஏன் இந்தப் படங்களை எழுதுகிறீர்கள்?"

"அவர்கள் ஏன் கதாகாலட்சேபங்கள் செய்கிறார்கள்" என்று கேட்டார்.

"மக்களுக்கு தெய்வ பக்தி உண்டாகும். தெய்வபக்தி இருந்தால் நல்லதை எண்ணுவார்கள்" என்று எனக்குத் தெரிந்த விளக்கத்தைச் சொன்னேன்.

"அந்த பக்தியைத் தான் என் படங்கள் உண்டு பண்ணுகின்றன. யாரும் என் ஓவியத்தை உற்றுகூடப்

பார்ப்பதில்லை. சுவாமி படம் என்று பக்தி செலுத்துவார்கள் அவ்வளவுதான்'' என்றார்.

''அதை இங்கே ஏன் போட்டுக் கொண்டிருக் கிறீர்கள்.''

''இதுவரை யோசிக்கவில்லை. இனிமேல்தான் யோசித்துச் சொல்லவேண்டும்'' என்றார்.

"சிலருக்குச் சின்ன வயசு முதல் ஒரு தொழில் பழகி விட்டால் அதை விடமுடிவதில்லை. அதை யாராவது பார்க்கவேண்டும் என்று ஆசை'' என்றார்.

அர்த்தமில்லாத கதைகள் பலர் எழுதுவதேன் என்பது அப்போது விளங்கியது. ஏதாவது எழுத வேண்டும், அவ்வளவுதான்.

அங்கே பக்கத்தில் பத்திரிகை விற்பவன் பத்திரி கையை விரித்து வைத்திருந்தான். "ஊழல் விசாரணைகள்'' என்று கொட்டையாகப் போட்டு இருந்தது.

இது எனக்குக் கேட்டுக் கேட்டு மறுத்து விட்டது. அதை அவர் எனக்குக் காட்டினார்.

''மனிதன் கடவுளை மறந்து விட்டான். அதை நினைவு படுத்துவதற்குத்தான்'' என்றார்.

"அதுக்கு இந்த இடம்தான் கிடைத்ததா?''

"ஆபீஸர்கள் இங்கேதான் பஸ் ஏறுகிறார்கள். இதைக் கவனித்து நினைத்துப் பார்ப்பதற்கு இங்கேதான் அவர் களுக்கு ஓய்வு கிடைக்கிறது'' என்றார்.

எனக்குப் பல விஷயங்கள் விளங்கிவிட்டன.

"உங்களுக்கு இப்போ வருவாய்?''

"பென்ஷன் வாங்குகிறேன்''

"போதுமா''

"அப்படி நினைத்துத்தான் அரசாங்கம் இந்த பென்ஷனைக் கொடுக்கிறது. இதுவரை போதும். இந்தப் பெண் வந்த பிறகு போதாது. இவர்களைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பை ஏற்றுக் கொண்டேன்."

"அவள் உன் சொந்தக் காரியா?"

"நீ தமிழ் படித்திருக்கிறாயா?"

தமிழென்றால் பழைய இலக்கியம் என்பது அவர் கருத்து.

"இல்லை" என்றேன்.

"யாதும் ஊரே யாவரும் கேளிர் கேட்டிருக்கிறாயா?"

"பார்த்திருக்கிறேன்."

"எல்லோரும் நம் உறவினர்". என்றார்.

தமிழ் அந்த ஓவியரிடம் வாழ்வதைப் பார்க்க முடிந்தது.

"அவள் பிச்சை எடுக்கக் கூடாது, இந்த நாட்டில் யாரும் பிச்சை மட்டும் எடுக்கக்கூடாது" என்றார்.

"இவர்களை எப்படிக் காப்பாற்றப் போகிறீர்கள்?"

"அது இந்தச் சமுதாயத்தின் பொறுப்பு" என்றார்.

ஆண்டவன் தான் காப்பற்ற வேண்டும் என்று சொல்வார் என்று எதிர்பார்த்தேன்.

"ஆண்டவன்தான் சமுதாயம்; சமுதாயம் தான் ஆண்டவன்" என்று ஒரு புதிய கருத்தைச் சொன்னார்.

## 3

**நா**ன் எதிர்பார்க்கவில்லை 'அவள்' அதுதான்; அந்தப் பத்து ரூபாய் அந்தப் படத்தில் வந்து உட்காருவாள்

என்று. அவளும் 2-90 வாங்கியிருந்தாள். நான் தெரியாமல் அந்தப் படத்திற்கு வந்து உட்கார்ந்து விட்டேன்.

'காதலுக்குக் கண் இல்லை' என்ற போஸ்டர் ஒட்டி யிருந்தது. உஷா சொன்னபடம் இடம் கிடைக்கவில்லை. மறந்துவிட்டேன். உஷா யாரென்று அறிமுகப்படுத்தா மலேயே அவள் பெயரைக் கூறிவிட்டேன். கதைகள் படித்திருக்கிறேனே தவிர நான் எழுதியது இல்லை. அதனால் தான் இந்தத் தவறைச் செய்துவிட்டேன்.

அவள்தான் என் 'அஸிஸ்டெண்ட்டு'. அப்படித்தான் ஆபீஸில் சொல்லிக் கொள்கிறார்கள். அதாவது எனக்கு அடுத்து வேலை செய்யும் உதவியாளர். இல்லாவிட்டால் அவளுக்கும் எனக்கும் எப்படித் தொடர்பு உண்டாகப் போகிறது.

அவள்தான் சொன்னாள் 'அவர்கள்' படம் பார்க்கச் சொல்லி. நான் இங்கே வந்து மாட்டிக்கொண்டேன். வேலைக்குத் திண்டாடிய ஒரு பெண் எப்படி 2-90க்கு வந்தாள். அவளைப் பற்றிய தவறான எண்ணம்தான் உண்டாயிற்று. அவள் என் பக்கத்திலேயே வந்து உட்கார்ந்து விட்டாள்; இருட்டில் தெரியவில்லை. பிறகு அவள்தான் என்று தெரிந்தது. அதே சாடை. முதலில் கண்டுபிடிக்க முடியவில்லை. சில கதைகளில் வறுமையடைந்துவிட்டால் அவள் கொஞ்சம் அழகாக இருந்தால் அவளைச் சிவப்பு விளக்கில் நிறுத்தி அழகு பார்க்கிறார்கள். நிச்சயமாக இவள் சிவந்திருக்க மாட்டாள் என்று மட்டும் நம்பினேன். அப்படி அவள் நினைத்திருந்தால் என் பத்து ரூபாயை அவள் கிழிக்கவேண்டிய அவசியம் இல்லை. ஓவியரின் ஆதரவில் இருக்கும் வரை அவள் பண்பு கெடாது என்று நான் நம்பிக்கை கொண்டேன்.

மெல்ல அவளுடல் என் மேனியில் தவறு அவள் மேனி என் உடம்பில் பட்டது. இப்படிச் சொன்னால் தான்

எழுத்தாளன் என்று நினைக்கமுடியும். அதாவது அவள் ஸ்பரிசம் என் மீதுபட்டது. அது என்னமோ எனக்குச் சரியாகச் சொல்லத் தெரியவில்லை. அவளுக்கும் எனக்கும் கொஞ்சம் தொடுதல் ஏற்பட்டது. ஆனால் தொடுப்பு ஏற்படவில்லை. சலனம் என்பதன் ஆரம்ப எழுத்தை அப்பொழுதுதான் கற்றுக்கொண்டேன். கொஞ்சநேரம் அவளும் என்னை விட்டு விலக நினைக்கவில்லை. 'சில நேரங்களில் சில மனிதர்கள்' என்ற தலைப்பு மட்டும் என் நினைவிற்கு வந்தது.

"நீங்கள் எப்பொழுதும் 2-90க்குத் தான் வருவதா?" என்று மரியாதையாகக் கேட்டேன்.

"என் கணவரோடு இதே இடத்தில்தான் வந்து உட்காருவேன். மாதம் ஒரு முறை இங்கே வருவோம். அவர் சம்பளத்திற்கு மறுநாள் அதே 2-ம் தேதி நாள் இது" என்றாள்.

"அப்படியானால் ஒவ்வொருமாதம் 2-ஆம் தேதி"

"இதே இடத்திற்கு வருவேன்; இங்கேயே உட்காருவேன்; எந்தப் படமானாலும் அதைப் பார்த்துத் தான் போவேன்." என்று கணீரென்று சொனனாள்.

கல்லறையில் சில பெண்கள் ஆண்டுக்கு அல்லது மாதத்திற்கு ஒருமுறை வந்து கண்ணீர் விடுவதைப் பார்த்திருக்கிறேன். இந்த அபூர்வ நிகழ்ச்சி எனக்கு ஆச்சர்யத்தைத் தந்தது.

"காதலுக்குக் கண் இல்லை—இந்தப் படம் பிடித்து இருக்கிறதா?" இடைவேளையில் இந்தக் கேள்வியைக் கேட்டேன்.

"தலைப்புத் தவறு" என்றாள். "கண்ணில்லாதவர்கள் தான் காதல் செய்வார்கள்" என்றாள்.

குருடர்களுக்குக் காதல் பிறக்குமா? என்று கேட்கலாம் போல் தோன்றியது. ஆனால் கேட்கவில்லை.

"அதனால்தான் இருட்டில் காதல் சிறக்கிறது" என்றேன், அப்போது விளக்கை அணைத்துவிட்டார்கள். படம் ஓடிக் கொண்டிருந்தது. அவள் பக்கத்தில் நான் இருந்தேன், ஆனால் அவள் என் பக்கத்தில் இருக்கவில்லை. அவளுக்கு அந்த உணர்ச்சி இருந்ததாகத் தெரியவில்லை.

"நான் அங்கு இருந்தேன். ஆனால் என் மனம் அங்கு இருக்கவில்லை. உஷாவை நாடியது. நான் விரும்பி அவள் பக்கத்தில் உட்காரவில்லை. எதிர்பாராத விதமாக அவள் அந்த இடம்தேடி உட்கார்ந்தாள். அவள் பக்கத்து இடம் அவன் கணவனுக்கு உரிய இடம். அந்த நினைவு மின்னல் போல் என்னுள் தோன்றி மறைந்தது. அதுக்கு நான் என்ன செய்ய முடியும், உஷா என்னைப் பற்றி நினைப்பாள். நான் ஒரு பெண்ணின் பக்கத்தில் உட்கார்ந்திருந்தேன் என்று சொல்லுவாள். 'காதலுக்குக் கண்ணில்லை' என்ற தலைப்பை அவள் என்னிடம் சொல்லிக் காட்டுவாள். நெஞ்சுக்கு எரியும் சக்தி எப்படி உண்டாகும் என்பதைத் தெரிந்துகொள்ள ஒரு வாய்ப்புக் கிடைத்தது. நெஞ்சு 'திக்' 'திக்' என்று அடித்துக்கொண்டது. அதே சமயத்தில் அவளை விட்டு என்னால் விலகவும் முடியவில்லை. விரும்பியிருந்தால் வேறொரிடத்தில் போய் உட்கார்ந் திருக்கலாம். அது ஒரு பெண்ணை அவமானப்படுத்துவது போல் இருக்கும் என்றும் நினைக்கத் தொடங்கினேன்.

உஷாவைப்பற்றி நினைக்கும் போது அண்மையில் பார்த்த 'சில நேரங்களில்' தான் கவனத்துக்கு வரும். அதே கங்காவைத்தான், அவள் நினைவுக்குக் கொண்டு வந்தாள். அவளைப் போலவே தானுண்டு தன் வேலையுண்டு என்று இருப்பாள். அவள் மற்ற பெண்களோடு கலகலப்பாகப் பழகவில்லை என்பது அவளை வேறுபடுத்திக் காட்டியது.

அவள் அதிகம் பேசவில்லை. சில சொற்கள்தான் பேசுவாள். தொழிலில் ரொம்பவும் சுறுசுறுப்பாக இருந்தாள். அவள் உடம்பு என்னைக் கவரவில்லை. அவள் போக்கு என்னைக் கவர்ந்தது. அழகு என்பது அவள் வடிவில் இல்லை. அவள் செயலில் அழகைத் தவிர வேறெதுவும் என்னால் காண முடியவில்லை.

அவளுக்குத் திருமணம் ஆகியிருக்கக்கூடாது என்பது என் பேராசை. அந்த வகையில் அவள் பெற்றோரோடு நான் பெரிதும் பழகியிருந்தேன். அந்தப் பேராசை அவளை என்னிடம் ஈடுபாடு கொள்ளச் செய்தது. நானும் இனிமையாகப் பேசினேன். நெஞ்சும் நினைவும் உறவாடின. இதயத் துடிப்புகளுக்குப் பேசும் சக்தி இருப்பதை அவளுடைய பழக்கத்தில்தான் தெரிந்து கொண்டேன். அவள் சொல்லித்தான் இந்தப் படத்துக்கு வந்தேன். 'அவர்கள்' பார்க்க முடியவில்லை. 'அவளை' அங்குதான் பார்க்க முடிந்தது.

அன்று 2-90 வாங்காமலிருந்தால் 'அவள்' என் பக்கத்தில் வந்து உட்கார்ந்திருக்கமாட்டாள். அவளுக்கு அது ஒரு விரதம். எனக்கு அது ஊதாரித்தனம். 1-90இல் இடம் காலியிருந்தும் நான் அதற்குப் போகவில்லை. உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல், இது எங்கேயோ படித்திருக்கிறேன். எதிலும் கொஞ்சம் தாராளமாக இருப்பது பழக்கமாகிவிட்டது. இல்லாவிட்டால் அந்த ஓவியருக்கு ஏன் பத்துரூபாய் தரவேண்டும்.

பணத்தைப் பிடித்து வைக்க வேண்டும் என்ற ஆசை எனக்கு எழுவதே இல்லை. அம்மா மட்டும் கடிந்து கொண்டே இருப்பாள், பணத்தைப் பத்திரப்படுத்த வேண்டும் என்பதில் அவளுக்கு நிரம்ப கருத்து இருந்தது. எனக்கு அப்படித் தோன்றுவது இல்லை. அவளுக்கு எதிர்காலத்தில் நம்பிக்கை, எனக்கு நிகழ்காலத்தில் மிக்க

நம்பிக்கை. அவளுக்குப் பேரன் வேண்டும். எனக்கு மனைவி வேண்டும். இதில் தான் அவள் எதிர்கால நினைவும் என் நிகழ்காலமும் வெளிப்பட்டன. தனிமை எனக்குப் பிடிக்காது. இனிமை எனக்குப் பிடிக்கும். யாரோடாவது பேச வேண்டும்; அல்லது பேசுவதைக் கேட்க வேண்டும். இந்தப் பழக்கம் தான் உஷாவிடம் நெருங்கிப் பழக வைத்தது. மற்றொன்று நாவல்களைப் படித்த பழக்கம். யாரைப் பார்த்தாலும் அவர்கள் எனக்கு மனிதர்களாகத் தெரிவதில்லை. கதாபாத்திரங்களாகத் தெரிகிறார்கள். அவர்கள் அனுபவங்களைக் கேட்டு அறிய வேண்டும் என்ற ஆவல் எப்போதும் என்னை உந்தும்.

'அவள்' அந்தப் பத்து ரூபாயைக் கிழிக்காமல் இருந்திருந்தால் அவள் கால்களைத் தொட்டுப் பேச வைத்திருப்பேன். அவள்தான் என்னைப் பேசாமல் செய்து விட்டாளே. அந்தத் தைரியம் எனக்கு அப்போது வரவில்லை. இப்படி நினைக்கலாமா என்று என்னை நீங்கள் தவறாக நினைப்பீர்கள். உண்மைதான். 'காதலுக்கு கண் இல்லை' என்ற படத்தை என்னோடு சேர்ந்து பார்த்திருந்தால் நீங்கள் என்னை மன்னித்து விடுவீர்கள். நீங்கள் தவறாகத் தான் நினைத்துக் கொள்ளுங்களேன். யார் வேண்டாம் என்று சொன்னது. அந்த இருட்டில் உங்கள் அபிப்பிராயத்தைப் பற்றி நான் ஏன் கவலைப்பட வேண்டும்.

அந்தக் கதை ஒரு போர். வழக்கமான நடிகர்கள். வழக்கமான கதை; பழக்கமான விமரிசனங்கள். ஒரு பிக்னிக்குப் போயிருந்தேன். அப்போது உஷாவின் தொடர்பு எனக்கு ஏற்படவில்லை. வேறு எனது நண்பர் களோடுதான் போயிருந்தேன். அந்த இடத்துக்கு ஒரு பஸ் வந்திருந்தது. அதில் 'அறுவைச் சங்கம்' என்று போர்டு போட்டிருந்தது. அதில் இறங்கியவர்கள் விதம், விதமாக

உடுத்தி இருந்தார்கள். இப்படிக் கூடவா சங்கங்கள் உற்பத்தியாகும். இந்தப் படம் பார்த்ததும் அந்தச் சங்கத்து உறுப்பினர்கள்தான் இதைத் தயாரித்து இருக்கவேண்டும் என்று நினைவுக்கு வருகிறது.

அந்தப் படத்தைப் பார்த்ததில் எனக்கு நிறைவு ஏற்படவில்லை. ஆனால் 'அவள்' வாழ்வில் கண்ட அந்த நிகழ்ச்சி என்னை வியப்பில் ஆழ்த்தியது. இப்படிக்கூட 'பைத்தியம்' இருக்குமா என்பதுதான் ஆச்சரியமாக இருந்தது. கணவன் நினைவிற்காகப் படம் பார்ப்பது என்பது ஒரு புதிய சம்பவமாக இருந்தது. அவள் கையில் பணமில்லாத போதும் 2-90க்கு வந்தாள் என்றால் அவளும் என்னைப் போல ஊதாரித்தனம் வாய்ந்தவளோ என்று எண்ண இடம் தந்தது; இல்லை. அவள் வாழ்ந்து கெட்டவள் என்பது மட்டும் தெரிந்து கொள்ள முடிந்தது. மறுபடியும் எனக்கு அவள் மீது நினைவு தொடர்ந்து சென்றது.

'இண்ட்டர்வெல்' முடிந்து படம் வழக்கம்போல் ஓடியது. அவள் கண்களைக் கவனித்தேன். கண்களில் 'கல கல' என்று கண்ணீர் விட்டுக் கொண்டிருந்தாள். அந்தப் படத்தைப் பார்த்துக் கண்ணீர் விடுவதற்கு ஒன்றுமில்லை. அது சிரிப்பதற்காக எடுத்தபடம்.

எனக்கு அதுவும் வியப்பாக இருந்தது. ஏன் அவள் படம் பார்த்துவிட்டு அழவேண்டும்? மறுபடியும் அந்தக் கல்லறையே கவனத்திற்கு வந்தது. கணவனை நினைத்துக் கொண்டு அவள் கண்ணீர் விடுகிறாள் என்று நினைத்தேன்.

அழுகின்றவள் ஏன் திரைப்படம் பார்க்கவேண்டும் என்று நினைத்தேன். அந்த அழுகையை மறக்கத்தான் வந்திருப்பாள். மறுபடியும் அவளுக்கு அந்த அழுகை வந்து விட்டது. ஏன் அவள் அழுதாள் என்ற கேள்வியைக் கேட்டு விடுவது என்ற துணிவுக்கு வந்தேன். அது அவள் சொந்த

விஷயம் என்ற முடிவுக்கு வந்தேன். ஒருவேளை அவளை நெருங்கியது அவளுக்கு வேதனையைத் தந்திருக்கலாம். அது அவளுக்கு ஒரு வெறுப்பைத் தந்திருக்கலாம் அல்லது அவள் கணவன் நினைவை உண்டாக்கியிருக்கலாம். எது உண்மைக் காரணம் என்பதைத் தெரிந்து கொள்ள முடிய வில்லை. ஏன் அதைப்பற்றித் தெரிந்து கொள்ளவேண்டும். மறுபடியும் அவளைவிட்டுச் சற்று விலகி உட்கார்ந்தேன். அதுக்கப்புறம் அவள் கண்கள் படத்தைத் தவிர வேறெதையும் பார்க்கவில்லை.

நான் படத்தைப் பார்க்கவில்லை. அவளைப் பற்றியே என்மனம் சுழன்றது. இறைவன் அவளுக்கு அழகைக் கொடுத்திருக்கிறான்; இளமை தவழ்ந்து கொஞ்சி விளையாடுகிறது. ஏன் அவள் ஒரு புது வாழ்வை மேற்கொள்ளக் கூடாது.

என் மனம் உறுதிபட்டது. அவளை எப்படியும் மணம் செய்து கொள்வதென்று உறுதி கொண்டேன். அம்மா அவளுக்கு வேலை கொடுத்திருக்கலாம். அவள் எங்கள் வீட்டில் வேலை செய்து கொண்டிருந்தால் நெருங்கிப் பழக வாய்ப்பேற்பட்டிருக்கும். சீர்திருத்தத்திற்காக மட்டுமல்ல, உண்மையில் காதலித்தே மணம் செய்து கொண்டிருக்க லாம். அப்போது காதலுக்குக் கண் கட்டாயம் இருந்திருக்கும். காதலே கண்களால்தான் பிறக்கின்றன என்று நினைக்கின்றேன். அவள் எங்கள் வீட்டு வேலைக் காரியாக அவசியம் தேவை என்று நினைத்தேன். டாக்டர் மு.வ.வின் 'கள்ளோ காவியமோ' நினைவுக்கு வந்தது. அந்தக் கதையில் இப்படித்தான் காதல் வளர்கிறது, மங்கை ஓர் ஏழைப் பெண்; அனாதையாகக் கிடைத்த அவள் அந்த வீட்டு மருமகள் ஆகிறாள். அவள் கலியாணம் ஆகாதவள். இவள் இரண்டு குழந்தைகளுக்குத் தாய். அதை மறந்து விட்டேன். அவளைப்பற்றி நினைக்கும் பொழுது அந்த

நினைவே வருவதில்லை. அதுமட்டும் அல்ல. பழைய நினைவுகள் அவளைப் புது வாழ்விற்கு விடவில்லை. அவையே தடையாக இருந்தன. அவள் வேலைக்காரியாக மட்டும் வந்து என்ன பயன்?

படம் முடிந்தது. அவள் இருந்த இடம் வெறுமையுற்றது. அவள் எழுந்தாள்; எப்படி அவள் தனியே போவாள்? ஏன் அவளுக்குத் துணையாகப் போகக் கூடாது?" கேட்டுப் பார்க்கலாமே" சே! அவள் மறுபடியும் அங்கு அழுதாலும் அழுது விடுவாள். பிறகு என் நிலைமை மோசமாகப் போகலாம். ஏன் வேறு வகையாகக் கேட்டால் போகிறது. அவள் என்னை ஓவியரோடு பேசுவதைப் பார்த்திருக்கிறாள். அதனால் இப்படிக் கேள்வி கேட்டால் என்ன? ஏன் ஓவியர் உங்களோடு வரவில்லையா? தனியாகவா வந்தீர்கள்? இதுவும் அவசியமில்லாத கேள்விகளாகப்பட்டன. ஓவியர் என்ன அவருக்குத் தந்தையா என்ன. அவள் தனியாக வந்தது தெரிந்தது இப்படிக் கேட்டால் அதுக்கு அர்த்தம் என்ன?

நான் எதிர்பார்க்கவே இல்லை. திடீரென்று போலீஸ்காரன் வந்து வண்டியைக் கைகாட்டி நிறுத்துவான் என்று. உஷா மரியாதையாகப் பக்கத்தில் வந்து நின்றாள், என் நிலைமை ஒரு மாதிரியாகப் போய்விட்டது. "நீயும் இந்தப் படத்திற்குத் தான் வந்தாயா?"

"நான் 'அவர்கள்' பார்த்துவிட்டேன்" என்றாள்.

"உன்னோடு யாரும் துணையாக வரவில்லையா?"

"இல்லை நான் மட்டும்தான் வந்தேன்."

அதற்குமேல் 'அவளோடு' பேச முடியவில்லை. கூட்டத்தின் நெரிசலில் 'அவள்' மறைந்துவிட்டாள். நான் உஷாவோடு தனித்து விடப்பட்டேன்.

பிறகு நாங்கள் தொடர்ந்து நடந்து கொண்டே சென்றோம்.

"அவள் யார்" என்று கேட்டாள்.

"நான் கேட்கவில்லையே"

"உங்களுக்குப் பழக்கமுண்டா?"

"பழகினால் நல்லது என்று நினைத்தேன்"

அவள் சிரித்தாள். அதில் ஒரு வேதனை கலந்து இருந்தது.

"ஏன் சிரிக்கிறாய்?"

"அவள் படம் பார்க்கும் போது அழுதாள்"

"அதைக் கவனித்தாயா?"

"கவனித்தேன் அவள் அழுதாள்! நான் சிரிக்கிறேன்" என்றாள்.

"நான் அழுதுகொண்டே சிரிக்கிறேன்" என்றேன். அது எங்கோ கேட்ட சினிமா வசனம் என்பது தெரியும்.

"அவள் ஒரு விதவை" என்றாள்.

"அப்படி என்றால்"

"அவள் ஒரு கன்னிப்பெண் அல்ல. நீங்கள் காதலித்துப் பழகி மணமுடிக்க" என்றாள்.

அப்பொழுதுதான் எனக்குச் சமூக உணர்வே பிறந்தது. நான் சமுதாயத்துக்கும் பதில் சொல்லவேண்டிய ஆள் என்பதை அவள் பேச்சு நினைவுபடுத்தியது.

"ஏன் ஒரு சிறிய புரட்சி" என்றேன்.

"அது அவசியமா என்று எண்ணிப் பார்க்க வேண்டியது" என்றாள்.

"எனக்கு அது அவசியமில்லை. அவளுக்கு அது நல்லது தானே"

"இரண்டு பேருக்கும் அவசியம் என்றுபட்டால் தான் ஒரு காரியத்தை முடிவு செய்ய வேண்டும்" என்றாள்.

இந்தத் தத்துவம் எனக்குச் சிந்தனையைத் தந்தது. அவள் எனக்கும் அவசியமாகப்பட்டாள் என்பதை என் அடிமனம் சொல்லியது. எப்படியோ அவள் என் உள்ளத்தில் இடமும் பெற்று விட்டாள். இல்லாவிட்டால் நான் ஏன் ஓவியரிடம் நெருங்கிச் செல்கிறேன்? இதை எப்படி உஷாவிடம் சொல்ல முடியும். சில விஷயங்களைத் தான் வெளிப்படையாகச் சொல்ல முடியும்.

உஷா வந்து குறுக்கிடுவாளென்று எதிர் பார்க்க வில்லை. அவள் ஏன் என்னைத் தடுக்க வேண்டும். அறிவுள்ளவர் எவரும் இது தவறு என்றுதான் சொல்வார்கள். அதற்கு மேல் அந்தப் பேச்சுத் தொடர விரும்பவில்லை.

“நீ தனியாகப் போக முடியுமா?”

“அது பழகிவிட்டது” என்றாள்.

எனக்கும் அவளைத் தொடர விருப்பமில்லை. இரண்டு பேரும் சேர்ந்துதான் படம் பார்த்தோம் என்று அவர்கள் வீட்டில் நினைப்பார்கள், அந்த நினைப்பை உண்டாக்க நான் விரும்பவில்லை.

## 4

சலனத்தின் இரண்டாவது படியில் காலெடுத்து வைப்பது போன்ற உணர்வு எனக்கு உண்டாகியது. அது என் மனம் உஷாவைச் சுற்றியபோது என்று நினைக்கிறேன். அம்மாவின் நினைப்பு வேறு விதமாக எண்ணச் செய்கிறது. இரண்டு நினைவுகளும் நீங்கிய பிறகு அம்மாவின் உணர்வோடு என் மனம் ஒன்றுபடுவதையும் பார்க்கிறேன்.

அம்மா சம்பிரதாயமான வாழ்க்கையை நடத்திய வர்கள். அவர்களுக்கு என்னைப்போல வாழ்க்கைப்

பிரச்னையே ஏற்பட்டதாகத் தெரியவில்லை. அவர்கள் சொல்லுவார்கள் பெண்ணுக்குப் பெருமை அன்று இருந்தது என்று, காலா காலத்தில் மணம் நடந்தது. குழந்தைகளும் பிறந்தன. அவள் தாயானாள். வாழ்க்கை பூத்துக் காய்த்துக் கனிந்து முழுமை பெற்றது; மனநிறைவோடு வாழ்ந்து முடித்தாள்" இது அம்மா பெண்ணைப் பற்றிச் சொன்ன கதை. அவள் காலத்தில் அது நடந்தது. அது பழைய காலம்.

இன்று அவள் சொல்லவில்லை. நானே எண்ணிப் பார்க்கிறேன். பெண் திருமணம் ஆவதைத் தள்ளிப் போடுகிறாள். ஆண்களைப் போலவே அவர்களும் தள்ளிப் போடுகிறார்கள். இன்று பெண்ணுக்கு அவ்வளவு எளிதாக மணம் ஆவது இல்லை. இது நான் காணும் உலகம். நான் எங்கே கெட்டுத் தொலைகிறேனோ என்பதில் அம்மாவுக்குக் கவலை.

அம்மா வாழ்ந்த உலகம் மன நிறைவான உலகம்; அவளுக்கு ஒரே ஒரு முறைதான் வாழ்க்கை. என்னைப் பெற்றாள், எதிர்பாரா விதமாக அப்பாவை இழந்தாள். அவள் ஒரு விதவை என்பது மறக்கப்பட்ட நிகழ்ச்சி. அவள் ஒரு தாய் என்பதே நடைமுறை நிகழ்ச்சி. அவள் ஒரு விதவையாகிவிட்டதற்காகக் கவலைப்பட்டதாகத் தெரிய வில்லை. அதை எப்படி நான் அறிய முடியும். என்னைப் பொறுத்தவரை அவள் எனக்குத் தாயாகவே காணப் பட்டாள். அவளுக்கு ஒரு துடிப்பு இருந்து கொண்டே இருந்தது. மறுபடியும் அவள் தாய்மை பெற விரும்பினாள். பேரனை அல்லது பேர்த்தியை எடுத்துக் கொள்ள வேண்டும் என்ற ஆசை; பாவம் அவள் மட்டும் என்ன செய்வாள். யாராவது வந்தவுடனே அவளைக் கேட்கும் கேள்வி இதுதான். "எப்ப உங்கள் பிள்ளைக்குக் கலியாணம்?" "பேரன் பேர்த்தி எப்ப எடுக்க போறே"

என்று கேட்டுத் தொலைவார்கள். அவள் கண்களில் ஒரு ஏக்கம் வெளிப்படும். உள்ளூர ஒரு மகிழ்ச்சி தளும்பும்.

வயதானவர்களுக்கு விரக்தியே ஏற்படுவதில்லை என்பதை அம்மாவிடம் காண முடிந்தது. அவர்கள் புதிய ஆசைகளை ஏற்படுத்திக் கொள்கிறார்கள். வாழ்ந்தது போதும் என்று நினைப்பவர்களைப் பார்க்கவே முடிவதில்லை. வாழ்ந்து கொண்டே இருக்க விரும்பு கிறார்கள். மறுபடியும் அவள் ஒரு தாயாக இருக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறாள். அதற்குக் கவுரவமான பெயர் பாட்டி. அந்த ஆசை அவளை வருங்கால மருமகளைப் பற்றிக் கனவு காண வைத்தது.

எனக்கு ஏற்றவளாக இருக்கவேண்டும் என்று நினைக்கிறாள். நிறையப் பணம் வரவேண்டும் என்று ஆசைப்படுகிறாள். சொத்து இருக்கவேண்டும்; யாரோ டாவது பேசும் பொழுது இதைத்தான் கூர்ந்து கவனிக்கிறேன். எத்தனை சவரன் போட்டார்கள். எவ்வளவு சொத்துவரும். ஐந்து லட்சமாமே. ஒரு பெண்ணாமே யாரோ எவரோ அவர்களைப் பற்றிப் பேசும் பொழுது இந்த லட்சம் தான் அம்மாவின் பேச்சில் அடிபடும். அவள் லட்சியத்தை என்னால் உணர முடிகிறது.

"பெண் அழகாக இருக்கவேண்டாமா?" என்று கேட்பேன்.

"அதுவும் அவசியம் தான்."

"இப்படி எல்லோரும் அழகான பெண்களையே நாடினால் மற்றவர்கள் கதி?" என்று நீட்டிப் பேசுவாள்.

அவள் சோஷியலிசப் பாதை எனக்கு வியப்பைத் தருகிறது. 'எல்லோரும் வாழவேண்டும்' என்ற உயர்ந்த உள்ளம் எனக்கு விளங்கியது.

"அதற்காக நான் அசிங்கமான பெண்ணை மணம் செய்து கொள்ள மாட்டேன்" என்று அடித்துப் பேசுவேன்.

அம்மாவுக்குப் பரம திருப்தி. அழகான ஒருத்தியே மருமகளாக வரவேண்டும் என்ற கற்பனை அவள் முகத்தில் புதிய அழகைத் தோற்றுவித்தது.

"ஏன்" மா அழகையே பார்த்தால்?" என்று கொஞ்சம் மாறுபட்டும் பேசுவேன். அதற்குமேல் பேசவில்லை. அம்மாவின் மனம் புண்படும் என்று தெரியும். அப்பா அம்மாவை எப்படி விரும்பி மணம் செய்து கொண்டிருப்பார் என்ற நினைவு எனக்குள் தோன்றியது. அம்மாவும் அப்பாவும் ஒரு படம் எடுத்திருந்தார்கள். அது கூடத்தில் அழகாக மாட்டப்பட்டு இருந்தது. அம்மா மணப் பெண் கோலத்தில் இல்லாவிட்டாலும் மங்கலமான கோலத்தில் இருந்தாள். பெரிய பொட்டு; காஞ்சிபுரம் பட்டு; கை நிறைய வளையல்கள். அப்பா 'சூட்' போட்டுக் கொண்டிருந்தார். அது கல்யாணத்துக்குத் தைத்துத் தந்தார் களாம். கலியாணத்துக்கு எடுத்த கோட்டு; அதற்கப்புறம் இந்த போட்டோவுக்காகத்தான் பயன்பட்டு இருக்கும். அதுக்கப்புறம் அது அவருக்குப் பயன்பட்டதாகத் தெரிய வில்லை.

அம்மா அதை எனக்குக் கொடுத்தாள். உனக்குச் சரியாக இருக்கும் என்பாள்.

அதை நான் ஒருநாள் போட்டுப் பார்த்தேன். அவருடைய 'பாண்டும்' மடிப்புக் கலையாமல் இருந்தது. இரண்டும் மாட்டிக் கொண்டு கண்ணாடி முன் நின்றேன். நானே சிரித்துக் கொண்டேன். அம்மா அப்படியே பார்த்து நின்றார்கள். அவர்கள் நினைவு எங்கோ சென்றது. கண்களில் நீர் பெருகியது.

"ஏன்'மா அழறே! நல்லா இல்லையா" என்று கேட்டேன்.

"ஆனந்தக் கண்ணீர்" என்றாள்.

"ஆபீசுக்குப் போட்டுக் கொண்டு போ நன்றாக இருக்கும்" என்றாள்.

"ஆபீஸ் அதற்கு நன்றாக இல்லை." என்று சொன்னேன்.

அப்பா வாழ்ந்த காலம் வேறு; வெள்ளைக்காரன் அடிமைப்படுத்திய காலம். அவர்களோடு நெருங்கிப் பழக வேண்டிய காலம். அவனைப் போலவே உடுத்திச் சென்றால் அவன் சமமாக நடத்தினான். அது அவசியமாக இருந்தது.

"காந்தி வட்டமேஜை மாநாட்டுக்குச் சென்றார். அவர் 'கோட்டும் சூட்டும்' அணியவில்லை" என்றேன்.

"அவரே 'பார் அட்லா'வாக வெளிநாட்டில் தொழில் செய்தபோது சூட்தான் அணிந்திருந்தார். நினைத்திருந்தால் அவர் சூட்டும் கோட்டும் போட்டுப் போயிருக்கலாம். அவருக்கே அதற்கு மடிப்பும் போடத் தெரியும். போட வில்லை. இந்திய சராசரி மனிதனின் பிரதிநிதியாகச் சென்றார்" என்று மேலும் தொடர்ந்தேன்.

சிலர் வெளிநாட்டுக்குப் போகும்பொழுது திடீர் வேஷங்கள் போட்டுக் கொள்கிறார்கள். அதுக்கு விளம்பரம் வேறு தந்து அவர்கள் படங்களைப் பத்திரிகைகளில் போடுகிறார்கள்.

காங்கிரஸ் ஆட்சி வந்தது. சுதேசிய உடையில் ஆபீசுக்குச் செல்லலாம் என்று சொன்னார்கள்; அதுக்கப்புறம் இந்த வெளிப்பகட்டு மறைந்துவிட்டது. இந்தக் கல்லூரிகளில்தான் இநத் ஆசிரியர்கள் 'சூட்' அணிந்து கொண்டு செல்கிறார்கள். அது அவர்களுக்கு யூனிபாரம் ஆகிவிட்டது. போலீசுகாரன் காக்கி சட்டை

அணிகிறான். இவர்கள் டை கட்டிச் சூட்டுப் போடு கிறார்கள்.

நான் பத்தாவது படித்துக்கொண்டு இருந்தேன். கணக்கு வாத்தியார் எப்பொழுதும் சூட்டில் தான் வருவார். ஆள் மெலிசாக இருந்தார். கிராப்புப் பின்பக்கம் வாரிக் கொண்டிருந்தார். அதை அமெரிக்கன் கிராப்பு என்று சொல்வார்கள். துண்டு மீசையும் வலதுபக்கம் வாரிய கிராப்பும் இருந்தால் இட்லர் கிராப்பு என்று சொல்வார்கள். அவர் 'டை' மிக அழகாக இருக்கும். மிகவும் சுத்தமாக இருப்பார். கையில் பொன் சங்கிலி கடிகாரத்தைக் கட்டி இருப்பார். அது அவர் மணமான புதிது. அந்த ஆசிரியரை நான் எப்பொழுதும் மறக்க முடியாது.

எப்பொழுதாவது மழைக்காலம் வரும். அவர் இந்திய உடையில் வருவார். அப்பொழுது பஞ்சகச்சம் கட்டிக் கொண்டு வருவார். அது அந்தக் காலத்து இந்திய உடை. முழுவதும் கதர்தான் அணிவார். வகுப்பு நடத்தும் பொழுது பாடத்தைத் தவிர வேறு எதையும் பேசமாட்டார். கணக்குகளைப் போர்டில் போட்டுக் காட்டுவார். அப்படியே பார்த்து எழுதிக் கொள்வோம். அவர் மிகவும் இனிமையான மனிதராக இருந்தார். அவரை இந்த இரண்டு உடையில்தான் பார்த்து இருக்கிறேன். இப்பொழுது அவர் ஓய்வு பெற்றுவிட்டாராம். வாய்நிறைய வெற்றிலைப்பாக்கு; சிவந்து இருக்கும்; என்னைப் பார்த்துச் சிரிப்பார்.

நான் வெறும் 'மக்கு' என்பது அவர் அபிப்பிராயம். முன்னுக்கு வர முடியாதவர்களில் நானும் ஒருவன் என்று நினைத்து வந்தார். இப்பொழுது அவரைவிட நான் கொஞ்சம் அதிகம் சம்பளம் வாங்குவதைக் கண்டு அவரே கொஞ்சம் வெட்கப் பட்டார் என்றுதான் சொல்ல முடியும்.

படிக்கும்பொழுது இந்த ஆசிரியர்களைப் பற்றிப் பிரமாதமாக நினைத்து இருக்கிறேன். படித்து முடித்த பிறகு

வெளியுலக வாழ்க்கையை வைத்து ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது இவர்கள் சாதாரணமாகவே காணப்பட்டனர். வளர்ச்சியே இல்லாதவர்கள் என்ற அபிப்பிராயம் உண்டாகிவிட்டது. அவ்வாறு நினைப்பது தவறுதான். அதற்காக அவ்வாறு நினைக்காமலும் இருக்க முடிவது இல்லை.

அம்மா நான் 'சூட்டோடு' இருப்பதைக் கண்டு ரொம்ப சந்தோஷம். மறுபடியும் என் மணநாளில் அந்தக் காட்சியில் இருப்பேன் என்று நினைத்தாள். நானும் கல்லூரி முடிந்த நாளில் அதாவது ஆண்டுவிழா அன்று பிரமாதம். பக்கத்து ரூம் நண்பன் கோட்டை இரவல் வாங்கி மாட்டிக் கொண்டேன். அது கொஞ்சம் 'தொளதொள' என்றே இருந்தது. எல்லோரும் அவரவர் இயன்ற அளவு புதிய உடையில் காணப்பட்டார்கள். எனக்கு அது நியாயமாகப் பட்டது. காலில் 'பூட்சு' போட்டாலே ஒரு புதிய தெம்பு, மிடுக்கு என் நடையில் அமைந்துவிட்டது. அது ஒரு ஒழுங்கைக் கற்பித்தது போல் இருந்தது. அதுவும் ஒரு அனுபவமாக எடுத்துக் கொண்டேன்.

நான் ஆபீசுக்குப் போகும்போது முன் சொன்னேனே, 'தியாகபூமி' ஸ்ரீதர் ஜிப்பா உடை அதுதான் எனக்குப் பிடித்து இருந்தது. என்னைப்போல் ஒல்லியாக இருப்பவர்க்கு அது ஏற்ற உடை என்று நினைக்கிறேன், அது எனக்குப் பிடித்து இருந்தது. அது மெதுவாக வசதி படைத்த மார்வாடிக்காரர்களின் உடை என்பதைப் பிறகு தான் தெரிந்து கொண்டேன். அதை இந்த நாட்டுத் தேசிய உடையாக நினைத்து வந்தேன். அது அப்படியே எனக்குப் பொருத்தமாகவே இருந்தது. என்னை எல்லோரும் எழுத்தாளர் என்று கிண்டல் செய்தார்கள். அது எழுத்தாளன் உடையாகும்.

நான் பார்த்த தமிழ் எழுத்தாளர் யாரும் அப்படி இல்லை. 'நா. பா' அந்த உடையில் பார்த்திருக்கிறேன்.

'அகிலன்' அப்படி இல்லை. 'ஜெயகாந்தன்' அவர் தனி. மு.வ. நான் சரியாகக் கவனித்தது இல்லை, 'சோ' அந்த மொட்டைத் தலைதான் கவனத்துக்கு வருகிறது, மேலும் அவரை நடிகராகப் பார்த்து வருவதால் அவர் உண்மை வடிவம் நினைவில் நிற்பதில்லை. ஜெகசிற்பியன் அவரை நான் பார்த்தது இல்லை, சாண்டில்யன் 'அவர் கோயிலில் இருக்க வேண்டிய குருக்கள்'. 'சுரதா' அவர் இந்த உடை தான். அவருக்கு அது பொருத்தமாக இருக்கிறது. கவிஞருக்கு ஏற்ற உடை; சால்வைப் போர்வையில்தான் அவரைப் பார்த்திருக்கிறேன். கண்ணதாசன் அரைச் சட்டை என்று நினைக்கிறேன். எப்படியோ என்னை இந்த உடையில் 'எழுத்தாளன்' என்றே அழைத்தார்கள். இதுவரை ஒரு கதையும் எழுதியதில்லை; ஆனால் பிறர் கதையைக் கேட்பதில் மட்டும் ஆர்வம் குறையாமல் இருந்தது.

பழைய கதா பாத்திரங்களின் உடையும் இப்படித் தான் ஓவியர்கள் தீட்டினார்கள், அதனால் அந்த ஓவியங் களுள் நானும் ஒருவனாகக் காணப்பட்டேன். என் உடைகளை என்னால் மாற்றிக்கொள்ள இயலவில்லை. அந்த வகையில் நான் ஒரு முதியவன் ஆகிவிட்டேன். உடையில் ஒருவகை அமைதி ஏற்பட்டுவிட்டது. பட்டாம் பூச்சி போலப் பறக்க வேண்டிய நான் பகட்டே இல்லாமல் உடை உடுத்தினேன். இது அவசியம் இல்லாத விஷயம் தான். இதைப் பேசுவதால் வாசகர்களுக்கு என்னைப் பற்றி ஒரு வெறுப்புத்தான் உண்டாகும். வெறுக்கத்தக்க விஷயங் களையும் சொல்லாமல் இருக்க முடியவில்லை.

இதைப்பற்றி நினைக்க வேண்டியிருக்கிறது. "ஒரு சிலர் தாடி வளர்த்துக் கொள்கிறார்கள்" என்றேன் அம்மாவிடம்.

''அது ஒன்றுதான் குறைவு'' என்று அம்மா சொல்லுவார்கள். அவ்வளவு தூரத்துக்கு நான் துறவியாக அம்மாவுக்குக் காணப்பட்டேன்.

ஒரு சிலர் வாழ்க்கையில் 'விரக்தி' அடைந்து விடுகிறார்கள். அந்த மனநிலையில் தாடி வளர்ந்து விடுகிறது. அதுக்கப்புறம் அந்தத் தாடி நின்று விடுகிறது. விரக்தியும் அவர்களை விடுவதில்லை. பிறகு அவர்கள் கலகலப்பாகப் பழகுவதை மறந்து விடுகிறார்கள்.

என்னோடு ஆபீசில் பலர் வேலை செய்கிறார்கள். அவர்கள் புதுப்புது விதமாகத் தாடி வளர்க்கிறார்கள். பழைய காலத்தில் ஆங்கிலேயர்களின் படங்கள் இப்படித் தான் இருக்கும். அது தமாஷாகத்தான் இருக்கிறது. இவர்கள் பாதி விரக்திமனம் படைத்துக் கொண்டார்கள் என்று தான் நினைப்பேன். பாதித் துறவிகள் என்ற நினைவு வருவது உண்டு.

நானும் ஒரு துறவியாகத்தான் ஆகிவிடுவேன். அது மிகவும் சுலபம். இந்தச் சுலபமான வேலையை மேற் கொள்கிறவர்களை இந்தச் சமுதாயம் மதிக்கிறது; வழிபடுகிறது. அதுதான் ஆச்சரியமாக இருக்கிறது. அப்படி வழிபடுகிறவர்களும் இந்தச் சோம்பேறித்தனமான வாழ்க்கையை விரும்புகிறார்கள் என்றுதான் எனக்குப் படுகிறது. அவ்வப்பொழுது மனச் சலனங்கள் ஏற்படும். அதற்கு அவர்கள் அஞ்சுகிறார்கள். சலனம் மனிதர்களுக்கு ரொம்ப அவசியம் என்று தான் நினைத்தேன்; நினைக்கிறேன்.

அம்மா மட்டும் திட்டுவார்கள் 'உனக்கு ரொம்பச் சலனபுத்தி' என்பார்கள்.

அது உண்மைதான் 'நறுக்கென்று' அம்மா சொல்கிற படி ஏதாவது ஒரு கன்னியைக் கைபிடிக்க வேண்டியது தானே. என்ன அழகான தொடர் கன்னியைக் கைபிடிக்க வேண்டுமாம். அவள் கன்னி அல்ல; கழுத்தில் தாலி இருந்தது; அதை அவள் மூடிவைத்தாள். ஆனால் அது நான் இருக்கிறேன் என்று வெளியே தலைகாட்டிக் கொண்டிருந்தது. அது ஊசலாடிக் கொண்டிருந்தது.

அதைப் பார்க்கும்பொழுது எனக்குத் திரைப் படத்தின் தலைப்பு நினைவுக்கு வந்தது. 'தாலியா சலங்கையா' பாவம் அவள் தாலி கட்டிக்கொள்ள வேண்டும் என்றுதான் ஆசைப்பட்டாள். ஆனால் அதில் வெற்றி பெறவில்லை. காலில் சலங்கை ஏறியது. நான் அந்தப் படத்தைப் பார்க்கவில்லை. ஆபீசில் அதைப் பா பேசிக் கொண்டிருந்தார்கள். மிகவும் உருக்கமான என்றார்கள்.

ஏதோ சமூதாயத்தில் கொடுமையைச் சித்திரிக்கும் படமாக இருந்தால் அதை உருக்கமான படம் என்கிறார்கள். அந்தக் கொடுமையைப் போக்க வேண்டும் என்று நினைப்பதைவிட அதற்காக இரக்கப்படுவதைத்தான் பலரிடம் காண முடிகிறது. படம் பார்த்து விட்டு அழுகிறவர்களைக் கண்டிருக்கிறேன். 'நான் அப்படியே அழுதுவிட்டேன் என்று அவர்கள் சொல்லக் கேட்டிருக் கிறேன்'. நேராக ஓர் அவல நிகழ்ச்சியைக் கண்டால் அதை உதாசீனப்படுத்துவதையும் பார்க்கிறேன்.

அதுவும் உண்மைதான். நம் அழுகையை யாரோ ஒரு சிலருக்காக ஒதுக்கி வைக்க வேண்டியுள்ளது. எதற்கெடுத் தாலும் அழுதுகொண்டேயிருந்தால் அதற்கு ஒரு முடிவு ஏற்படுவதில்லை. நமக்கு வருகிற ஒரே துக்கத்துக்குத் தான் நம் அழுகையைப் பத்திரப்படுத்தி வைக்கிறோம். அம்மா கடைசியாக அழுதது ஒரு முறைதான். அப்பா அவர்களை விட்டுப் பிரிந்த போது. எத்தனையோ பேர் செத்துக் கொண்டே தான் இருக்கிறார்கள். அதற்கெல்லாம் அவர்கள் அழுவது இல்லை. அழமுடியாது. அழுகைகூட நாம் ஒரு சிலருக்கு என்று ஒதுக்கிவைக்கிறோம். அதே போலச் சிரிப்பு கூட ஒரு சிலருக்காகவே ஒதுக்கி வைக்கிறோம். 'உஷா'வோடு சிரிக்க வேண்டுமென்ற ஆசை அவளிடம் என்னை இழுத்தது. அவள் தன் அழுகையை

நான் கேட்க வேண்டுமென்று விரும்பினாள். அதை என்னால் தடுக்க முடிவதில்லை. அவள் அழுகை என் நெஞ்சை உருக்கியது. அவள் அழுகையைத் துடைத்துக் கண்ணீரை மாற்ற வேண்டும். அது என் ஆர்வமாக இருந்தது. அழுகையை மாற்றினால்தானே ஒருவரைச் சிரிக்க வைக்க முடியும்.

## 5

எப்பொழுதும் மனம் நல்லதையே நாடுகிறது. ஆனால் எது நல்லது என்பதை அறிவதில்தான் கலக்கம் ஏற்படுகிறது. அதைவிட வாழ்க்கையில் லட்சியத்தைப் புகுத்துவதா. அலட்சியமாக வாழ்வதா என்பதிலேயே மனம் சலனமடைகிறது. சில சமயம் வாழ்க்கையில் லட்சியப்பிடிப்பே ஏற்படுவதில்லை. சில சமயம் உயர்ந்த லட்சியங்களுக்காக வாழவேண்டுமென்கிற ஆசை உண்டாகிறது.

அம்மாவைப் பொறுத்தவரையும் அவளுக்கு லட்சியம் இருந்தது. என்ன லட்சியம்? வழக்கமான பாதை. சம்பிரதாயமான வாழ்க்கை.

அவள் ஏன் அன்று சினிமாவிற்கு வந்தாள். வந்தவள் எப்படி உயர்வகுப்பில் இருந்தாள். வேலைக்காரி எப்படி அங்கு வந்து உட்கார முடியும், அவளிடம் ஏன் என் மனம் சென்றது. சொல்லக் கூடாதுதான். யாரிடமே சொல்லக் கூடாது. அப்படித்தான் பெரியவர்கள் சொல்லுகிறார்கள். கடவுள் இடத்திலே மனம் சென்றுவிட்டால் இப்படிச் சலனங்களே ஏற்படாது என்று சொல்லுகிறார்கள்.

சலனமே இல்லாத வாழ்க்கையில் என்ன இருக்கிறது. நீலக்கடலில் அலைகள் ஓய்ந்த நிலையில் 'சலனம்' ஏற்படுவ தில்லை. தரையில் சதா அலைகள் மோதிக் கொண்டே

இருக்கின்றன. எழுந்து 'ஓ'வென்று கதறி கீழே விழுந்து பின்வாங்கிச் செல்கிறது. வானத்தில் சலனமில்லை. நீலக்கடலில் சலனம் இருக்கத்தான் செய்கிறது. வானத்தில் விண்மீன்கள் சிமிட்டிக் கொண்டிருக்கின்றன. நீரலைகளில் இரைச்சலைத் தவிர வேறு என்ன இருக்கிறது. சதா இரைச்சல்தான். அந்த இரைச்சல்தான் எனக்குப் பிடிக்கிறது. அப்படிப் பழகிவிட்டேன். மோனநிலை என்ற ஒரு நிலைமை நான் எட்டிப் பிடிக்கவேண்டும் என்ற ஆசை தோன்றுவதில்லை.

மறுபடியும் 'அவளை'ப் பார்க்கவேண்டும் என்ற ஆசை உந்தியது. அவளை மறுபடியும் உந்து நிலையத்தில் ஓவியரோடு பார்த்தேன். அந்தக் குழந்தைகள் அவளோடு ஆடிக் கொண்டிருந்தன. அந்தக் குழந்தைகள் பழைய சட்டைகளை அணிந்துகொண்டு இருந்தன. அவள் நன்றாக இருந்த காலத்தில் தைத்திருக்கவேண்டும். அவள் அங்கே ஒரு பழக்கடை வைத்திருந்தாள். எனக்கு ஆச்சரியமாக இருந்தது. யாரும் தாழ்ந்துவிடுவதில்லை. முயற்சி அவர்களை வாழவைக்கிறது. ஓவியரின் உதவி அவளுக்கு இந்த வாழ்க்கையை ஏற்படுத்தியது என்பதை ஊகிக்க முடிந்தது.

அன்று அந்தத் திரைப்படத்தில் அவள் பக்கத்தில் எதிர்பாராத விதமாக உட்கார்ந்து விட்டேன். என் உடம்பு அவள் உடம்பில் உராசியது. ஸ்பரிச உணர்ச்சிக்குத் தனி ஆற்றல் இருந்ததை உணர முடிந்தது. ஆனால் அவள் மட்டும் கல்லைப் போலவே இருந்தாள். அவள் நெஞ்சம் உறைந்து போய்க் கிடந்ததென்று நினைக்கிறேன்.

வறுமை வாழ்க்கையில் வழி தவறச் செய்யும் என்று கதைகளில் படித்திருக்கிறேன். என் பணத்திமிர்தான் என்னை வழி தவறச் செய்தது என்பதை உணர்ந்தேன். வெறும் பணத்திமிர் என்று கூறமுடியாது. மற்றவர்கள்

செய்யாத, செய்ய விரும்பாத செய்ய முடியாத காரியத்தைச் செய்ய வேண்டும் என்ற ஆசையே அவளைச் சுற்றி வட்டமிடச் செய்தது. அவளிடம் எப்படியாவது பேசவேண்டும் என்பதற்காகவே சுற்றினேன்.

ஒழிந்து போகட்டும் என்று விட்டுவிடுகிறேன்.

சே! ஒரு பழக்கடைக் காரியையா காதலிப்பது. வேலைக்காரியைக் காதலித்து மணம் செய்து கொண்டதாகக் கதை இருக்கிறது. பழக்கடைக் காரியைக் காதலித்ததாகக் கதை இல்லையே. இனி நான்தான் அந்தக் கதையை எழுதவேண்டும். அன்று ஓவியர் அங்கு வரவில்லை. ஓவியம் எழுதவில்லை. அந்த ஓவியரைப் பற்றி என்னால் புரிந்து கொள்ள இயலவதில்லை. அங்கே மற்றொருவர் சுவர்களில் அன்றாடச் செய்திகளைச் சாக்குத் துண்டில் எழுதிக் கொண்டிருந்தார். அவர் ஏன் வேலை கெட்டு இதை எழுதிக் கொண்டிருக்கிறார். அதை ஒரு தொண்டாக அவர் கருதுகிறார் என்று நினைக்கிறேன். சில பேர் ஓய்வு பெற்றுவிட்டால் இன்னது செய்வதென்று தெரியாமல் திகைப்பார்கள். ரயில் நிலையத்தில் ஸ்டேஷன மாஸ்டர் ஆக இருந்த ஒருவர் அவருக்குப் பொழுது போக வேண்டுமென்றால் மறுபடியும் அங்கே சென்றால்தான் அவருக்குத் தெம்பு. ரயில்வே செய்திகளை 120, 171 இப்படி ரயில் எண்களைச் சொல்வதிலே சுவராசியம் இருக்கிறது. வைத்தியர்கள், வக்கீல்கள் இவர்கள் மட்டும் ஓய்வே எடுத்துக் கொள்வதில்லை. ஆசிரியர்கள் ஓய்வெடுத்துக் கொண்டால் அது ரொம்ப பரிதாபகரமாக ஆகிவிடுகிறது. அவர்களிடம் 'டியூஷன்' கூட யாரும் சென்று படிப்பதில்லை. பாவம் அப்புறம் அவர்கள் எதையோ பறி கொடுத்துவிட்டதைப் போல அந்தப் பழைய பள்ளிக்கூடப் பக்கம் போய்ப் பார்த்து வருவதில் திருப்தி. நம் ஓவியருக்கும் தம் படங்களை யாராவது பார்க்க வேண்டும் என்பதில் ஒரு திருப்தி. சிலர் நிறைய காசு செலவு செய்து புத்தகம் போட்டு விடுகிறார்கள். விழாவும் எடுக்கிறார்கள். அதோடு அந்தப்

புத்தகம் வீட்டைவிட்டு வெளியேகூடப் போவதில்லை. தான் எழுதுவது பேசுவது மற்றவர்கள் கேட்க வேண்டு மென்ற ஆவலே அவர்களை எழுதத் தூண்டுகிறது.

சிலர் கவிதைகள் எழுதுகிறார்கள். எதற்காக எழுது கிறார்கள். ஏதாவது அவர் உலகத்துக்குச் சொல்லும் செய்தி இருக்கவேண்டுமே. ஒன்றும் இருக்காது. அதே போலக் கதை எழுதுபவரும் இருக்கிறார்கள். தனக்கு எழுதத் தெரியும் என்பதைக் காட்டுவதற்காக ஏழுதுகிறார்கள். அதில் கற்பனை இருக்காது. கருத்து இருக்காது வெறும் நிகழ்ச்சியின் கட்டுக் கோப்புத்தான் இருக்கும். அதைப் போன்ற நிலையில் பழைய படங்களையே இந்த ஓவியர் போட்டுக் கொண்டிருந்தார். பழைய கதைகள் தோன்றிய போது அவை கற்பனைக் கருவூலங்களாக விளங்கின. ஆனால் பழகிவிடும் பொழுது கற்பனை மெருகு குறைந்து விடுகிறது. அவை செய்திகளாக நின்றுவிடுகின்றன.

அன்று அவர் அங்கு வராததால் அவரைப் பற்றிய சிந்தனைகளும் ஊகங்களும் தோன்றின.

அவரைப் பற்றி விசாரிக்க வேண்டும் என்று எண்ணினேன். அந்த வாய்ப்பையாவது பயன்படுத்திக் கொண்டு அவளிடம் பேச்சுக் கொடுக்கலாம் என்றிருந்தேன். அதற்கும் அவள் இடம் கொடுப்பதாகத் தெரியவில்லை.

துணிந்து அவளிடம் சென்றேன்.

"பழம் விலை என்ன" என்று கேட்டேன்.

"பத்து ரூபாய்" என்றாள்.

அவள் என் பழைய செய்கையைக் குத்திக்காட்டுவது போன்று இருந்தது.

"பத்து ரூபாய்க்கு எத்தனை?" என்று கேட்டேன்.

"பழம் பத்துக் காசு; நான் பத்து ரூபாய்" என்றாள்.

இவள் இவ்வளவு துணிவாகப் பேசுவதைக் கேட்டு ஆச்சரியப்பட்டேன்.

சில சமயம் அனுபவங்கள் தைரியம் கொடுக்கின்றன என்பதை அறிய முடிந்தது.

"கடையில் பல பேருடன் பழகிய பிறகு எதையும் தைரியமாகப் பேசக் கற்றுக்கொள்ள முடிகிறது" என்பதைத் தெரிந்து கொண்டேன். அவள் பேசியது கிண்டலுக்கு என்பதையும் தெரிந்து கொண்டேன்.

"ஓய்! உனக்குக் கல்யாணம் ஆச்சா?" என்று கேட்டாள்.

"இல்லை" என்றேன்.

"பாவம், அதுதான் இந்தச் சலன புத்தி" என்று வெடுக்கென்று சொன்னாள்.

"உனக்குக் கல்யாணம் ஆச்சா" என்று வேண்டு மென்றே கேட்டேன்.

"அதோ அந்தக் குழந்தைகளைக் கேள்" என்று பதில் சொன்னாள்.

அதற்குமேல் அவளிடம் பேசத் தெரியவில்லை.

"ஓவியர் வரவில்லையா?"

"அவர்தான் வீட்டைக் கவனித்துக் கொள்கிறார். எனக்காக வீட்டில் சமையல் செய்து வைப்பார்."

எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

"ஏன், அவருக்கு வீடு வேறு இல்லையா?"

"இருக்கிறது; அது அவர் எனக்குச் செய்யும் உதவி. எனக்கு வியாபாரம் தொடங்க முதல் தந்ததும் அவர்தான். அவர் என் குடும்பத்து நெருங்கிய நண்பர். அந்தக் குடும்பத்திலேயே அவர் ஒரு காந்தி".

"காந்தி இல்லையே".

"காந்தி இல்லையா? அவர் தத்துவம்தான் அவரை மாற்றிவிட்டது."

ஓவியரைப் பற்றி உயர்ந்த எண்ணம் உண்டாயிற்று. வினோபாவை நான் பார்த்தது இல்லை. கேள்விப்பட்டு இருக்கிறேன். அவர் இப்படித்தான் இருப்பாரா என்று எண்ணத் தொடங்கினேன். ஒரு சில வினோபாக்கள் இருப்பதால்தான் சமுதாயம் இன்னும் லட்சியங்களைப் பற்றிப் பேசுகின்றது என்று நினைத்து மகிழ்ந்தேன்.

"அவர் ரொம்பவும் வருத்தப்படுகிறார்."

"எதற்காக?"

"இந்தக் குழந்தைகளை வைத்து நான் எப்படிக் காப்பாற்றுவேன் என்று,"

"அனாதை இல்லங்களில் சேர்த்து விடலாமே. நான் வேண்டுமானால் எழுதித் தருகிறேன்."

"இப்படித்தான் பல பேர் நினைக்கிறார்கள். பிச்சைக் காரர்களா? சரி அவர்களுக்கு ஒரு விடுதி கட்டு; நோயாளிகளா? அவர்களுக்கு ஓர் ஆஸ்பத்திரி கட்டு; பையன்களா? அவர்களை உடனே பள்ளிக்கூடம் அனுப்பு. இதுதான் ஒவ்வொருவரும் சொல்வது, இந்தக் குழந்தைகளும் இந்த நாட்டு நன்மக்களாக உருவாக வேண்டாமா? அந்த ஆசை பெற்றவருக்கு இருக்காதா? அதைப்பற்றித்தான் அவர் கவலைப்படுகிறார்".

"மேல் நாட்டிலே விதவைகள் மணம் செய்து கொள்கிறார்களே, அது தப்பு என்று நினைக்கிறாயா?"

"அங்கே பெண்ணை மதிக்கிறான்; இங்கே பெண்ணை மிதிக்கிறான். கல்யாணமான பெண்களையே சரியாக வைத்து வாழத்தெரியாத நாட்டிலே விதவையைக் கல்யாணம் பண்ணிக்க எவன் முன்வருவான். கல்யாண மான மனைவியையே சாந்தி முகூர்த்தத்திலேயே இவன்

கேட்கிற கேள்வி என்ன? "நீ யாரையாவது காதலித்து இருக்கிறாயா?" அவள் ஆமாம் என்று சொல்லிவிட்டால் போச்சு; உடனே நீ அவன் பின்னாலே போ என்று பேசக் கூடிய நாட்டிலே விதவைக்கு ஒரு விவாகமா?"

"அதெல்லாம் மாறிவிடும். புதிய கருத்துகள் மெல்ல மெல்லப் புகுவதால் எல்லாரும் மனம் திருந்துவார்கள்" என்று பொதுப்படையாகப் பேசினேன்.

அவள் துணிந்து கேட்டாள்.

"ஏன்'யா, நீ ஒரு விதவையைத் தைரியமாக மணந்து கொள்வாயா?"

என்னால் உடனே பதில் சொல்ல முடியவில்லை. நேருக்கு நேர் அந்தக் கேள்வியைச் சந்திப்பதற்குத் தைரியம் வரவில்லை.

"விதவைக்காகவே விதவையை யாரும் தேட மாட்டார்கள்" என்று கொஞ்சம் தெளிவாகவே பதில் சொன்னேன்.

"Widow no bar" என்ற விளம்பரங்கள் என் மனத்தில் பளிச்சிட்டன.

"இவ்வளவும் உன் கிட்டே ஏன் பேசறேன் தெரியுமா? நீங்கள் ஓவியருக்கு வேண்டியவர் என்பதால்தான். நான் போற்றும் மனித தெய்வத்தை நீங்கள் மதிக்கிறதனால் தான்" என்று என்னிடம் முடிவில் சொன்னாள். "இல்லா விட்டால் உன் முகத்தைப் பார்க்கக் கூட மாட்டேன். நீ தைரியம் இருந்தால் என்னைக் கல்யாணம் செய்து கொள்; இந்தக் காசு நீட்டுகிற பழக்கத்தை விட்டுவிடு" என்று வெடுக்கென்று சொல்லி முடித்தாள்.

நான் இந்த பதிலை எதிர்பார்க்கவில்லை.

"யோசனை இருந்தது. இப்போது விட்டுவிட்டேன்" என்று பதில் சொல்லி முடித்தேன்.

"நன்றாக யோசனை பண்ணிச் சிந்தித்து முடிவு செய். நான் உனக்கு மனைவியாக இருப்பது என்றால் இந்தக் குழந்தைகளுக்கு நீ தகப்பனும் ஆகவேண்டும். அதையும் யோசித்துப்பார்" என்று அடுக்கிக் கொண்டே போனாள். சந்திக்கு வந்த பிறகு எவ்வளவு தைரியம் வருகின்றது என்று எண்ணி வியந்தேன்.

அவளிடத்தில் மென்மை இருக்குமென்று எதிர் பார்த்தேன். வன்மை மிகுதியாக இருந்தது. என்றாலும் அவளிடம் கொண்டிருந்த கவர்ச்சியை என்னால் விட முடியவில்லை. அவள் உடல் என்னை அழைத்தது; ஆனால் என் உள்ளம் செயல்பட மறுத்தது. அந்த மென்மையை நாடியது என் உள்ளம். அந்த மென்மையைப் பற்றி இப்போது நினைத்துப் பார்க்கிறேன். ஆபீஸ் நிகழ்ச்சிகள் என்னுள் நிழலாடின.

'உஷா' அவள் தான் அந்த மென்மையின் இருப்பிடமாக விளங்கினாள். ஆபீஸில் அவள் என்னிடம் 'பைலை' நீட்டுவாள். அவள் ஏதோ சொல்லத் தொடங்குவாள். நான் அவளையே கவனிப்பேன். என் நெஞ்சு எதையோ தேடும். அவள் உள்ளத்தில் நான் ஒன்றிவிட நினைப்பேன். நானும் அவளும் ஒன்று ஆகிவிடக் கூடாதா என்று எண்ணுவேன்; ஏங்குவேன். அதை வாய் விட்டுச் சொல்ல மாட்டேன். அதைத்தான் அவள் ஸ்பரிச உணர்வில் வெளிப்படுத்துவேன். அவளும் அதைப் புரிந்து கொள்வாள்; ஆனால் தெரிந்து கொள்ளமாட்டாள்.

அது நியாயமான உணர்ச்சிதான். அவள் பேரழகி அல்ல. இளையவள்; இனியவள். "உள்ளம் கவரத்தக்க எடுப்பான தோற்றம்; இனிமையான பேச்சு; நளினமான நடை; சாயல்" என்று எங்கோ படித்து இருக்கிறேன். அதை அவளிடம் கண்டேன். இப்படி எல்லாம் எண்ணுவேன். நெற்றிக்கு அவ்வளவு அழகு இருக்க வேண்டுமா? பெண்ணின் அழகே நெற்றியில்தான் இருக்கிறது என்பதை

அவள் எனக்கு விளக்கினாள். அவள் ஏன் தலைவலி என்று அன்று சொல்ல வேண்டும். என்னையும் அறியாமல் அவள் நெற்றியைத் தொட்டு அவளுக்கு ஆறுதல் காட்டினேன்.

"சுரம் இல்லை" என்றேன்.

"இப்பொழுது இல்லை" என்றாள்.

"ஏன் நீ அதிகமாகச் சிரிக்க மாட்டாயா?" என்று கேட்டேன்.

"சிரிக்க முடியவில்லை" என்றாள்.

அவள் நெஞ்சில் ஏதோ ஒரு சுமை இருந்தது. அதை எடுத்து வைக்க முடியவில்லை. அவள் சொல்கிறாள். 'சிரிக்க முயல்கிறேன் முடியவில்லை. எதை நினைத்துச் சிரிப்பது என்று தெரியவில்லை."

"ஏன், நீ அழகாக இருக்கிறாய், அதற்காகச் சிரிக்க லாமே" என்றேன்.

அவளுக்கு விளங்கவில்லை.

சிரிப்பதற்குத் தன்னிடம் எதாவது இருக்கவேண்டும் என்கிறாயே அழகு இருக்கிறது அதை வைத்துக் கொண்டு சிரிக்கலாமே என்று கூறினேன். அவளைப் புகழ்வதற்கு ஒரு வாய்ப்பாகப் பயன்படுத்திக் கொண்டேன்.

"சார் இதில் கையெழுத்துப் போடுங்கள்" என்று நீட்டினாள். கையெழுத்துப் போடத் தொடங்கினேன். என் கைகள் நனைந்தன. அந்தக் கறுப்பு மை நனைந்தது. அது அந்த ஏட்டை நனைத்துவிட்டது. அது அவள் சோகத்தைச் சித்திரித்துக் காட்டியது. ஒரு சொட்டுக் கண்ணீருக்கு இவ்வளவு ஆற்றல் இருந்தது என்பதை அப்பொழுதுதான் தெரிந்துகொண்டேன். விழும்பொழுது சூடாக இருந்தது; பிறகு தானாகக் குளிர்ந்து விட்டது; அவள் முகத்தைப் பார்த்தேன்; சிரித்தாள்; அழுவாள் என்று எதிர்பார்த்தேன். கண்ணீரைக் கொட்டி விட்டதால் அவள் நெஞ்சு லேசாக மாறியது. சிரித்தாள்; என்னால் சிரிக்க முடியவில்லை.

"புரியவில்லையே" என்றேன்.

"என் எழுத்து அப்படித்தான்" என்றாள்.

"அதற்குமேல் அவளிடம் பேச விரும்பவில்லை. அவள் பேசத் தொடங்கினாள்.

"நீங்கள் ஏன் அந்த வேலைக்காரியை விரும்பு கிறீர்கள்?" என்று கேட்டாள்.

"அவள் இந்த நாட்டுக் குடிமகள்."

"நல்ல காலம், அவளை இந்த நாட்டு அரசி என்று சொல்லவில்லையே!"

"அப்படி நம் நாட்டுக் கவிஞர் ஒருவர் சொல்லி இருக்கிறார். எல்லாரும் இந்நாட்டு மன்னர் என்று. அப்படியானால் அவள் அரசிதானே."

"அதை நான் ஏற்கவில்லை. அவர் எல்லோருக்கும் சம உரிமை உண்டு என்ற கருத்தில் சொல்லி இருக்கிறார்."

"நானும் அவளுக்குச் சம உரிமை தரப்போகிறேன். அவளை என் இல்லத்து அரசியாக்க்க விரும்புகிறேன்." என்றேன் நான்.

"உங்கள் மூளை கெட்டுவிட்டது" என்றாள்.

"அப்படித்தான் நானும் நினைக்கிறேன்" என்றேன்.

"அவள் வேலைக்காரி"

"அது பெரிது அல்ல; நீ கள்ளோ காவியமோ படித்து இருக்கிறாயா?"

"அவள் உங்களுக்குக் கள்ளாக இருக்கிறாள்."

"அவளைக் காவியமாக்க முடியாதா?"

"கள்ளைக் காவியமாக்க முடியாது; காவியத்தைக் கள்ளாக்க முடியாது."

இந்தச் சொற்கள் என் நினைவுக்கு வந்தன. நான் இப்பொழுது சந்திப்பது பேசுவது அவள் குறிப்பிட்ட கள்ளோடுதான். அது என்னை மயக்குகிறது. ஆனால் அதிலேயே நான் ஆழ்ந்து விடுவேனா?

காவியம் என்னை இழுத்து வந்தது. காவியத்தைக் கற்கவில்லை என்றால் நான் சரி என்று சொல்லிவிட்டி ருப்பேன். காவியங்கள் மனிதனை எவ்வளவு தூரம் தவறு செய்யாமல் தடுக்கின்றன என்பதை என்னால் உணர முடிகின்றது. 'உஷா' எனக்குக் கா்வியமாக விளங்கினாள்.

அதற்குள் ஓவியர் அங்குவந்து சேர்ந்தார். அவள் என்னைக் கவனிக்க வில்லை. பழங்களைக் கவனித்தாள்; அவற்றை அடுக்கி வைத்தாள். அந்தப் பழங்களில் அவள் எதிர்காலத்தைக் கண்டாள். நான் என் எதிர்காலம் அங்கு இல்லை என்பதை உணர்ந்தேன்.

ஓவியர் மறுபடியும் படம் எழுத உட்கார்ந்தார். கையில் வெள்ளைச் சாக்கட்டி இருந்தது. இன்னும் கலர் சாக்கட்டிகளும் இருந்தன. வினாயகர் வடிவம் அந்த ஓவியத்தில் எழுந்தது.

"என்ன அந்தப்படத்தில் ஈடுபாடு" என்று கேட்டேன்.

"இவர்தான் அந்தக் குடும்பத்து மூத்த பிள்ளை. அவர் கல்யாணமே செய்துகொள்ளவில்லை" என்றார்.

நானும் என் அம்மாவிற்கு ஒரே பிள்ளை. இன்னும் கல்யாணம் ஆகவில்லை என்ற நினைவு வந்தது.

"அவருக்குக் கல்யாணமே ஆகவில்லை; ஏன் தெரியுமா?" என்று கேட்டார்.

"தெரியாது. அவரைப் பார்த்து எந்தப் பெண்ணும் கல்யாணம் செய்துகொள்ளமாட்டாள்" என்று யதார்த்த மாகச் சொன்னேன்.

அதை அவர் எதிர்பார்க்கவில்லை.

"அம்மாவைப்போல் அழகியை எதிர்பார்த்தார்; அது கிடைக்கவில்லை."

"அதனால் அவர் கடைச்சந்திக்கு வந்துவிட்டார். கோயில் குளத்தங்கரைக்கு வந்துவிட்டார். அரசமரத் தடியில் உட்கார்ந்துவிட்டார் பாவம் பரிதாபமான கதை தான் என்றார்."

"அப்புறம்?"

"அவருக்கு வய்தாகிவிட்டது. கல்யாணத்தையே மறந்து விட்டார்."

"உங்களுக்குக் கல்யாணமே ஆகவில்லையா?"

"இதுதான் என் கதையும். நான் எனக்குப் பிடித்த வளைத் தேடித் தேடி அலுத்துவிட்டேன். அதற்கப்புறம் ஓவியம்தான் துணையாகிவிட்டது" என்று முடித்தார்.

"இங்கே வருகிறவர்கள் உங்கள் படத்தில் எதை அதிகமாக ரசிக்கிறார்கள்."

"ரசிக்கிறார்கள், இல்லை மதிப்புத் தருகிறார்கள் என்று சொல்லுங்கள்—ரசனை முக்கியமல்ல. விஷயம்தான் முக்கியம்."

"வெங்கடேசப் பெருமாள் தான். அந்தப் படம் போடுகிற நாளில் மட்டும் ஓர் உண்டியை வைப்பேன். அதில் நிறைய காசு விழும்."

"உங்களுக்குத்தான் பென்ஷன் வருகிறதே!"

"இது பொதுத் தொண்டுக்கு."

"இதிலிருந்துதான் கண்ணம்மாவிற்கு வியாபாரம் செய்ய மூலதனம் தரமுடிந்தது" என்று முடித்தார்.

அப்பொழுதுதான் அவள் பெயர் கண்ணம்மா என்பதைத் தெரிந்துகொண்டேன்.

"கண்ணம்மா என் காதலி" எங்கேயோ படித்த நினைவு வந்தது.

"நம் சொந்தத்துக்கு என்றும் சம்பாதிக்கவேண்டும். பிறருக்காகவும் சம்பாதிக்கவேண்டும், இதைத்தான் ஒவ்வொருவரும் செய்கிறார்கள்."

"எல்லோரும் அப்படிச் செய்வது இல்லையே. தன் குடும்பம் வரைதான் பார்த்துக் கொள்கிறார்கள்."

"அதுதான் உண்மை. அவர்கள் ஒரு வரையறை செய்து கொள்கிறார்கள். குடும்பம் என்பதிலே அவனும் இருக்கிறான், மற்றவர்களும் இருக்கிறார்கள். மற்றவர்களுக் காகத்தான் அவனும் உழைக்கிறான். ஒவ்வொரு குடும்பமும் தன்னைச் சரிப்படுத்திக் கொண்டால் போதும். அதைத் தான் இல்லறம் என்று சொல்கிறார்கள்."

அவரிடம் பேசுவதிலே எனக்குச் சுவை ஏற்பட வில்லை. மறுபடியும் அங்கு இருந்தாலும் அவர் திருக்குறளை ஒப்பிக்க ஆரம்பித்துவிடுவார் என்று நினைத்தேன்.

அவர் விடவில்லை. மேலும் பேசத் தொடங்கினார். "எனக்கு அந்தக் குடும்பம் இல்லை. என்னால் இயன்றதை மற்றவருக்குச் செய்யத்தான் இந்த ஓவியத்தைப் பயன்படுத்தகிறேன்" என்றார்.

"இந்த பஸ் ஸ்டாண்டில்தான் இவளைச் சந்தித்தேன். நான் இல்லாவிட்டால் இந்தக் குழந்தைகளைக் காட்டி அவள் பிச்சை எடுத்திருப்பாள்; அல்லது தன்னைக் காட்டி தன்னையே விற்றிருப்பாள். அவளைக் காப்பதை நான் ஒரு கடமையாக எடுத்துக் கொண்டிருக்கிறேன்."

நா. காமராசனின் கறுப்பு மலர்களைப் படித்திருக் கிறேன். ஆடை வாங்குவதற்காக மானத்தைத் துறக்கும் விலைமாதர்களையும், ஒதுக்கப்பட்ட ஏழைக் குடிமக்களை

யம், மக்களின் நண்பனாக விளங்கும் தபால்காரர்களையும், நீதிக்கு முன்னால் அநீதி இழைக்கப்படும் குற்றவாளிகளை யும் காட்டிய அவர், இந்த ஓவியரைப்பற்றியும் எழுதி யிருக்கலாமே என்று நினைத்தேன். அவர் கண்ணுக்கு எங்கே படப்போகிறார். அத்திபூத்தாற்போல அமைதி யாகத் தொண்டு செய்யும் இந்த மனிதரை அவர் கண்டிருக்க முடியாது. அவரைப்பற்றி நான் எழுதுவதற்கு வாய்ப்புத் தந்தார். அவரிடம் எனக்குத் தனி ஈர்ப்பு ஏற்பட்டது. அப்படியே அவரோடு பழகினால் நானும் அந்த ஓவியராகவும் முடியும் என்று நினைக்கிறேன். காலமெல்லாம் பிறர் கண்ணீரைத் துடைக்கும் பணியில் ஈடுபட்டால் அதுவே போதும். இந்தக் குடும்ப வாழ்க்கையில் காணும் இன்பத்தைப் பொது வாழ்க்கையில் காணலாமே என்ற எண்ணம் தோன்றும். அப்போது காமராசர் என் நினைவுக்கு வந்தார். கவிஞர் காமராசர் அல்ல; தலைவர் காமராசரைச் சொல்கிறேன். அவர் வாழ்க்கைத் தொண்டுக்காகவே பயன்பட்டது. மணக்க வில்லை; ஆனால் அவர் வாழ்வு மலர்ச்சி பெற்றது. மணம் இல்லாவிட்டாலும் பூவை மலரென்றுதானே சொல் கிறோம். அதுவும் அழகாக விளங்குவதால்.

"அரசாங்கம் மகளிருக்கு விடுதிகட்டித்தந்து இருக்கிறார்களே" என்றேன்.

"யாருக்கு? கெட்டுவிட்டவர்களுக்குத்தான். போலீஸ் காரர்கள் அவர்களுக்கு விபச்சாரப் பட்டமளித்து நீதி மன்றத்தில் நிறுத்தி வைத்துப் பட்டமளிப்பு விழாவும் நடத்திய பிறகுதான் அவர்களுக்குக் காப்பு அல்ல காவல் தருகிறது."

"குழந்தைகளை அனாதை ஆசிரமத்தில்."

"எங்கே கட்டி வைத்திருக்கிறீர்கள்? அந்தச் சொல்லைக் கேட்பதற்குக் கடுமையாக இருக்கிறதே.

'குழந்தைகள் விடுதி' என்று பெயர் வைத்தால் நலமாக இருக்கும். அவர்களுக்கு அனாதைகள் என்ற பெயரைச் சூட்டும்பொழுது அவர்கள் நெஞ்சில் சூனியம் நிறைந்து விடுகிறது. தாய்மார்கள் தங்கள் குழந்தைகள் என்று சொல்லிக்கொள்ள வேண்டும். அன்பு என்பதைக் கற்றுக் கொள்ளத் தாய் அவசியம்; தாய் ஒருத்தியால்தான் அன்பைச் சொல்லிக் கொடுக்க முடியும். அதை இந்தப் பொது விடுதிகளில் காணமுடியாது. ஒன்று நாம் அமெரிக்கர்களாக இருக்க விரும்புகிறோம். இல்லா விட்டால் ருசியாவைக் காட்டுகிறோம். இந்தியாவில் வாழ நாம் நினைப்பதில்லை."

"விளங்கவில்லை."

"தாயைவிட்டுக் குழந்தைகளைப் பிரிக்கக்கூடாது. அதே சமயத்தில் குழந்தைகளையும் காப்பாற்ற வேண்டும்."

"வளர்க்கின்றவர்கள் என்னுடைய குழந்தைகள் என்று சொல்லிக்கொள்ள முடியாதே."

"குழந்தையில்லாதவர்களுக்கல்ல நான் சொல்வது. குழந்தை இருக்கிறவர்களே பிற குழந்தைகளை வளர்க்க வேண்டும். மனிதனுக்கு இரண்டு கடமைகள் இருக்கின்றன; சொந்தம்; பந்தம். இதைத்தான் 'சொந்த பந்தம்' என்று சொல்கிறோம். பந்தம் என்பது நாமே சிலர்மீது பற்றுக் காட்டி உறவினர்களாக ஏற்றுக்கொள்வது. எனக்குச் சொந்தம் யாரும் இல்லை. அதனால்தான் அவர்களைப் பந்தமாக ஏற்றுக்கொண்டேன்" என்றார்.

"ஏழைகளை ஒதுக்கக் கூடாது. அவர்களை நம்மோடு சேர்த்துக் கொள்ள வேண்டும். இதுதான் இந்தியப் பண்பாடு. புதிதாக உருவாக்கும் பண்பாடு."

"அப்படி என்றால்?"

"ருசியாவில் ஏழைபணக்காரர் என்ற பாகுபாடு இல்லை என்று சம உரிமை, பொது உடைமை, சம

அந்தஸ்து கோருகிறார்கள்; அமெரிக்கர் சம அந்தஸ்து தருகிறார்கள். சம உரிமை தருகிறார்கள். ஆனால் சம உடைமை என்பது கிடையாது. இன்னும் சொல்லப் போனால் சம உடைமை என்பது ருஷியாவில் இல்லை. அனைத்தையும் பொது உடைமை என்று கூறுகிறார்கள். நம் நாட்டில் பொது உடைமையை நாம் விரும்பவில்லை. சம உடைமையைத்தான் விரும்புகிறோம் என்று விளக்கினார்.

இப்பொழுதுதான் எனக்கு சோஷலிசத்துக்கும் கம்யூனிசத்துக்கும் வித்தியாசம் தெரிந்தது. சம உடைமை வேறு; பொது உடைமை வேறு என்பதை அவர் பேச்சிலிருந்து தெரிந்து கொண்டேன்.

"நீங்கள் அரசியல் நன்றாகத் தெரிந்து வைத்திருக்கிறீர் களே" என்று பாராட்டினேன்.

"அரசியல் இரண்டு வகைப்படும். ஒன்று யார் பதவிக்கு வரவேண்டும் என்பது. மற்றொன்று எது அரசியலில் இடம்பெற வேண்டும் என்பது. எல்லோரும் முன்னதில் கவனம் செலுத்துகிறார்கள். நான் பின்னதில் கவனம் செலுத்துகிறேன்" என்றார்.

"நீங்கள் அரசியலில் பங்கு கொண்டால் நன்றாக இருக்கும்."

"இந்தத் திக்கற்றவர்களைக் காப்பதை என் கடமை யாகக் கொண்டிருக்கிறேன். அங்கே போனால் எதுவும் செய்ய முடியாது" என்று சொன்னார்.

"ஆட்களை மாற்றுவதை விட அமைப்புகலை மாற்ற வேண்டும்" என்று நான் ரொம்பவும் அரசியல் தெரிந்த வனைப்போலப் பேசினேன்.

"அப்படிப் பேசுவது வெறும் வாய் அரசியலாக முடிந்து விடும். அது எதிர்காலத்துக்கு என்று வைத்துக் கொள்ள வேண்டும். நிகழ்காலத்தில் பொல்லாதவர்கள்

பதவிக்கு வராமல் மக்கள் பாதுகாத்துக் கொள்ள வேண்டும்" என்று சொன்னார்.

"சம உடைமைக்கும் பொது உடைமைக்கும் உள்ள வித்தியாசம் அதிகம் இல்லையே!"

"இருக்கிறது. தனிப்பட்டவர் எந்தச் சொத்தும் வைத்துக்கொள்ளக் கூடாது என்பது பொது உடைமை. எலலோரும் சமமான சொத்துக்கள் வைத்துக் கொள்ளலாம் என்பது சம உடைமை" என்றார். "நான் எனக்காக உழைத்துச் சம்பளம் வாங்கினேன். அது தனி உடமை; அப்புறம் பிறருக்காக என்று சம்பாதித்துச் சேர்க்கிறேனே அது நான் சமுதாயத்துக்குச் செய்யும் பணி. அதில் வரும் வருவாயைப் பிறருக்கு உடைமையாக்கு கிறேன். இது ஒரு வழி. எல்லாவற்றையும் நானே சம்பாதிக்க நினைக்காமல் மற்றவர்களுக்கும் வாய்ப்புத் தருவதும் இதுவே தான். அவர்களையும் சம உடைமை பெறும்படி செய்கிறேன் என்பது அதற்குப் பொருள். இதுதான் 'காந்தீயம்' என்றார்.

நான் இதுவரை காந்தீயம் என்பதற்குத் தவறான கருத்துக் கொண்டிருந்தேன். உண்மை பேசுவது; வன்முறையை விட்டு நீங்குவது என்று. ஓவியர் தந்த விளக்கம் என்னைச் சிந்தனையில் ஆழ்த்தியது. "காந்தியைப் பின்பற்றுவது என்றால் உண்மை பேசுவது; பலாத்கார மில்லாமல் நடந்து கொள்வது என்று நினைத்தேன்" என்று கூறினேன்.

"இது முறைகள்; முடிவுகள் அல்ல; காந்தியின் பாதையைத் தான் வற்புறுத்துகிறார்களே தவிர, அவர் லட்சியத்தை யாரும் வற்புறுத்துவது இல்லை. மக்கள் கொதித்து எழாமல் இருக்கக் காந்தியை இந்த வகையில் பயன்படுத்துகிறார்கள்" என்று சொன்னார்.

"சம உடைமையை வற்புறுத்தினார் என்று எப்படிக் கூற முடியும்?"

"அவர் தனக்குத் தேவையான துணிமணிகளை மட்டும் வைத்திருந்தார். தன் உழைப்பால் வாழ்ந்தார். பிறரிடம் பெறும் பொதுப்பணத்தை மற்றவர்க்குப் பயன்படுத்தினார். மிகக் குறைந்த செலவுள்ள உணவு. ஆடை இந்த நாட்டுச் சாதாரண மனிதரின் ஆடை; அதிலும் அவர் சமுதாயத்தைச் சுரண்டவில்லை; தன் மக்களுக்கு என்று எந்தச் சொத்தையும் ஈட்டவில்லை; எழுதி வைக்கவில்லை."

அதனால்தான் அவரை தேசபிதா என்று சொல்லு கின்றோம் என்று எண்ணத் தொடங்கினேன். எனக்கும் அவரைப் போல் ஏன் தொண்டு செய்யக் கூடாது? என்ற எண்ணம் உண்டாயிற்று.

அவர் மேலும் சொன்னார். "பல பேருக்குத் தெரியாது. அவரவர் பிள்ளைகள் தான் எதிர்காலத்தில் காப்பாற்றப் போகிறார்கள் என்று நினைக்கிறார்கள். அவர்கள் சொத்துக்கு வாரிசாக அமைகிறார்களே தவிர வேறு எந்தக் கைம்மாறும் செய்வதில்லை."

"அவரவர்கள் பிள்ளைகளுக்குச் செய்ய வேண்டியது கடமை; அதுக்கப்புறம் இந்தச் சமுதாயத்தின் வளர்ச்சிக்கும் தம்மாலானதைச் செய்ய வேண்டும். இதைத் தான் நான் வற்புறுத்துகிறேன். அதுக்குத்தான் இந்த உண்டி. கண்ணம்மா என்னிடம் வந்த பிறகு தான் இந்த உண்டியை வைத்திருக்கிறேன். அதற்கு முன்னால் நான் யாரிடமும் பணம் கை நீட்டி வாங்கியதில்லை. முன்னர் நீங்கள் தந்த போதும் மறுத்துவிட்டேன்."

"உண்டி எதற்காக? கேட்டு வாங்கலாமே."

"இதில்தான் ஒரு சிறந்த தத்துவம் இருக்கிறது. கொடுக்கிறது யார் கொடுக்கிறது எது என்று தெரியக் கூடாது. இதில் வற்புறுத்தல் கிடையாது. விளம்பரப் பிரியர்களுக்கு இது உதவாது. நிஷ்காமியமாக இப்பொரு

ளைத் தரவேண்டும். அதுக்காகத்தான் இந்த முறையைக் கையாளுகிறார்கள்" என்று விளக்கம் தந்தார்.

திருப்பதி உண்டி என் கவனத்துக்கு வந்தது. அதில் தாராளமாக வாரி வழங்கும் நல்ல உள்ளங்களைப் பாராட்டினேன். விளம்பரப்படுத்தித் தரும் கொடையாளிகள் இங்கே அடக்கமாகத் தன் கடமையைச் செய்வது கண்டு வியக்க முடிந்தது. அரசாங்கத்தை வரி கொடாமல் ஏமாற்றுபவர்களும், விளம்பரத்திற்காக நன்கொடை தருகிறவர்களும் மனிதத் தன்மையோடு நடந்து கொள்ளும் இன் கொடையாக இது விளங்குகிறது. அதைப் பார்த்துத் தான் அவர் இந்த உண்டி வைத்தார் என்பதைத் தெரிந்து கொண்டேன்.

என் மனம் சாதாரண காதல் விஷயங்களைக் கடந்து எங்கோ சென்றது. புரட்சி, காதல் என்று நினைத்து வந்த எண்ணம் 'சம உடைமையை'ச் சுற்றிச் சென்றது. புரட்சிக்காகக் கண்ணம்மாவை மணக்க விரும்பினேன். காதலுக்காக உஷா கிடைத்தாள். சமஉடைமை லட்சியத்தைச் செயற்படுத்த ஓவியர் வழிகாட்டியாக அமைந்தார்.

புரட்சி, காதல், சமஉடைமை மூன்றும் அர்த்தமுள்ள சொற்களாகக் காணப்பட்டன. அலட்சியம் என்னைவிட்டு நீங்க ஆரம்பித்தது, வாழ்க்கையில் லட்சியங்கள் மெல்ல இடம் பெற்றன.

## 6

இதைப்போலப் பல நாட்கள் ஓவியரை உந்து நிலையத்தில் கண்டு பேசி இருக்கிறேன். அது மிகவும் சுருசுருப்பான இடமாகவும் காணப்பட்டது. பஸ்ஸில் பொதுவாகப் பயணம் செய்கிறவர்கள் நன்றாகவே

உடுத்துகிறார்கள். சுருசுருப்பாகவே இருக்கிறார்கள். ஏதோ ஒரு குறிப்பிட்ட இடத்தை நோக்கியே செல்கிறார்கள். ஆனால் என்னைப் போல எந்த வேலையும் இல்லாதவர் களுக்கு அது ஒரு பொழுதுபோக்கும் இடமாகவும் இருந்தது. மற்றும் முன் குறிப்பிட்ட 'புரட்சி'தான் அங்கு இழுத்துச் சென்றது.

அங்குச் சென்ற பிறகுதான் மற்றொரு அனுபவமும் ஏற்பட்டது. ஓய்வு பெற்ற ஓவியர் ஓய்வில்லாமல் உழைப்பதைக் காண முடிந்தது.

அரிய செய்திகளை மிகவும் எளிமையாக விளக்கினார். படித்தவர்கள் பலரைப் பார்த்திருக்கிறேன். அவர்கள் தாம் கற்ற கல்வியிலும் துறையிலுமே சிறந்த வர்களாகக் காணப்படுகின்றனர். அவர்கள் சொல்லாத செய்திகளை இவர் சொல்வதைக் கண்டு வியப்பும் ஆர்வமும் பெருகின. லட்சியம் உடைய மாந்தர்க்கு அறிவும் தெளிவு பெறுகிறது என்பது அவரைப் பார்த்துப் பழகிய பிறகுதான் தெரிந்தது.

எப்பொழுதும் மனிதர்கள் கஷ்டங்களை நினைத்துக் கொண்டு அழுவது இல்லை. அழுகை தனிமையில் ஏற்படலாம்; பிறரோடு பழகும்பொழுது வாழ்க்கைச் சுமை குறைகிறது என்பதை உஷாவிடம் காண முடிந்தது. அவள் இப்பொழுது என்னிடம் தாராளமாகப் பழகினாள்; உணர்வு நிலை கடந்து அறிவு நிலையில் பழகினாள்.

வழக்கமாக 'அவள் ஒரு தொடர்கதை' பையைத் தோளில் மாட்டிக் கொண்டாள். ஆனால் அவள் அந்தக் கதாநாயகி போல பையில் லிப்ஸ்டிக்கும் கண்ணாடியும் வைத்திருக்கவில்லை. அதைப் பற்றி அவள் கவலைப்பட்ட தாகத் தெரியவில்லை.

"ஏன் நீங்கள் பஸ்ஸில் வருகிறீர்களா?" என்று உஷா ராணி கேட்டாள். அதுதான் அவள் முழுப் பெயர். இது

வரையும் சொல்ல மறந்து விட்டேன். அவள் பெயர் உஷாவாக இருந்தால் என்ன? உஷாராணியாக் இருந்தால் என்ன? அவள் ஆபீஸுக்கு உள்ளே உஷாராணி; நான் இரகசியமாக என் மனத்தில் நினைத்துக்கொள்வது 'ராணி'. அவளை வெளியே கூப்பிடுவது 'உஷா'. இந்த மூன்று வடிவங்களில் அவள் எனக்குப் பழக்கமாக இருந்தாள்.

வெளியே தேர்தல் கிறுக்கல்கள். 'உஷார் வா. ரா." என்று எழுதியிருந்தது. அதைப் பார்த்து எனக்குள் சிரித்துக் கொண்டேன். அது எந்தக் கட்சிக்காரர்கள் எழுதிய கிறுக்கல் என்பது பார்த்தாலே தெரிகிறது.

அந்தச் சுவர் கிறுக்கலை அவளுக்குக் காட்டினேன். அவளும் என்னோடு சிரித்தாள். என்னிடம் நீங்கள் உஷாராக இருக்கவேண்டும் என்பதைத்தான் அது காட்டுகிறது என்றாள்.

"பெண்களிடத்திலேயே கொஞ்சம் உஷாராக இருக்க வேண்டும்" என்று தத்துவம் பேசினேன்.

"இந்த மாதிரிச் சொல் விளையாட்டு நன்றாகத்தான் இருக்கிறது" என்று குறிப்பிட்டுவிட்டு நடந்தாள். நானும் அவளைப் பின் தொடர்ந்தேன். சிறிது நேரம் பொறுத்து நான் முன்னே போனேன். அவள் என்னைப் பின் தொடர்ந்தாள்.

ஆபீஸில்தான் எங்களுக்குள் உயர்வு தாழ்வு காட்டிக் கொண்டோம். வெளியே நாங்கள் நண்பர்கள் போலவே பழகும் உரிமையை எடுத்துக் கொண்டோம். சம உரிமை, சம அந்தஸ்து, சம உடைமை இந்த மூன்று சொற்களில் சமஉடைமை, சம அந்தஸ்து இரண்டும் நம்மால் பிறருக்குக் கொடுக்க முடியாவிட்டாலும் சமஉரிமையாவது தர வேண்டும் என்பதில் அசையாத நம்பிக்கை இருக்கிறது. ஓவியருடன் பழகிய பிறகும் சம அந்தஸ்தும் முதலில் கொடுத்துப் பழகினால்தான் சமதர்மப் பாதையை நோக்கிச்

செல்ல முடியும் என்று எண்ணத் தொடங்கினேன். 'சமஉடைமை' இந்த அரசியல் சூழலில் வரும் என்ற நம்பிக்கை எழவில்லை. அடிப்படைச் சட்டங்கள் மாற்றப் பட்டால்தான் இந்தச் சமநிலை உருவாகும் என்பதை என்னால் சிந்தித்துப் பார்க்க முடிந்தது.

"ஏன் நீங்கள்கூட பஸ்ஸில் போகிறீர்களா?" என்று கேட்டாள்.

"ஏன் நடந்து போகச் சொல்கிறாயா?"

"இல்லை ஏதாவது."

"கார் வாங்கச் சொல்கிறாயா?"

"ஸ்கூட்டராவது வாங்கலாமே."

"யோசித்துக் கொண்டு இருக்கிறேன். பின் இடம் காலியாக இருந்தால் ஸ்கூட்டருக்கே மரியாதை இல்லாமல் போய்விடும்" என்றேன்.

"அதில் குடும்பத்தோடு அதாவது குழந்தைகளோடு செல்லும் பொழுது அதன் மதிப்புத் தாழ்ந்து விடுகிறது" என்றாள்.

"ஒருவரை ஒருவர் பிடித்துக்கொண்டு விழாமல் செல்வது சர்க்கஸ் விளையாட்டுப்போல் காணப்படுகிறது" என்றேன்.

"அந்த நிலையில் நிச்சயம் கார் வாங்கிவிடுவேன்"— என்று மேலும் முடித்தேன்.

"தலையில் ஹெல்மெட்டுப் போட வேண்டும்."

"வழுக்குத் தலைவரும் காலத்தில் ரொம்ப அவசியம்" என்றேன். இந்த வயசிலே அதை மாட்டிக்கொள்ளப் பிடிப்பது இல்லை."

"என்ன செய்வது. பின்னாலே மூளை சிதறுவதை விடத் தற்காப்புச் செய்து கொள்வது நல்லது தானே."

''இப்பொழுது சிதறவில்லை என்று சொல்லு கிறாயா?''

"புத்தி சிதறிவிட்டது. மூளை சிதறவில்லை'' என்றாள்.

அவள் யாரைக் குறிப்பிடுகிறாள் என்பதைத் தெரிந்து கொண்டேன்.

"அவள் கணவனை இழந்தவள்.''

"அதற்காக 'உங்களை' இழக்க வேண்டுமா?''

அதற்கு அர்த்தம் தெரியவில்லை. அவள் என்ன சொல்கிறாள் என்பதை முதலில் தெரிந்துகொள்ள முடிய வில்லை. என்னை நான் இழப்பதைக் குறிப்பிடுகிறாளா? அவள் என்னை இழப்பதைக் குறிப்பிடுகிறாளா? என்பது விளங்கவில்லை. இங்கே சொல் அவளிடத்தில் விளையாடியது.

''சித்திரப்பாவை' படித்திருக்கிறாயா'' என்று கேட்டேன்.

"அதன் ஒவ்வொரு பாத்திரத்திலும் ஒன்றிப்போய் இருக்கிறேன். இப்பொழுது கதை சொல்லட்டுமா?'' என்றாள்.

"அப்படியானால் நடந்து கொண்டே பேசலாம். வீட்டுக்குப் போகச் சரியாக இருக்கும்'' என்றேன்.

கதைத் தொடக்கத்தில் ஓர் ஏழை ஒருத்தியை அந்த இளைஞன் வரைகிறான். அவன் பார்த்த உருவம் வேறு; வரைந்த உருவம் வேறு. அவள் சென்னையில் எவ்வாறு சீரழிந்து நிற்பாள் என்று கற்பனை செய்து எழுதினானே அது என்னை வியப்பில் ஆழ்த்தியது என்றேன்.

"அதுபோல, நீ தியானம் செய்யும் அவள், ஆகிவிடு வாள் என்று நினைக்கிறாயா?''

"இல்லை. அந்த எழுத்தாளனின் கற்பனையை வியக்கின்றேன்."

"நீ குறிப்பிடும் 'அவள்' அவளாக இருக்க வேண்டு மானால் அவள் அந்த நிலைக்குச் செல்லவிடக்கூடாது" என்றேன்.

"அதற்கு ஓவியர் இருக்கிறார். பார்த்துக் கொள்வார்" என்றாள்.

"உனக்கு உணர்வே மங்கிவிட்டது என்று நினைக்கிறேன். வெறும் சோறு போட்டால் போதுமா?"

"உண்ண உணவு, உடுக்க உடை, இருக்க வீடு இதுதான் அவசியம். அப்படித்தான் பலர் சொல்லக் கேட்டு இருக்கிறேன்."

"இவை மனிதருக்கு அவசியமானவை. மனிதனை விலங்கு நிலையில் மதிப்பிடும் போது இவை போதும்."

"நீங்கள் தான் அவளிடம் வாங்கிக் கட்டிக் கொண்டீர்களே."

"அவள் அப்படி நேருக்கு நேர் கேட்பாள் என்று எதிர்பார்க்கவில்லை."

"சரி இப்பொழுது?"

"இன்னும் முடிவுக்கு வரவில்லை. ஓவியரைக் கேட்டுத் தான் முடிவு செய்யவேண்டும். அவர் சொன்னால் நான் ஒப்புக் கொள்வேன்."

"அவர் அறிவாளி. அவசரப்பட்டு உங்களுக்கு அப்படிச் சொல்ல மாட்டார்."

"ஏன் புரட்சி அவருக்குப் பிடிக்காதா?"

"புரட்சிக்காகவே புரட்சி என்பதை அவர் ஒப்புக் கொள்ள மாட்டார். அவசியத்துக்காகத்தான் புரட்சி செய்ய ஒப்புக்கொள்வார்."

"அவர் வயதானவர். அவருக்குப் புரட்சி பிடிக்காது. கலியாணம் ஆகாதவர்; வாழ்க்கையில் எந்தச் சுகத்தையும் காணாதவர்; வெறும் பொம்மைகளையே கண்டவர்; நிறத்திலேயே நின்றுவிட்டவர்."

"அவர் தன் சொந்த ஆத்ம திருப்திக்காக இந்தத் தொண்டு செய்கிறார். அது ரொம்ப நாளைக்கு இருக்காது; அதைவிட வேறு ஒருவருக்கு அவசியமான உதவி செய்ய வேண்டி வந்தால் அவளைக் கைவிட்டு விடுவார்."

"எப்படிச் சொல்கிறாய்?"

"அவர் நிலையான கொள்கையாளராக இருந்தால் எப்பொழுதோ மணம் செய்து கொண்டிருப்பார். கல்யாணம் செய்து கொள்வதா வேண்டாமா; இவளா, அவளா, இந்தச் சலன புத்திதான் அவரை ஒரு நல்ல முடிவுக்கு வராமல் செய்துவிட்டது. பொம்மை எழுதுவது தொழில். அதுவே அவர் வாழ்வின் பிடிப்பாக அமைந்து விட்டது. அவ்வளவு நல்லதாகப் படவில்லை" என்றேன்.

"அது நடந்த காலம். இப்பொழுது அவர் தொண்டில் தான் அமைதி காண முடியும்." இது அவள் வினா.

"நான் அதை ஒப்புக்கொள்ள முடியாது. அவள் பெண்; அழகாகவும் இருக்கிறாள். அவரை மட்டும் அவள் கவரமாட்டாள் என்று எப்படிச் சொல்ல முடியும். எதை அவர் இளமையில் அனுபவிக்க மறந்தாரோ அதை அவர் வெறும் உறவால் அடைய முயல்கிறார். பெண்மை மனிதருக்கு மிகவும் அவசியம். அந்த எண்ணம் தான் மனிதனை வாழத் தூண்டும்; அவர் அந்தப் பிடியிலிருந்து முற்றிலும் விலகிவிட்டார் என்று கூற முடியாது. அவர் குழந்தை இன்பத்தையும் கண்டவர் அல்ல. தன் சொந்த வாழ்வில் அடையாத ஒரு முழுமையைத் தன் தொண்டில் காண முயல்கிறார்" என்று அவளுக்கு விளக்கினேன்.

"அப்படி என்றால் அவளை..."

"அவர் ஒன்றும் செய்ய முடியாது. அவள் அவரை விட்டு விலகி விடுவாள். அவரிடம் அவள் பொருளாதார உரிமையை நாடுகிறாள். அது முதற்படி. இரண்டாவது நிலையில்..."

"உங்களை மணப்பாள்..."

"நிச்சயமாக, எனக்கு அதில் நம்பிக்கை இருக்கிறது. அவள் எப்பொழுதும் எனக்காகக் காத்துக் கிடப்பாள். இல்லாவிட்டால் அவள் அவ்வளவு துணிவாகக் கேட்க மாட்டாள். சிந்தனை இல்லாமல் சொல் பிறவாது" என்றேன்.

"அப்பொழுது நீங்கள்..." கொஞ்சம் மரியாதை கலந்து பேசினாள்.

"எனக்கே உரிய சலனம்தான் என்னைச் சீக்கிரம் ஒரு முடிவுக்கு வராமல் செய்கிறது" என்றேன்.

அவள் மெல்லப் பேச்சை மாற்றினாள். 'அவளைப்' பற்றிப் பேச அவள் விரும்பவில்லை. "அவர்கள்" படத்தைப் பார்த்தீர்களா?" என்றாள். அதற்குப் பிறகு மரியாதை யாகவே பேசத் தொடங்கினாள்.

"பார்த்தேன்."

"அதில் எந்தப் பாத்திரம் பிடித்திருக்கிறது?"

"இது என்ன நாவலா? பாத்திரம் பிடித்திருக்கிறது என்று கேட்பதற்கு."

"நாவலில் மட்டும் ஏன் அப்படிக் கேட்கிறார்கள்?"

"அது மாதிரிக் கதை எழுதுகிறவர்கள் பழக்கி விட்டார்கள். பாத்திரங்களைப் படைப்பதே அவர்களின் லட்சியமாக இருந்து வருகிறது."

"அது அவசியம் தானே."

"சமூக உணர்வையும், வாழ்க்கைப் பிரச்சனைகளையும் அலசிக் காட்டும்பொழுது பாத்திரங்களுக்கு முக்கிய இடம் கொடுக்க முடியாது."

"அவர்கள்" என்ற படமும் அப்படித்தானே."

"வாழ்க்கைப் பிரச்சனை அது. குடும்பத்திற்காக உழைத்து, இயந்திரம்போல் வாழும் பெண்ணின் கதை 'அவள் ஒரு தொடர்கதை'. கணவன் கொடுமையால் வாழ முடியாமல் தவிக்கும் பெண்ணின் கதை 'அவர்கள்'.

"நான் ஒப்புக் கொள்ள முடியாது. பாத்திரப்படைப்பு இல்லாவிட்டால் எந்தச் சமூகப் பிரச்சனை நாவலும் சிறப்புப் பெறாது" என்றாள். அது அவள் ரசனை.

"இதில் காட்டப்படும் பாத்திரத்துள் உனக்குப் பிடித்த பாத்திரம்."

"அத்தை தான்."

அப்படி அவள் சொல்லும்பொழுது என் அம்மாவின் நினைவு என்னுள் ஓடியது. என் தாய்தான் மிக உயர்ந்தவள் என்ற நினைவு மேலும் வலுப்பெற்றது.

"அதில் வெறுக்கத்தக்க பாத்திரம்?"

"என் கணவனைப் போலவே நடிக்கும் அவன்தான்' என்றாள். வாய் தவறி அந்த உவமையைச் சொல்லி விட்டாள். இப்படியும் மனிதர்கள் இருக்கிறார்கள் என்று காட்டியது தான் அந்தக் கதையின் சிறப்பு என்றாள்.

இந்தக் கதையின் விமர்சனம் எங்கள் நடைப் பயணத்துக்கு முடிவு செய்து விட்டது. இவ்வளவு விரைவாக நாங்கள் பிரிவோம் என்று எதிர்பார்க்கவில்லை.

"என்னடா யோசனை பண்ணுகிறாய்?" அப்பொழுது தான் நான் வீட்டில் இருக்கும் உணர்வு ஏற்பட்டது. 'அவர்களில்' வரும் அம்மா போல என் அம்மா காணப் பட்டாள்.

உஷாவைப் பற்றிய சிந்தனையில் சுழன்று கொண்டிருந்தேன்.

"ஆபீஸ் விஷயம்" என்று அம்மாவை அனுப்பி விட்டேன்.

"அவர்கள்" படம் "உஷா" இரண்டும் என் சிந்தனையில் இடம்பெற்றன. அவர்கள் என்ற படத்தின் கதை என்ன? அவள் ஓர் அழகி. அவனால் அவளை வைத்துக் கொண்டு வாழமுடியவில்லை. அவளை வெறுக்கிறான். அவள் எது செய்தாலும் பிடிக்கவில்லை. அவளை வாட்டுவதே அவன் தொழிலாகிறது. சிலரைத் துன்புறுத்தலே சிலருக்கு மனப் பழக்கமாகி விடுகிறது. அதிலே ஒரு சந்தோஷம். இதை ஆங்கிலத்தில் 'Sadism' என்கிறார்கள். தமிழில் சரியான வார்த்தை கிடைக்கவில்லை. 'துன்புறுத்தி மகிழ்தல்' என்றுதான் கூறமுடிகிறது.

அழவைப்பதிலே அவனுக்குத் தனி இன்பம். அவள் வாழக் கூடாது. அவள் குழந்தைக்குத் தாயாகி விடுகிறாள். எப்படி? சில நேரங்களில் மனிதன் மிருகமாகி விடுகிறான். அதற்கு அவர்கள் தாய்மை ஓர் அடையாளம். அதற்குப் பிறகு மறுபடியும் அவன் மனிதனாகி விடுகிறான். அங்கே தான் தொல்லையே ஏற்படுகிறது. மிருக உணர்வே மேல் என்ற நினைப்புத் தோன்றுகிறது. மனிதனுக்கே உரிய கீழ்மை, சூழ்ச்சி, வெறுப்பு அத்தனையும் அவனிடம் குடி கொண்டு விடுகின்றன. இது திரைப்படக் கதை. இப்படியும் மனிதர்கள் இருக்கிறார்கள் என்பதை அப்படம் உணர்த்தும் பொழுது ஆச்சரியப் பட வேண்டியுள்ளது.

அந்தப் படத்தோடு அவள் வாழ்வு ஒற்றுமை பெற்று இருக்கிறது என்று சொன்னாள். அவள் கணவனால் ஒதுக்கப்பட்டவள்; வெறுக்கப்படுகிறாள் என்பதை உணர்ந்து கொண்டேன். அவன் ஒரு மனித மிருகமாகத்தான் இருக்க வேண்டும். பெண்ணின்

இதயத்தை உணராத பேயனாகத்தான் இருக்க வேண்டும். கட்டியவளைக் கலங்க வைத்த கயவனாகத்தான் இருக்க வேண்டும். அவன் என்னதான் நினைக்கிறான்? அவள் இப்படியே கருகிய மொட்டாகக் கசங்கி நசுங்கி நலிய வேண்டுமா? அவள் இதயம் சுக்கு நூறாக வெடித்து வேதனையில் சூழ வேண்டுமா? கொழுகொம்பு இல்லாத செடி இவ்வுலகில் வாழ முடியுமா? கற்பு என்னும் உன்னத லட்சியத்தைக் காக்கக் கணவன் துணை செய்ய வேண்டாமா? அவளுக்கு மனம் சஞ்சலிக்காதா? சலனங்கள் ஏற்பட்டால் அவள் நிலை என்ன ஆகும்? மறுபடியும் அவன் எப்படி அவளை வைத்துக்கொண்டு வாழ முடியும்? கறைபட்ட வாழ்க்கையை அவன்தானே ஏற்படுத்திக் கொடுக்கிறான்? ஏன் அவளை உதாசீனப் படுத்தினான்.

இந்த நாட்டில் மாமியாரின் கொடுமையால் வாழ முடியாமல் தவிக்கும் மங்கையர் பலர்; எவ்வளவோ பேர். இது சாதாரண நிகழ்ச்சி; நாளைக்கு என் தாயும் நிச்சயமாகத் தான் மாறப் போகிறாள். அவள் விரும்பித் தேடிக் கட்டி வைக்கும் மருமகள்தான் நாளை பகையாக மாறிவிடுகிறாள். அப்படி ஏதாவது கொடுமை ஏற்பட்டிருக்க வேண்டும். அவள் மாமியார் தான் பையனை மாற்றி இருக்க வேண்டும். அல்லது அவனே மனச்சிக்கல் உடையவனாக இருக்க வேண்டும். மேல் நாட்டில் என்னென்னமோ சிக்கல்களைக் கூறுகிறார்கள். 'தாழ்வு மனப்பான்மை' என்பது அவன் மனோவியாதியாக இருக்கலாம்.

"உன் கணவன் உன்னைவிட அழகாக இருப்பானா? இப்படி ஒருமுறை அதற்குப்பின் கேட்டிருக்கிறேன்.

"இல்லை. அழகில்லாதவன் என்று கூறமுடியாது. அழகுக்காக அவனை எப்பொழுதும் மதித்தது இல்லை."

"அப்படி என்றால்?"

"கணவன்; அதற்காக மதித்தேன்."

இவள் பழங்காலத்துப் பெண்ணாகவே காணப் பட்டாள்.

"அவன் அழகாக இல்லை என்பதால் உனக்கு அவனைப் பிடிக்க வில்லையா? என்று துணிந்து கேட்டு விட்டேன்.

அவள் கண்கள் நீரை உதிர்த்தன. முத்து எப்படி இருக்கும் என்பதை நான் சரியாகப் பார்த்தது இல்லை. அந்தக் கண்ணீரில் அதைப் பார்க்க முடிந்தது.

"கணவன் அழகாக இல்லை என்று எந்தப் பெண்ணும் ஒதுக்கியது இல்லை. ஒதுக்கவும் மாட்டாள்" என்று தத்துவம் பேசினாள்.

இது எனக்கு ஆச்சரியமாகத்தான் இருந்தது. ஆண் கள் பலர் மனைவி அழகாக இல்லை என்று கூறி ஒதுக்கு வதைப் பார்த்து இருக்கிறேன். பெண் தனக்கு அழகு இல்லை என்பதற்காக வருந்தத்தான் செய்கிறாள். ஆனால் அவளுக்கு உணர்வு என்பதனைப் படைப்பில் ஏற்படுத்திய பிறகு எப்படி அவளால் தனித்து வாழ முடியும். எப்படி யாவது அவள் தாயாக வேண்டும் என்று துடிக்கிறாள். அதற்கப்புறம் அந்தக் குடும்பங்கள் சரியாகப் போய் விடுகின்றன. இரண்டு மூன்று குழந்தைகளுக்குத் தாயாகி விடுகிறாள். அதற்கப்புறம் அவள் தான் ராணி. அவன் சேவகன். கதையே மாறிவிடுகிறது.

மனைவி அழகாக இருப்பதை ஒவ்வொரு ஆடவனும் விரும்புவான் என்று இதுவரை நினைத்து வந்தேன். அதுவே அவளுக்குப் பகையாக முடிந்தது என்று கேட்கும் பொழுது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. அவள் அழகிய உருவம் என் முன் ஓர் ஓவியமாகக் காட்சியளித்தது. ஒவ்வொரு

சுளையாக நுகர வேண்டிய கனியை அவன் கடித்து உமிழ்ந்தான் என்பது தான் எனக்குப் பட்டது. கரும்பின் சாற்றைச் சுவைத்து நுகர்ந்த பின் தான் அதனைத் துப்புவதைக் கண்டிருக்கிறேன். அதன் நுனிப்பகுதியை மட்டும் கடித்துப் பார்த்து விட்டுக் கசக்கிறது என்று சொல்வது போல அவள் கதை எனக்கு இருந்தது.

''நான் சிரிப்பேன்'' இது அவள் என்னிடம் சொல்லியது.

"நான் சிரித்தால் அவன் முகம் உடனே சிணுங்கும். நீ இப்படித்தானே மற்றவர்களிடமும் சிரிப்பாய்" என்று கேட்பானாம்.

இது புதுவகை ஊடலாக எனக்குப் பட்டது.

"நான் கண்ணுக்கு மையிடுவேன். அது யாரை மயக்க? என்று கேட்பான்."

"ஏன் அவனுக்கு இந்தப் புத்தி வந்தது?"

"அவனுக்கு என்னை அனுபவிக்கத் தெரியவில்லை."

அவள் அவ்வாறு கூறியது எனக்குப் பச்சையாகவே பட்டது. வெறுப்பில் இதுபோலச் சொற்கள் வருவது இயற்கை என்பதைப் பார்த்திருக்கிறேன்.

ஓவியத்தைக் கலைஞன்தான் இரசிக்க முடியும்; மற்ற வர்களுக்கு அது வெறும் படமாகத்தான் தெரியும். போகட்டும் படமாகவாவது மதித்து அவன் கண்ணாடி போட்டு மாட்டித் தன் வீட்டில் வைத்திருக்கலாமே என்று நினைத்துக்கொண்டேன்.

"நீ இப்பொழுது யார் வீட்டில் இருக்கிறாய்?"

"என் அம்மா வீட்டில், எனக்குத் தம்பி ஒருவன் இருக்கிறான். அவன் படிக்கிறான். தங்கை ஒருத்தி இருக்கிறாள். அவள் படிப்பை முடித்துவிட்டு வீட்டில் இருக்கிறாள். அப்பா சப்-இன்ஸ்பெக்டராக வேலை செய்து

வந்தவர். அவர் லஞ்சமே வாங்கியது இல்லையாம். நல்ல பெயராம். அப்படிச் சொல்லிக் கொள்கிறார். இப்பொழுது யாரும் அவரை மதிப்பதில்லை.

அவள் அப்பாவைப்பற்றிக் கேட்பது எனக்குச் சுவராசியமாக இருந்தது.

"இப்பொழுது அவருக்குப் பென்ஷன் வருகிறதா?" என்று கேட்டேன்.

"எல்லாம் சேர்ந்து அறுநூற்று எண்பது ரூபாய் வருகிறது. அம்மா, நான், தங்கை, தம்பி அத்தனை பேரையும் அவர் காப்பாற்ற வேண்டும். நான் சம்பாதித்த பிறகு தான் வீடு கலகலப்பாக இருக்கிறது. டெலிவிஷன் கூட வாங்கி வைத்திருக்கிறோம்" என்று ஒருவிதமாக அந்தக் குடும்பத்தைப் படம் பிடித்துக் காட்டினாள்.

"ஏன் அவசரப்பட்டுக் கலியாணம் செய்து விட்டார்கள்?"

"அது அவர் செய்து கொள்ளவில்லை. அவர் அப்பா செய்து வைத்தார்."

"உங்கள் வீட்டில்?"

"என் அம்மா செய்து வைத்தாள். அவளுக்கு நெருங்கிய உறவுக்காரன். இப்பொழுதுகூட அம்மா அவருக்காகக் கொஞ்சம்கூட விட்டுக்கொடுக்காமல் பேசுவாள்."

மேலும் தொடர்ந்தாள்.

"எனக்கு ஒன்றுமே தெரியாது. நான் அப்போது பி.யூசி. தான். நான் இப்பொழுது நினைத்துப் பார்க்கிறேன். எனக்கு எத்தனையோ வாய்ப்புகள் கிடைத்தன. எல்லாம் தப்பு என்று நினைத்து வாழ்ந்துவிட்டேன். நான் பஸ்ஸிலே போனால் யாராவது என்னைப் பின்தொடர்வார்கள்.

அதை முன்னால் ரசிப்பேன். இப்போது அஞ்சுகிறேன்" என்றாள்.

இரண்டு சுவைகள் அவளிடம் மோதின. அப்போது ரசனை. இப்போது அச்சம்.

"அது தப்பு இல்லையா?"

"நான் எதுக்குச் சொல்கிறேன் தெரியுமா? அப்பொழுது எல்லாம் எனக்கு ஒன்றுமே தெரியாது. அதிலே ஒருத்தரைக் காதலித்து இருக்கக் கூடாதா என்று நினைக்கிறது உண்டு."

நான் பேசவில்லை. என்ன சொல்வது என்று தெரியவில்லை. அவளே தொடர்ந்து பேசினாள்.

"அழகை ரசிக்கத் தெரிந்தவனுக்கு நான் வாழ்க்கைப் படவில்லையே என்று வருந்துகிறேன். நான் ஒரு லட்சிய மனைவியாக இருந்தேன்; அவன் என்னை அலட்சியப் படுத்தினான். என்னை அவனுக்கு அடிமைப்படுத்தினேன். அவன் என்னைக் கொடுமைப்படுத்தினான். நான் அவனுக்கு என் அழகைத் தந்தேன். அவன் எனக்கு அழுகையைத் தந்தான். ஆண்டவன் ஏன் எனக்கு அழகைத் தந்தாய் என்று இறைவனிடம் முறையிட்டேன். நல்ல ஒரு வீணை. அவன் அதைப் புழுதியில் எறிந்தான். அவன் ஒரு நாள் வாய் திறந்து கேட்டான். நீ என்னை எப்படி விரும்புகிறாய்? நான் அழகாக இல்லையே என்றான். அதுதான் கடைசி. வீணையைத் தொடவும் அவனுக்கு அருகதை இல்லை. என்னால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. "சீ..! நீ ஒரு மனிதனா? எழு! போ! என் கட்டிலில் உனக்கு இடம் இல்லை." என்றேன்.

அவன் வெறிகொண்ட மிருகமானான். என்னை அசிங்கப்படுத்தினான். அது எனக்குப் பிடிக்கவில்லை. மறுபடியும் அவனிடம் அவன் கேட்ட கேள்வியைத் திருப்பிக் கேட்டேன். "நீ என்னை விரும்புகிறாயா?" என்று.

அவனுக்கு அப்பொழுது பசி இல்லை. "எனக்குத் தேவையில்லை" என்றான்.

எதற்காக நான் அவனை விரும்பவேண்டும். அவன் அழகால் என்னைக் கவரவில்லை; அன்பால் என்னை அணைக்கவில்லை. ஆசையால் என்னைத் தழுவவில்லை. விரும்பி என்னிடம் பேசியது இல்லை. காதலால் என்னை நெருங்கியது இல்லை. அவன் என் கணவன். நான் அவன் மனைவி. அதாவது அவன் தாலி கட்டிய மனைவி.

அந்த ஒரு புனிதமான உறவுக்காகத்தான் இன்னும் அவனைப் பற்றி நினைக்கிறேன். குருடனிடம் சித்திரத்தைத் தந்தால் அவன் அதைத் தடவிப் பார்ப்பான். அவனுக்கு எதுவும் தட்டுப்படாது. ரசிக்கத் தெரியாது. சித்திரத்தை ரசிக்காவிட்டாலும் பரவாயில்லை. அதைச் சித்திரவதை செய்யாமல் இருந்தால் போதும்."

இதைப்போன்ற செய்திகளை அவ்வப்பொழுது என்னிடம் சொல்லியிருக்கிறாள். தொடர்ந்து சொல்லா விட்டாலும் அவ்வப்போது பேசியதைக் கோவையாக வைத்துப் பார்க்கிறேன்.

"நீ அவனை விவாகரத்து செய்துகொள்ளக் கூடாதா?" என்று அவசரப்பட்டுக் கேட்டுவிட்டேன்.

அவள் என்னை விழுங்குவது போல் பார்த்தாள். அதற்குப் பிறகு நான் அவளை ஏற்றுக்கொள்ள முடியுமா என்று அவள் கேட்பதுபோல் இருந்தது. அவள் பார்வை யிலிருந்து விலக முயன்றேன். திக்கு முக்காடினேன்.

"உன் அப்பா சப்-இன்ஸ்பெக்டர் என்கிறாயே! அவனைத் திருத்தக்கூடாதா?"

அவள் சிரித்தாள். அவர் பழகிய மனிதர்கள் பெரும் பாலும் குற்றவாளிகள்தாம். குற்றவாளிகளைத் திருத்த முடியாததால்தான் அவர்களைச் சிறைப்படுத்துகிறார்கள்.

தீமையைக் கட்டுப்படுத்த முடியுமே தவிரத் தடுக்க முடியாது. அவர் இப்பொழுது பொய் மதிப்பிலும் மரியாதையிலும் வாழ்கிறார். அவர் வேலை செய்த காலத்தை நினைத்துக்கொண்டு பார்க்கிறார். கான்ஸ்டபிள் தூர வரும்போதே 'சல்யூட்' அடிப்பான். எங்கும் மரியாதை. அவர் வேலை நீங்கிய பிறகு யார் மதிக்கிறார்கள். அவரிடம் பேசவே மாட்டார்கள். வீட்டிலேயே அவர் ஒதுங்கியே வாழ்கிறார். ஓய்வு பெறுபவர்களிடம் காணும் தனிப் பண்பு அவரிடமும் காணப்படுகின்றது."

"அம்மா வருந்தவில்லையா?"

"அவள் எப்பொழுதும் குத்திக்கொண்டே இருப்பாள். எப்படியாவது நான் அவனோடு வாழவேண்டும். இந்த வீட்டை விட்டுப் போகவேண்டும். அவன் அடித்தாலும் உதைத்தாலும் அவன் காலடியில் விழுந்து கிடக்க வேண்டும் என்று. நான் இப்போது நினைக்கிறேன் அவனோடு வாழ முடியாது என்று."

"இப்படியே இருந்துவிட முடியுமா?" இது என் கேள்வி. அவசியமில்லாத ஆனால் அவசரமாக எழுந்த கேள்வியாக இருந்தது.

"அதே கேள்விக்குத்தான் பதில் தேடுகிறேன். அதற்காகத்தான் உங்களை 'அவர்கள்' படம் பார்க்கச் சொன்னேன்."

என் நிலைமை எனக்குப் புரியவில்லை. துணிந்து காதல் செய்யும் காதலன் நிலையில் இருக்கிறேனா? அல்லது அவளைச் சுற்றி வட்டமிட்டு ஏங்கி நிற்கும் 'கமலஹாசன்' நிலையில் இருக்கிறேனா? தெரியவில்லை.

"அந்தக் கதை முடிவு சரியாக இல்லை?" என்றேன் நான்.

"வேறு எப்படி முடிந்திருக்க வேண்டும்" என்று கேட்டாள்.

"கமலஹாசனை மணம் செய்து கொண்டிருக்கலாம்" என்றேன்.

"இது அடுத்த எல்லை. பெண் தன்னை உதாசீனப் படுத்துபவனையும் விரும்பமாட்டாள். தன்னை வழிபட்டு ஏங்குபவனையும் விரும்பமாட்டாள்" என்று தன் முடிவைக் கூறினாள்.

"அப்படியானால் அவள் தன் காதலனை மணந்து கொண்டிருக்க வேண்டும்" என்றேன்.

"அது அவள் நிலையைக் கடந்துவிட்டது; சூழ்ச்சி வென்று விட்டது" என்றாள்.

"குழந்தைக்குத் தாயாக இருப்பதுதான் நல்லது. கதை முடிவு அழகாக இருக்கிறது" என்றேன்.

"வேறு வகையாக முடித்திருந்தால் 'செண்டிமெண்டு' அந்தப் படத்துக்கு எதிராக அமைந்திருக்கும். சில நாள் கூட ஓடி இருக்காது."

"வாழ்க்கையில் நடக்கும் தவறுகளையாவது ஏற்றுக் கொள்வார்கள். கதையில் நடக்கும் தவறுகளை ஏற்றுக் கொள்ளமாட்டார்கள்." என்றேன் நான். நாவல் படித்த அனுபவத்தில் இவ்வாறு கூறினேன்.

"அவள் குழந்தைக்குத் தாய் என்று காட்டிவிட்டு வேறு எப்படி முடிவு கூறமுடியும். அந்தப் படம் எனக்கு விடை தரவில்லை."" என்று முடிவு கூறினாள். அதை அவளைத் தாய்மையில் முடித்துவிட்டது.

நல்ல காலம் உஷா தாயாகவில்லை. அவள் வாழ்க்கை அவ்வளவு விரைவில் அஸ்தமித்து விடாது, குழந்தைக்குத் தாயாகிவிட்டால் பெண்மையே அடங்கி விடுகிறது என்பது அவள் சித்தாந்தம். கதாசிரியர்,

போட்டியாக அவள் ஒருவனை மணந்து காட்டி இருக்க வேண்டும் என்று என் கருத்தைத் தெரிவித்தேன்.

"சரியான பாடம்தான்" என்றாள். எனக்கு அவளிடம் அதிகமான ஈடுபாடு ஏற்பட்டது.

## 7

அன்று விடுமுறை. ஞாயிற்றுக்கிழமை. ஓவியர் அன்று படம் வரையச் செல்லவில்லை. வாரம் ஏழு நாட்கள். ஒரு நாள் விடுமுறை கிடைக்கிறது. அதை அவர் வேலை செய்து வந்த நாட்களில் அனுபவித்து இருக்கிறார். அதே பழக்கம் அவரை விடவில்லை. தான் எழுதிவரும் ஓவியத்துக்கும் அன்று விடுதலை தந்துவிட்டார்.

அவர் வாழ்ந்த குப்பத்தில் அவரை 'வாத்தியார்' என்றே அழைத்து வந்தார்கள். அதாவது அவர் பள்ளிக் கூடத்தில் வேலை செய்து வந்தவர் என்பது அர்த்தம். ஓவியர் என்றால் அங்கு இருக்கின்றவர்களுக்குத் தெரிவதில்லை.

அவர் 'மக்கள் மன்றம்' என்ற ஒன்றைத் துவக்கி நடத்தி வருவதாகச் சொல்லியிருந்தார். அங்கு வந்து அதைப் பார்த்துப் போகும்படி சொன்னார். மன்றம் என்று சொல்லும் பொழுது என் கல்லூரி நாட்கள் நினைவுக்கு வருகின்றன. கல்லூரியில் இலக்கிய மன்றங்கள் தெரியும். பட்டிமன்றங்கள் பார்த்திருக்கிறேன். கவியரங்கங்கள் கேட்டிருக்கிறேன். மிகவும் பிடித்தமான கூட்டங்கள்; வாழ்க்கைக்குத் தொடர்பில்லாத பேச்சுகள் நடைபெறும். கேட்பதற்குச் சுவாரசியமாக இருக்கும். கவிஞர்கள் சொல்லடுக்கோ அழகாக இருக்கும். விஷயம் ஒன்றுமே இருப்பதில்லை. இலக்கிய மன்றங்களில் சொற்பொழிவுகள் நடக்கும். சிலப்பதிகாரம் தவிர வேறு எதுவும் பேசிக்

கேட்டதில்லை. பட்டி மன்றங்களில்' பேசியவர்களே பேசுவார்கள். காரமான பேச்சு சாரம் எதுவும் இருக்காது. தம்பியர்களில் யார் சிறந்தவர்கள் என்பார்கள். கற்பில் சிறந்தவள் கண்ணகியா மாதவியா என்பது பற்றிப் பேசு வார்கள். முடிவு நீதிபதி சொல்லுவார். நீதிபதிப்பதவி மேடையோடு முடிந்து விடும். சொல்லாற்றல் வியக்கத் தக்கதாக இருக்கும்.

ரசிக மன்றங்கள் நிறையப் பார்த்திருக்கிறேன். பழகியது இல்லை. சிவாஜி மன்றம், எம்.ஜி.ஆர். மன்றம், கலைஞர் மன்றம் இப்படியே மன்றங்களைப் பார்த்திருக் கிறேன். எனக்கும் பழைய காலத்து பஜனை மடங்கள் சில சமயம் நினைவுக்கு வருவது உண்டு. இவை எல்லாம் தேர்தல் காலத்துக்காகப் பயன்படுத்துவதற்காக எழுப்பப் படுகிறது வழக்கம் என்பதை அறிய முடிந்தது. இவற்றில் ரசிகத் தன்மையைவிட அரசியல்தான் தலைமை பெற்றது. அதுகூட தேர்தலுக்காகவே ஏற்படுத்தப்படுகின்றன.

வ.உ.சி. மன்றம் என்பது எனக்குப் பழக்கமான மன்றம். அது வ.உ.சியைப் பற்றி இருக்காது. கட்சிப் பிரச்சாரத்துக்காக அமைக்கப்பட்ட இடம். ஆபீசில் வேலை செய்கிறவர்கள் அரசியலில் நேராகக் கலக்க முடிவதில்லை. அதற்காக இந்தப் புனை பெயர்கள் என்பது பின்னால் தெரிந்து கொண்டேன்.

தனிப்பட்ட தலைவர்களின் பெயர்களை வைக்காது பொதுவாக மக்கள் மன்றம் என்று வைத்தது எனக்கு நியாயமாகப் பட்டது.

அதுதான் அவர் ஞாயிற்றுக்கிழமை பொழுது போக்கும் இடம் என்பதை அறிந்தேன். என்னை அங்கு வரும்படி அழைத்திருந்தார். எனக்கும் அங்குச் செல்ல வேண்டும் என்ற ஆசையும் எழுந்தது. 'அவளை' என்னால் மறக்க முடியவில்லை. அங்கு அவளைச் சந்திக்கும் வாய்ப்புக் கிடைக்கும் என்று எதிர்பார்த்தேன்.

அதற்கு முன் வாரம் உஷா அவள் என்னைத் தன் வீட்டுக்கு அழைத்திருந்தாள். நான் துணிந்து போனேன். நான் அவளுக்கு மேல் அதிகாரியாகப் பணி செய்கின்றேன் என்பதால் தனி வரவேற்புக் கிடைத்தது. மற்றும் எனக்குத் திருமணம் ஆகவில்லை என்பதுகூட உதவியது. அவர்களின் ஆசை அவர்கள் குடும்பத்துப் பிரச்னைகளில் ஒன்றை என்னைக்கொண்டு தீர்த்துவிடலாம் என்பது.

"இவள்தான் என் தங்கை" என்று அறிமுகப்படுத்தி னாள் உஷா தன் தங்கையைக் காட்டி. அம்மாவின் கண் கொண்டு அவள் தங்கையைப் பார்த்தேன். லட்சணமான பெண். அடக்கம் ஒடுக்கம் நடுக்கம் பணிவு பரிவு இந்தச் சர்டிபிகேட்டுகள் அவளிடம் நிரம்பி இருந்தன. அவளுக்காக பாங்கியில் பத்தாயிரம் போட்டிருந்தார்கள். அவள் கலியாணத்துக்காக இன்ஷூயூரன்சில் கட்டி யிருந்தார்கள். முப்பது சவரனுக்கு மேலே இருக்கிறதாம். பி.யு.சி. வரை படித்து முடித்துவிட்டாள். அதோடு அவள் படிப்புக் கடமை முடிந்துவிட்டது. அதற்கப்புறம் அந்தப் பெண் படிப்பதை அப்பா விரும்பவில்லை. பணம் செலவழிக்க விரும்பவில்லை. அதற்கு அவள் எடுத்துக் கொண்ட பாடமும் உதவியது. விஞ்ஞான பாடத்தில் அவள் வெற்றி பெறுவது அரிதாகி விட்டது. முயற்சிகள் பயன் அளிக்கவில்லை.

அவளுக்குத் தக்கவன் கிடைத்தால் நன்றாக இருக்கும் என்பது அவர்கள் குடும்பப் பிரச்னையாக இருந்தது. இப்படி ஏதாவது பிரச்சனைகள் இருந்தால்தான் வாழ்க்கையே சுவாரசியமாக இருக்கிறது என்று எண்ணத் தொடங்கினேன். அக்கா மணமானவள். ஆனால் அது மணம் பெறவில்லை. என்றாலும் அந்த அனுபவம் குடும்பத்தை விட்டு மறைந்துவிட்டது என்றுதான் சொல்லமுடியும். அதைப்பற்றி யாரும் கவலைப்பட்டதாகத்

தெரியவில்லை. கை உடையும்போது தான் கவலை; முடமாகி விட்ட பிறகு அது சாதாரணமாகி விடுகிறது மற்றவர்களுக்கு. உடைந்தவனுக்கு மட்டும்தான் அது காலத்துக்கும் வாழ்க்கைப் பிரச்னை. அவளுக்கும் கலியாணமாகி விட்டால் அது ஒரு பெரிய பாரம் தீர்ந்தது போல் ஆகும்.

பையனைப் பற்றிக் கவலை இல்லை. இது அவர் சொன்னது. இது ஒன்றுதான் அவள் அப்பா என்னிடம் பேசியது. அப்புறம் அவர் என்னிடம் பேசியது இல்லை; எனக்கு அவரிடம் பேசவும் தோன்றவில்லை. பேசினால் அவர் கிரிமினல் அனுபவங்களைக் கேட்கலாம். பத்திரிகை களில் சில மாஜி அதிகாரிகள் தம் அனுபவங்களை எழுதி வருகிறார்கள். அதைப்போல இவரிடமும் கேட்கலாம். அவரைப் பார்த்தால் அப்பாவியாகத்தான் காணப் பட்டார். போலீசுக்கு வேண்டிய துணிவும் துடுக்குத்தனமும் இருப்பதாகத் தெரியவில்லை. இருந்ததாகவும் தெரிய வில்லை.

அவர்கள் பேச்சு சுற்றிச் சுற்றி டெலிவிஷனைச் சுற்றியே இயங்கியது. அதில் எனக்கு அவ்வளவு ஈடுபாடு ஏற்படவில்லை. "வயலும் வாழ்வும்" என்று காட்டுகிறார்கள். அதை வயலும் பார்ப்பதில்லை. அதை நம்பி வாழ்பவரும் பார்ப்பதில்லை. சிறுவர்களுக்கு எனக் கதை பேசுகிறார்கள். அதைப் பெரியவர்களும் பார்க்கிறார்கள். இப்பொழுது எவ்வளவோ மேல் முன்பெல்லாம் இருபது அம்சத் திட்டம். அதைச் சுற்றியே எல்லாம் சுழன்று கொண்டிருந்தன. நாடகங்கள் ஒன்று இரண்டு நன்றாக இருந்தன. 'கால்கட்டு' பிரமாதமாக இருந்தது. சில ஒன்றுமே இருப்பதில்லை. எப்படியோ அவர்களும் ஒலியும் ஒளியும் உண்டாக்கிப் பரப்பி வருகிறார்கள்.

சில வயசான மாதர்கள் பெண்கள் அல்ல. அவர்கள் மேக்கப் செய்துகொள்வதுதான் அநியாயம். அங்கு மேக்கப் தான் தெரிகிறது. அவர்கள் தெரிவதில்லை. சில பேருக்குத் தமிழ் பேசத் தெரிவதே இல்லை. பெரிய ஆபீசர்கள் அவர்களுக்குத் தமிழ்தான் பேசத் தெரியாது.

எனக்குக்கூட அங்குப் போய்ப் பேச விருப்பம்தான். எதைப் பற்றிப் பேசுவது. கவிதைகளைப் பற்றிப் பேசலாம். அது மட்டும் என்ன பாரதி பாரதிதாசன். இதற்கு மேல் யாரும் பாராட்டுவது இல்லை. நா. காமராசனின் கறுப்பு மலர்களைப் பற்றிப் பேசச் சொன்னால் அழகாகப் பேச முடியும்.

நடைபாதையைப் பற்றி அழகான கவிதை ஒன்று நினைவுக்கு வருகிறது. 'ஏழைகள் படுத்து உறங்கும் புழுதிக் கட்டில்' இது நடைபாதைக்குத் தந்த விளக்கம். இதைப் பற்றி நான் நினைத்துப் பார்ப்பது உண்டு.

இந்தக் கலகலப்பான குடும்பம் எனக்கு உண்மையில் இதயத்துக்கு இனிமை தந்தது. முக்கியமாக அங்கு உஷா குடி கொண்டிருந்தாள்.

எனக்கு அவள் தங்கையைக் கொஞ்சம்கூட பிடிக்க வில்லை. அவள் அழகாக இல்லை. சாதாரண பெண் அவ்வளவுதான் என்னமோ பிறந்தாள் படித்தாள் வளர்ந்தாள் பெரியவள் ஆனாள். கலியாண வயது. அவளுக்குக் கொஞ்சநாள் ஆனால் கலியாணமாகி விடும். என் எதிர் காலம் நினைவுக்கு வந்தது. உஷா ஸ்கூட்டர் வாங்கச் சொன்னாள். அதைப் போன்று ஒன்று பின்னால் பிடித்துக் கொண்டு போவாள்.

சே! அது வாழ்க்கைச் சக்கரம் அதில் எந்தச் சித்திரமும் இல்லை.

உஷாவிடம் தான் எனக்குக் கவர்ச்சி ஏற்பட்டது. அவளோடு ஆபீஸில் பழகும் பழக்கம் ஒரு காரணம்.

அவளிடம் ஏதோ சொல்லத்தக்க செய்திகள் இருந்தன. அம்மா சொல்லுவாள். உனக்குக் கலியாணமாகி இருந்தால் இரண்டு குழந்தைகளுக்குத் தந்தையாகி இருப்பேன் என்று. அந்த வயதுக்கும் உஷாவின் வயதுக்கும் பொருத்தமாகத் தான் இருக்கும்.

அவள் எனக்குக் கிடைப்பதாக இருந்தால் நான் ஓவியரின் சித்திரத்தைப் பார்க்க வேண்டியது இல்லை. உஷா அழகான பொம்மை. அதை வைத்து விளையாடுவது இன்பமாக இருக்கலாம்; ஆனால் ஓவியத்தின் முழு அழகை அதில் காண முடியாது. அழகைவிட வேறு ஒன்று ஏதோ ஒன்று இருக்கிறது. அது கவர்ச்சி. அது 'அவளிடம்' தான் இருந்தது. அது ஓவியரின் குடிசையை அழகு செய்தது.

'அவள்' உஷாவின் தங்கையைப் போல் முகராத மலர் அல்ல; வண்டு மொய்த்துத் தேன் உண்டுவிட்டது. ஆனால் வாடவில்லை. மலர் ஒரு முறைதான் மலரும். பெண் அப்படி அல்ல. இதைப் போன்ற எண்ணம் 'அவளிடம்' உதயம் ஆகியது. உஷாவைச் சுற்றி வண்டு மொய்த்தது. ஆனால் மயங்கவில்லை. எனக்கு ஏதோ கதை எழுதுவது போல் இருந்தது. இவர்களைப் பற்றி நினைக்கும்போது.

மறுபடியும் இந்நினைவுகள் ஓவியர் வீட்டிற்குச் செல்லத் தூண்டின. அதுதான் அடுத்த வாரம் அவள் வாழும் குப்பத்திற்குச் சென்றேன்.

## 8

**க**டைசியில் வந்து சேர்ந்தேன். அதுதான் கண்ணம்மாவின் குடிசைக்கு. பழங்காலத்து ஏதோ முனிவர் கண்ணுவர் ஆசிரமம் என்று நினைக்கிறேன். அங்கேதான் சகுந்தலை வளர்ந்தாள். இங்கு இந்தச் சகுந்தலையின்

குழந்தைகள் மானோடு விளையாடவில்லை; நாய்க்குட்டியோடு விளையாடின.

கதிரவன் வெய்யில் எப்படி குழந்தைகளின் நிறத்தை மாற்ற முடியும் என்பதற்கு அக்குழந்தைகள் சான்று பகன்றன. நிழலில் வளரும் செடிகள் ஒளி இழக்கின்றன; வெய்யிலில் காயும் குழந்தைகள் அழகிய நிறத்தை அதுதான் கறுப்பு நிறத்தைப் பெற்று விளங்கின.

நிலவுப் பயன் கொள்ளும் நெடு நிலா முற்றத்தில் அவை வளரவில்லை. கறுப்பிலே அழகில்லை என்று என்னோடு வாதிட்டால் நிச்சயமாகத் தோற்று விடுவார்கள். நிறத்தால் மட்டும் அழகு உண்டாவது இல்லை; நோயற்ற உடம்பில்தான் அழகு உண்டாகிறது. அதற்கு மனம்தான் காரணம். அந்த நல்ல மனம் அந்தக் குழந்தைகளிடம் இருந்தது. ஏன் ஒவ்வொரு குழந்தையும் அழகாகத்தான் இருக்கின்றன. அது நல்ல மனம் உடையது.

எல்லோரும் சாதிக் கலப்பு வேண்டும் என்கிறார்கள். இது முதற்படி; இதுவே முழுமை என்று கூற முடியாது. என்னைப் பொறுத்தவரை கலப்பு மணம் என்பது வசதி உடையவன் வசதியற்றவளை மணம் செய்து கொள்வது என்பதுதான். அதைத்தான் நான் அவளிடம் மேற்கொள்ள விரும்பினேன்.

சாதிக் கலப்பால் மட்டும் அவர்கள் மனம் மாறி விடுவது இல்லை. அவன் செட்டியாக இருப்பான்; மலையாளியை மணப்பான்; மறுபடியும் செட்டியார் என்ற பெயர்ரை மட்டும் போடாமல் இருக்க மாட்டான். அவன் தான் வைசியர் சங்கத்துக்குத் தலைவனாக இருப்பான். தேர்தலே சாதியின் அடிப்படையில் நடக்கும் பொழுது அது அவ்வளவு எளிதாக மாறிவிடும் என்று சொல்வதற்கு இல்லை. வடநாட்டில் தீண்டாமை ஒழிப்புப் பற்றித் தீவிரப் பிரச்சாரம் நடைபெறுகிறது. அதை நோக்கத் தமிழகம்

முன்னேறி விட்டது என்று தான் கூற முடியும். அவர்களுக்குச் சம அந்தஸ்து தருவதற்கு அரசாங்கம் பாடுபட்டுக்கொண்டு வருகிறது. விரைவில் அவர்கள் முன்னேறி விடுவார்கள் என்ற நம்பிக்கை இருக்கிறது.

அவர் சொன்னார் அதுதான் ஓவியர்; "சாதி ஒழிப்பு என்று பேசுகிறார்கள். ஆனால் ஏழைகளைத் தனியே ஒதுக்கி அவர்களுக்கு அடுக்கு வீடுகள் கட்டிக்கொடுக்கிறார்கள். இது ஒரு புது சாதியை உண்டாக்கப் போகிறது" என்றார். இது ஒரு புதிய சிந்தனையாக இருந்தது.

அதற்கு முன்னால் நான் இதைப் போன்ற இடங்களுக்குச் சென்றது இல்லை. அங்குச் சென்ற பிறகுதான் நரகம் என்றால் எப்படி இருக்கும் என்பதைத் தெரிந்து கொண்டேன். வறுமையின் கோரப்பிடியில் இங்கே அக்குடிசைவாழ் மக்கள் எப்படித் தவிக்கிறார்கள் என்பதை அறிய முடிகிறது. அந்தப் பகுதி வாரியம் கட்டிக் கொடுத்த கட்டிடம் அல்ல; பரம்பரையாக வரும் குடிசைகள் இருக்கும் இடம் தான். சுவர்கள் எல்லாம் நிலையாமையை அறிவித்துக் கொண்டிருந்தன. கிழிந்த கோணிகள் திரைச் சீலைகளாக நடித்தன. அங்கே தெருக் குழாயடியில் குளித்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் கட்டியிருந்த புடவைகளே அக் குளியலை மறைக்கும் சுவர்களாக இருந்தன. இந்தக் குடிசைகளை மாற்றி ஒழுங்கான வீடுகளைக் கட்டிக் கொடுத்த அரசாங்கத்தை உண்மையில் நான் பாராட்டுகிறேன். அவர்களையும் மனிதர்களாக மதித்து உயர்த்தி இருக்கிறார்கள். உயரமான கட்டிடங் களைத் தந்து இருக்கிறார்கள். அந்த மாடி வீடுகளில் ஒரு சில குறைகள் இருக்கத்தான் செய்கின்றன. தனித்தனியாகப் பிறரோடு பேசாமல் அவர்களால் இருக்க முடிவது இல்லை. பசியும் பட்டினியும் அவர்களோடு நான்கு சுவர்களுக்குள் நின்றுவிடுகின்றன. வயதானவர்கள் மாடிப்படிகள் ஏறி

இறங்குவது கஷ்டம். தண்ணீர் சில சமயம் மேலே வராவிட்டால் எடுத்துக் கொண்டு போக வேண்டியுள்ளது. என்னவோ இப்படி ஒரு சில குறைகள் இருக்கத்தான் செய்கின்றன. என்றாலும் காற்றோட்டமான வீடுகள் அவர்களை நோய்களினின்று காக்கின்றன. இது சமுதாயத்தில் செய்யப்பட்ட சிறந்த பொருளாதாரப் புரட்சி என்று எனக்குப் பட்டது.

அங்கே தான் வாக்குரிமை மிகுதியாக இருக்கிறது. ஏழைகளைக் கவனிக்கா விட்டால் அவர்கள் இவர்களைக் கவனிக்க மாட்டார்கள். எந்த அரசாங்கமும் ஏழைகளைக் கவனிக்காமல் இருக்க முடியாது. அவர்கள் தான் இந்த நாட்டில் மிகுதி. முதலில் அவர்கள் தேவைகளைக் கவனித்தால்தான் அரசாங்கம் நிலைத்து இருக்கும். வாக்குரிமை ஏழைகளிடம் இருக்கும் வரை சமுதாயப் பொருளாதாரப் புரட்சி நடந்தே தான் தீரும். காலம் பிடிக்கலாம். ஆனால் ஒரு நாள் லட்சியத்தை அடைவது உறுதி.

“பாவம்! அவள் கணவன் இறந்து விட்டானே! அதே நினைவில்”

“அவள் வேதனை அடைவாள் என்று நினைக்கிறீர் கள். இல்லை. அது மெல்ல மெல்ல மறைந்து விடுகிறது. வாழ்க்கை அதைவிட வன்மை வாய்ந்தது” என்றார்.

அவர் மன்றக் கட்டடத்தில் உட்கார்ந்து கொண் டிருந்தார். அது மிகவும் சுத்தமாக இருந்தது, பல கட்சிப் பத்திரிகைகளும் அங்கு வந்திருந்தன.

“நாங்கள் எல்லாக் கட்சிக்கும் ஆதரவு தருகிறோம்” என்றார்.

“அது எப்படி முடியும்?”

"அவரவர் விருப்பப்படி படிக்கட்டும். ஜனநாயக நாட்டில் எல்லாக் கட்சிகளும் வளர வேண்டும்" என்றார்.

"ஆனால் ஒன்றுதானே ஆட்சிக்கு வரமுடியும்"

"எந்தக் கட்சியும் நிலைத்து இருப்பது இல்லை. இருக்கவும் முடியாது. அடுத்த கட்சி உருவாகத் தானே வேண்டும்."

"இப்படி மாறிக் கொண்டே இருந்தால்"

"அதுதான் வளர்ச்சி."

"முடிவில் எந்தக் கட்சிதான் வரும்?"

"உண்மையான சமுதாய சமதர்மத்துக்குப் பாடுபடும் கட்சிதான் நிலைத்திருக்கும்" என்று கூறினார்.

"எப்படிக் கூறுகிறீர்கள்?"

"ஏழைகள் தான் இந்த நாட்டில் பெரும்பான்மை."

"அதாவது பொது உடைமைக் கட்சிகள் தாம் வாழும் என்று நினைக்கிறீர்களா?"

"அப்படிச் சொல்ல முடியாது. சம உரிமை, சம அந்தஸ்து, சம உடைமை மூன்றும் அளிக்கக்கூடிய சமதர்மக் கட்சிதான் உருவாகும். அதுதான் சமுதாயம் நோக்கிச் செல்லும் பாதை" என்றார்.

"நீங்கள் இங்கே கதா காலட்சேபங்கள் ஏதாவது"

"அதில் எங்களுக்கு நம்பிக்கை இல்லை. அது மத்தியதரக் குடும்பங்கள் பழைய சம்பிரதாயங்களைக் கட்டிக் காக்க நடத்துவது. அவ்வளவு பெரிய பணக்காரர்கள் இங்கே இல்லை, அரசியல் கட்சிக்கு நிதி உதவ. இங்கே பொதுக் கூட்டங்கள் நிறைய நடக்கும். எங்களுக்குப் புராணக் கதைகளில் நம்பிக்கை கிடையாது, அரசியல் பேச்சுக்களைக் கேட்கிறோம். அன்றாடப் பிரச்சனைகளில் தான் எங்களுக்கு ஆர்வம்.

"அதில் அடிதடி உண்டாகுமே"

"அதுதான் வளர்ச்சிக்கு அறிகுறி. நாட்டிலே வேலை நிறுத்தங்கள் நடைபெறுகின்றன. அதைக் கண்டு பத்திரிகைகள் கண்டிக்கலாம். மாணவர்கள் கிளர்ச்சிகள் நடத்துகிறார்கள். குழப்பங்கள் விளைகின்றன. நிச்சயமாக நல்ல விளைவுகள் நேராமல் போகாது. தேக்கத்தைப் போக்கப் பாடுபடும் முயற்சிகள் போராட்டங்கள் என்று கூறலாம்.

எங்களுக்குத் தொடர்பு இல்லாத விஷயங்களைப் பேசிக்கொண்டிருந்தோம். பேச்சென்றால் அப்படித்தானே இருக்கும். நேரிடையாக எதைப்பற்றிப் பேசுவது. எனக்கு இதுபோலப் பொதுப் பிரச்சனைகளைப் பேசுவதுதான் விருப்பம் அதிகம்.

"அவள் கணவன் படத்தைப் பூசைசெய்துகொண்டு இருப்பாள் இல்லையா?" என்று மெல்ல அவளைப்பற்றிப் பேச்சுக் கொடுத்தேன்.

அவர் சிரித்தார். கருத்தை மறுப்பதற்குச் சிரிப்பு எப்படிப் பயன்படுகிறது என்பதைத் தெரிந்து கொண்டேன். நீங்கள் இங்கு இருக்கும் வாழ்க்கையைப் பற்றி அறியமாட்டீர்கள். நாங்கள் சாவுக்கு மத்தியில்தான் வாழ்கிறோம். நீங்கள் செய்தித்தாளில் படித்திருப்பீர்கள் என்று நினைக்கிறேன். கலங்கலைக் குடித்துச் செத்தவர்களின் பட்டியல் உங்களுக்குத் தெரியும். வெள்ளம் வந்து அடித்துக் கொண்டு போன குடிசைகள் ஏராளம். தீ விபத்து இங்கு தான் வரும். எங்களுக்குள்ளேயே நடக்கும் அடிதடி சண்டைகள். இங்கே பலபேர் வேறு வழியில்லாமல் திருடப் போவார்கள். அவர்கள் பல குடும்பங்கள் 'பிக் பாக்கெட்டுகள்' இங்கே உற்பத்தி ஆவார்கள். அவ்வப் பொழுது அவர்கள் சாதாரணமாகச் சிறையில் இருந்துவிட்டுத் திரும்பி விடுவார்கள். அவர்களை யாரும்

வெறுப்பது இல்லை. அவர்களும் இங்கே கவுரவமாகவே நடத்தப்படுவார்கள். போலீசுக்குத் தெரியும். அவர்களும் அவர்களைக் கண்காணிப்பார்களே தவிர அதிகம் அலட்டிக்கொள்ள மாட்டார்கள். வேலை எங்கே கிடைக்கிறது. மேல்மட்டத்தில் வேலை இல்லாப் பிரச்சனை; இங்கேயும் அப்படித்தான். இங்கே பல திறப்பட்ட சங்கங்கள். தேர்தல் காலங்களில் சுறுசுறுப்பாக வேலை கிடைக்கும். போஸ்டர் ஒட்டுவது, கூட்டங்களை அமைப்பது; கோஷம் போடுவது; கொஞ்சம் பணம் நடமாடும். பிறகு மந்தமாக இருக்கும். எப்படியோ வாழ்ந்துகொண்டிருக்கிறார்கள். இந்த நிலையில் அவள் ஒருத்தி மட்டும் படத்தை மாட்டிப் பூசை செய்ய முடியுமா? அப்படியானால் பல வீடுகளில் இந்தப் படங்களை மாட்டிவைக்க வேண்டிவரும்.

"அதோ பார் அந்தப் பையனைக் கேள். அவன் அப்பா எங்கே என்று" என்று ஒரு பையனைச் சுட்டிக் காட்டினார். அவன் சட்டை கார் ஆயில் கறையில் முழுகி இருந்தது. தலை மொட்டை அடித்துக் கொண்டிருந்தான். அவன் திருப்பதிக்குப் போய் வந்திருக்க வேண்டும் என்று நினைத்தேன். அப்படித்தான் பார்த்து எனக்குப் பழக்கம்.

அவன் அப்பாவை விட அவன் மொட்டையில் தான் எனக்குக் கவர்ச்சி ஏற்பட்டது.

"தம்பி! மொட்டை"

"என் பெயர் மொட்டை இல்லை சார். அது வேறு ஆள்; அவன் தலைமுடி வைத்திருப்பான்!" என்றான்.

"இல்லை திருப்பதிக்கு"

"அதெல்லாம் இல்லை. கிராப்புக்கு அதிகம் காசு கேட்கிறான். இதுக்கு ஒரு ரூபாய் கொடுத்தால் போதும்" என்றான்.

"அது மட்டும் இல்லை தலைக்கு எண்ணெய் தேவை இல்லை. செலவு மிச்சம்" என்றான்.

"அசிங்கமா இல்லையா?"

அந்தச் சிறுவன் சிரித்தான். அதற்கு அர்த்தம் இருப்பதாக அவன் அகராதியில் இடம் பெறவில்லை.

"உங்க அப்பா"

"அவர் செத்து இரண்டு வருஷம் இருக்கும்; சரியாகக் கவனம் இல்லை" என்றான். அதற்காகக் கவலைப் பட்டதாகத் தெரியவில்லை.

என் நினைவுகள் வேறு எங்கோ சென்றன. பத்திரிகைகளில் அதுவும் ஆங்கிலப்பத்திரிகைகளில் விடாமல் வருந்துவதாகப் பெரிய மனிதர்களின் படங்கள் இடம்பெற்று வருவதை நினைத்துப் பார்த்தேன். அந்தப் படங்கள் என் நினைவில் மின்னலைப் போல் தோன்றிப் பளிச்சிட்டன. சமுதாயத்தின் இருவேறு நிலைகளைக் காண முடிந்தது.

அங்கே ஒரு கடையில் சுறுசுறுப்பாகச் சிலர் சூழ்ந்து கொண்டிருந்தனர். என் பார்வை அங்குச் சென்றது. அவர்கள் என்ன செய்கிறார்கள் என்று பார்த்தேன். கையில் பழைய தவலை செம்பு டேக்ஸா இவற்றை அங்குக் கொண்டு போய்ப் பத்திரப் படுத்தினார்கள். நல்லவர் 'சேட்' என்று சொல்லிக்கொண்டு பத்து ரூபாய் நோட்டை எண்ணிக் கொண்டு வருவதைப் பார்த்தேன்.

பக்கத்தில் ஒரு வைத்தியர் கடை திறந்து வைத்திருந்தார். இளையவர், தெரியாமல் அங்கே தொழில் நடத்தத் தொடங்கினார். அங்கே ஆளே இல்லை. மெல்ல அவரிடம் பேசிப் பார்த்தேன்.

"இங்கே நல்ல பிராக்டிஸ் தானே"

"தவறான முடிவு செய்து விட்டேன். ஏழைகள் மத்தியில் எங்களுக்கு இடம் இல்லை. இங்கே நோய் இருக்கிறது; பணம் இல்லை. இவர்களுக்கு உடம்பு நோயைவிட வாழ்க்கை நோய் தான் மிகுதி" என்றார்.

"இந்தக் கடையையும் இந்த மார்வாடியே எடுத்துக் கொள்ளப் போகிறார்" என்று முடித்தார்.

வைத்தியப் படிப்புப் படித்தவர்களுக்கும் வேலை இல்லை என்பதை அவரைப் பார்த்துத் தெரிந்து கொண்டேன்.

எனக்கு 'டீ' சாப்பிட வேண்டும் போல் தோன்றியது. "நீங்கள் 'டீ' சாப்பிடுகிறீர்களா?" என்று ஓவியரைக் கேட்டேன்.

"நான் இப்பொழுது அதிகம் சாப்பிடுவது இல்லை" என்று பதில் சொன்னார்.

நடுத்தரக் குடும்பங்களில் சிலரைப் பார்த்திருக் கிறேன்.

"நான் காப்பி குடிப்பதில்லை" என்று சொல்லக் கேட்டிருக்கிறேன்.

அதைப் பற்றிக் கவலைப்படவில்லை. அது ஒரு பெருமையாக நினைத்துக் கொண்டு பேசுவது எனக்கு வெறுப்பைத் தந்தது உண்டு.

மக்கள் நூறாண்டு வாழ்வது எப்படி என்ற கட்சியைச் சார்ந்தவர்கள் இவர்கள். வாழும் வரை நன்றாக வாழ வேண்டும் என்ற கொள்கை உடையவன் நான். அப்படிக் காப்பிக் குடிப்பதால் இந்த உடம்பு கெட்டு விடுவதால் அப்படித்தான் போகட்டுமே என்ற கொள்கை உடையவன் நான்.

அதைப் போல இவரும் மாறிவிட்டாரோ என்று ஆச்சரியப்பட்டேன்.

"இல்லை. அந்தக் குடும்பத்துக்காகச் செலவை மிச்சப் படுத்துகிறேன்" என்று சொன்னார்.

"நான் வாங்கித் தருகிறேன்" என்று சொன்னேன். அவர் 'பிகு' பண்ணிக் கொள்ளவில்லை. உடனே என்னோடு கலந்து கொண்டார்.

அவர் சொன்னார் "இந்த 'டீ' இருக்கிறதே இதுதான் இந்தக் குடிசை வாசிகளுக்கு அவசியமான குடி. ஒவ்வொரு தொழிலாளியும் இதில்தான் சுவர்க்கத்தையே காண்கிறான்" என்று கூறினார்.

பிறகு மன்றத்துக்குள் போனோம். அதுவும் ஓலைக்குடிசைதான். மிகவும் குளிர்ச்சியாய் இருந்தது. பெரிய பிரமுகர்கள் வீட்டில் பங்களாக்களின் முன்னால் தனிக்குடிசை போட்டு வருகிறவர்களை வரவேற்றுப் பேசுவதைப் பார்த்திருக்கிறேன். அதாவது அவரது சோஷியலிசம் அது. வருகின்றவர்கள் அநாவசியமாக அவர்கள் பணத்திற்காக அவர்களை வெறுக்காமல் இருப்பதற்கு என்று நினைக்கிறேன். பெரிய ஹோட்டல் களில் தனிக்கட்டிடங்களைக் குடிசைகள் (cottage) என்று அழைப்பதைப்பார்த்து இருக்கிறேன். குடிசைகளுக்குத் தனிமதிப்பு இருப்பதை உணர்கிறேன். அவர்களே ஒப்புக் கொள்கிறார்கள். மேல் மாடிகளில் இன்பம் இல்லை என்பதை; எளிமையில்தான் அழகு இருக்கிறது.

உள்ளே 'இந்திராகாந்தி படம் மாட்டப்பட்டு இருந்தது. அது என் கைப்பட எழுதியது என்று கூறினார். அந்த அம்மாளுக்கு ஒரு பக்கம் நரை தனியழகைத் தந்தது.

"பதவியில் இறங்கிவிட்டார்களே அவர்களுக்கு ஒரு படமா?" என்று கேட்டேன்.

"இது ஒரு படிப்பினை. ஆட்சியில் இருப்பவர் நிரந்தரமாக இருக்க முடியாது. மக்கள் வாக்குரிமை வலிமை மிக்கது" என்று கூறினார்.

"அவர்கள் இருபது அம்சத்திட்டம்."

"அது போதாது. அதனால்தான் மக்கள் ஆட்சியை மாற்றி விட்டார்கள்" என்றார்.

அவர் கூறியது எனக்கு வியப்பாக இருந்தது.

அண்ணாவின் படம் மாட்டப்பட்டிருந்தது. அதன் கீழ் கண்ணியம், கடமை, கட்டுப்பாடு என்று அழகாக எழுதியிருந்தார்.

இதை நாம் பின்பற்றுவது அவசியம் என்று கூறினார்.

''இவை அண்ணா காட்டிய வழிகள்'' என்று பாராட்டிக் கூறினேன்.

"வழிகள் அதோடு நின்றுவிடக்கூடாது. எங்கே போகிறோம் என்பதைச் சிந்திக்க வேண்டாமா?" என்றார்.

அது ஏதோ அண்மையில் வெளிவந்த நாவலின் தலைப்பு என்பது மட்டும் நினைவுக்கு வந்தது.

'எங்கே போகிறோம்?' என்ற கேள்வியை அவரிடமே கேட்டேன்.

"எங்கே போகவேண்டும் என்பது தான் தெரியும்" என்று கூறினார்.

"எங்கே போகிறோம் என்பதும் எங்கே போக வேண்டும் என்பதும் தெரிந்து கொள்வது நல்லதுதான்" என்றேன்.

இரண்டுக்கும் வேறுபாடு இருக்கிறது என்பதை உணர்ந்து கொண்டேன். முதல் கேள்வி சிந்தனையைத் தூண்டுவது; அடுத்த கேள்வி வழி காட்டுவது என்பதை அறிய முடிந்தது.

"சமதர்மம்'' என்று எழுதி இருந்தார். அதுதான் நாம் போகவேண்டிய இடம் என்று தெரிவித்தார்.

"எல்லோரும் ஓர் குலம்
எல்லோரும் ஓர் நிறை
எல்லோரும் இந்நாட்டுக் குடிமக்கள்"

என்று அழகாக எழுதி வைத்திருந்தார்.

மன்னர் என்பதை மாற்றி மக்கள் என்று எழுதியது வியப்பாக இருந்தது. அவர் மக்களை ஏமாற்ற விரும்ப வில்லை என்பதைத் தெரிந்துகொண்டேன்.

"பிறப்பு ஒக்கும் எல்லா உயிரும்" இது திருக்குறள். இதுவும் அங்கே இடம் பெற்றிருந்தது.

"தனி ஒருவனுக்குத் தொழில் இல்லை என்றால் ஆட்சியினை மாற்றி விடுவோம்" என்று எழுதித் தீட்டி இருந்தார்.

பாரதியைவிட ஒரு படி முன்னேறிவிட்டார் என்பதைத் தெரிந்துகொண்டேன். 'உணவு இடுவது பழங்காலத்துக் கோட்பாடு; தொழில் தருவது இக்காலத்துக் கோட்பாடு. உணவு இருக்கிறது. எப்படியாவது சாப்பிடுவது ஒரு வாழ்வு ஆகாது. உழைத்து உண்ணவேண்டும்; அதற்குத் தொழில் வேண்டும் என்பது அவர் கோட்பாடு.

எனக்கு ஏதோ ஆரம்பப் பள்ளிக்கூடத்தைப் பார்ப்பது போல இருந்தது. அங்கேதான் இப்படி அட்டைகளில் நிறைய எழுதி மாட்டிவைத்திருப்பதைப் பார்த்து இருக்கிறேன். சின்ன வயசில் என்னைத் திருக்குறள் ஒப்புவிக்க வற்புறுத்தினார் ஆசிரியர். அது என்னால் முடியவில்லை. ஒரு அச்சுப் புத்தகம் செய்யும் வேலையை மனிதன் ஏன் செய்யவேண்டும்; ஒப்பிப்பது என்பது அதுபோலத்தான் என்று நினைத்தது உண்டு.

ஒருவேளை இவர் 'முதியோர் கல்வி' நடத்துகிறார் போலும் என்று நினைத்தேன்.

"முதியோர் கல்வி ஏதாவது."

"நல்ல முயற்சிதான் இதனால் எல்லாம் பெரிய நன்மைகள் உண்டாகிவிடுமா?" என்று கேட்டார்.

"அரசியல் பள்ளி நடத்தவேண்டும். அதைப்பற்றி நாங்கள் விவாதம் நடத்துவோம். எங்களுக்குத் தெரிந்த அளவில் பத்திரிகைச் செய்திகளை வைத்துக்கொண்டு விவாதம் நடத்துவோம்" என்று விளக்கினார்.

"அப்பொழுது இது ஒரு சட்டசபை ஆகிவிடாதா?"

"மேலேயே பார்த்துக்கொண்டிருந்தால் போதாது கீழேயும் கடைக்கால் போட்டால்தான் கட்டடங்கள் கட்ட முடியும்?" என்றார்.

"எந்தச் சீர்திருத்தமும் மேலே இருந்து வரும் என்று நினைத்துக் கொண்டிருந்தால் அது இந்தப் பிறவியில் காண முடியாது." என்று கூறினார்.

"சீர் திருத்தம்" என்ற சொல் அவ்வளவாக என்னைக் கவரவில்லை.

"மறுபடியும் நீங்களும் இப்படித்தானே பேசுகிறீர்கள். நீங்கள் இங்கே காட்டிய இவ்வளவு துன்பங்களை எப்படி மாற்ற முடியும்?" என்று கேட்டேன்.

அவர் சொல்ல ஆரம்பித்தார். சீர்திருத்தம் வேறு சீர் அமைப்பு வேறு. அடிப்படை மாற்றங்கள் வேறு. ஒரு சிலவற்றைச் சீர்திருத்தம் என்று கூறலாம்; தீண்டாமை ஒழிப்பு சீர்திருத்தம்; இந்தக் குடிசைகளை மாற்றி வாரியம் கட்டித் தரும் வீட்டமைப்பு சீரமைப்பு; நில உச்சவரம்பு, சொத்து உச்சவரம்பு, நிறுவனங்களைத் தேசிய மாக்குதல் இவை எல்லாம் அடிப்படை மாற்றங்கள் என்று விளக்கினார்.

இந்த விளங்கம் எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

இதுவரை இந்த முதலிரண்டுகளில்தான் அரசாங்கம் அடி எடுத்துவைத்திருக்கின்றது. அதைத்தான் மக்களுக்குச்

செய்யும் நன்மையாகக் கருதி வருகிறது. அதிலே சேர்ந்ததுதான் தீண்டாமை ஒழிப்புப் பிரச்சாரம், மது ஒழிப்புத் திட்டங்கள், முதியோர் கல்வி, சமூக சேவை முதலியன என்று மேலும் விளக்கம் தந்தார்.

பொருளாதார வகுப்பில் எப்பொழுதோ படித்தேன். அந்த நாட்கள் நினைவுக்கு வந்தன. அவை பிரிட்டிஷார் எழுதிய நூல்களைப் படித்து எழுதிய பாடங்கள் என்று அறிந்தேன்.

"அப்பொழுது அரசாங்கம்"

"இந்த இரண்டைத்தான் செய்து கொண்டிருக்கின்றன. இப்படிச் செய்தால் மக்கள் முழு திருப்தி அடைவார்கள் என்று நினைக்கிறார்கள். இவை இந்த முதல் லட்சியங்களைத் தான் தொடும். சம உரிமை, சம அந்தஸ்து; மூன்றாவதற்கு வரமுடியாது" என்றார்.

"அது கூட கானல் நீர் என்றுபடுகிறது. அதை விடச் சம உடைமைதான் அவசியம்" என்றேன்.

"அவசரப்படக் கூடாது; இந்த இரண்டில்தான் காலடி எடுத்து வைத்திருக்கிறார்கள். மூன்றாவது இனிமேல் தான் செய்ய வேண்டும்."

"எப்பொழுது செய்வார்கள் என்று நினைக்கிறீக்கள்?"

"மக்கள் இதை உணரும் போது; அவர்களுக்கு இதை எடுத்துக் கூறும்பொழுது."

"யார் இதை எடுத்துச் சொல்வது?"

"அதுதான் நாட்டில் நடக்கும் அமைதியின்மை, கிளர்ச்சிகள், அடிதடிகள், அதற்காகத் தான் நாட்டில் பல பேர் தியாகம் செய்ய வேண்டிவரும்" என்றார்.

என்ன இவரே கிளர்ச்சிகளுக்குத் தலைமை தாங்குவார் போல் இருக்கிறதே என்று நினைத்தேன்.

"இப்பொழுதும் பல பேர் அதற்காகச் சிறை சென்று கொண்டிருக்கிறார்கள்" என்றார்.

"எனக்கு விளங்கவில்லை."

"அவர்களைக் குற்றவாளிகள் என்று உள்ளே தள்ளுவதால் உங்களுக்குத் தெரிவது இல்லை. இங்கே இந்தக் குப்பத்திலே இருந்து பல பேர் திருட்டுக் குற்றம் செய்கிறார்கள். இது ஆரம்ப நிலை; மேல் நிலையில் கள்ளக் கடத்தல் செய்து குற்றம் செய்கிறார்கள். அவர்களை மிசாவில் உள்ளே தள்ளினார்கள். இப்பொழுது தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்யும் பொழுது அவர்கள் கைது செய்யப்பட்டு உள்ளே தள்ளப்படு கிறார்கள். மாணவர்களும் சில சமயம் அடிதடிகளுக்கு ஆளாகிறார்கள். இது மூன்றாவது நிலை, இந்த ஆரம்ப நிலைகள் சமுதாயம் ஒப்புக் கொள்ளாத கிளர்ச்சிகள்; மூன்றாவது தான் சமூகம் ஒப்புக் கொள்கிறது; அதைக் கவுரவிக்கவும் செய்கிறது."

"இவற்றின் விளைவு?"

"நான் சொன்ன மூன்றாவது அடிப்படை மாற்றத்துக்கு அடிகோலுகிறது. இந்த அடிப்படை மாற்றங்கள் நடப்பதற்கு நாட்டில் ஆரம்ப முயற்சிகள் நடக்கின்றன என்பது அர்த்தம்" என்றார்.

அந்த ஓவியரின் மன்றத்தில் பல அரிய செய்திகளைத் தெரிந்து கொள்ள முடிந்தது. பல்கலைக் கழகங்களில் மாலை நேரச் சொற்பொழிவுகள் சில நடத்துவார்கள். அவற்றைக் கேட்பது போல் இருந்தது.

அதற்குமேல் அங்குப் பேசுவது எனக்குப் பிடிக்க வில்லை. ஒவ்வொன்றுக்கும் இப்படி ஏதாவது விளக்கம் சொல்வார் என்பது தெரிந்தது. விளக்கம் நன்றாக இருந்தது, என் மனம் அதில் அதிகமாக ஈடுபடவில்லை.

அவரே சொன்னார். "நீங்கள் தான் இவற்றை எல்லாம் பொறுமையாகக் கேட்டீர்கள். வேறு யார் நான் சொல்வதைக் கேட்பார்கள். படங்கள் போட்டால் பார்ப்பார்கள். காசு கேட்டால் கொடுப்பார்கள்" என்றார்.

"அதுவும் அவசியம் தானே."

"அவசியம் தான். அவர்களது ஆத்ம திருப்திக்கு. அதோடு நின்றுவிட்டால் போதுமா?

"ஆத்ம திருப்தி" எங்கேயே கேட்டிருக்கிறேன்.

செயலற்ற நிலையை உணர்த்தும் சொல் என்பது தான் எனக்குப்பட்டது. ஒரு சிலர் எந்தத் கட்சியையும் சாராமல் தனித்து நின்று போட்டியிட்டுத் தோற்பது எனக்கு நினைவுக்கு வந்தது.

அது அவர்கள் ஆத்ம திருப்திக்குச் செய்வது என்று நினைத்தேன். அதற்கு முன்னால் அல்லது பின்னால் தொடர்ந்து செயல்பட வேண்டும். அதுதான் அவர்கள் சமூக நிலையை அவர்கள் எட்டிப் பிடிக்கிறார்கள் என்பது பொருள். இந்த எண்ணம் அவர் சொன்ன 'ஆத்ம திருப்தி' என்ற சொல்லில் தோன்றியது.

என் மனம் மறுபடியும் புரட்சியை நோக்கி ஓடியது. அதுதான் அவள். அவளைச் சந்திப்பதில் என் உள்ளுக்குள் ஒரு அரிப்பு இருந்து கொண்டே வந்தது. எப்படி அங்கே போவது?

"சரி! நான் வரட்டுமா?" என்று இழுத்துப் பறித்துப் பேசினேன். இவ்வளவு தூரம் வந்தபிறகு எங்கள் வீட்டுக்கு வராமல் போவது நல்லது அல்ல" என்றார்.

'பழம் நழுவிப் பாலில் விழுந்தது' என்ற பழமொழி நினைவிற்கு வந்தது. எவ்வளவு சோம்பேறித்தனம். பழம் நழுவாமல் இருந்தால் தனியேதான் சாப்பிட்டால் என்ன?

எப்படியோ இந்த அழகான பழமொழி உண்டாகி இருக்கிறது.

"இன்று கண்ணம்மாதான் சமையல்"என்று சொன்னார்.

ஆறு நாட்களில் இவர் சமையல்; ஏழாவது நாளில் அவள் சமையல். நல்ல திட்டம் என்று எண்ணிக் கொண்டேன்.

அவரோடு அவர் குடிசைக்குச் சென்றேன். வெளியே மாட்ட முடியாத பல படங்கள் அவர் குடிசையில் மாட்டப்பட்டிருந்தன. அச்சு ஏறாத ஏட்டுப் பிரதிகளைப் பார்ப்பது போல இருந்தது எனக்கு அவை. ஒரு தொழிலாளியைப் போலீசார் தடி கொண்டு அடிப்பது போல ஒரு படம் வரைந்திருந்தார். அதற்குக் கீழே 'போராட்டம்' என்று அழகு தமிழில் எழுதி இருந்தார்.

'இங்கேயும் போராட்டம்தானா?" என்ற எண்ணம் உண்டாயிற்று.

"இவள்தான் மூத்த பெண்" என்று அங்கே விளையாடிக் கொண்டிருந்த சின்ன குழந்தையைக் காட்டினார்."

சில வீடுகளில் எனக்கு இவ்வாறு அறிமுகம் செய்து வைத்திருக்கிறார்கள். 'மூத்த பெண்' என்றால் கலியாணமாகாத மூத்த பெண் என்பதுதான் என் அகராதியில் பொருள். அந்தச் சொல்லை இவர் இந்தக் குழந்தைக்குப் பயன்படுத்தினார்.

"மூத்தது பெண் குழந்தை" என்று திருத்த ஆரம்பித்தேன்.

"அடுத்தவன் பையன்"

அவனும் குழந்தையாகத்தான் இருந்தான்.

அன்று அவள் கடைக்காரியாக இல்லை. வீட்டுக்காரியாக இருந்தாள். சேலை புதிது. அவள் சம்பாதனையில் வாங்கியது என்று நினைக்கிறேன். தம்மில் இருந்து தமது சம்பாதனையில் அவள் வாங்கி உடுத்திய சேலை அது.

'புரட்சி' என் முன் வந்தாள். அவளை அன்றுதான் முழுமையாகப் பார்த்தேன். அதாவது அவளைக் கலியாணப் பெண்ணைப் பார்ப்பது போலப் பார்த்தேன். கடையில் இருந்த வன்முறை அவளிடம் காணப்பட வில்லை. உஷாவின் தங்கையைப் போல் அவள் அடக்கமாகவே காணப்பட்டாள்.

ஓவியர் எனக்காக இலை வாங்கச் சென்றார்.

அவளிடம் என்ன பேசுவது என்று தெரியவில்லை.

"2ந் தேதி" என்றேன்.

அவள் புரிந்துகொண்டாள்.

"எங்களுக்கு அப்படி முதல் தேதி இரண்டாம் தேதி என்பதில்லை. எல்லாம் ஒரு தேதிதான்" என்று சாமர்த்தியமாகப் பதில் சொன்னாள்.

அவளைத் திரைப்படத்துக்கு அழைத்தேன். அதற்கு மறுப்புத் தெரிவித்தாள் என்பதுதான் இந்த பதில்.

"இரண்டு டிக்கட் வாங்கி வைக்கிறேன்" என்று அதை விரைவில் முடித்தேன்.

"உங்களுக்கும் உங்கள் ஆபீசு."

"ஆபீசு பையனுக்கும் சேர்த்துத்தான்" என்று அதை விரைவில் முடித்தேன்.

"நான் இப்பொழுது முடிவுக்கு வந்துவிட்டேன்" என்றேன்.

"எதற்கு?"

"நீ முன் யோசனை செய்து சொல்லச் சொன்னாயே அதற்கு" என்றேன்.

"அவர் வந்தால் அவரிடம் சொல்லுங்கள்" என்றாள். அதற்குமேல் அவளிடம் பேச முடியவில்லை. ஓவியர் கையில் இலையோடு வந்தார்.

"இங்கே வாழை இலை கிடையாது."

"தையல் இலை தானே."

"ஆமாம் இங்கே பெண்கள் தைத்து விற்கிறார்கள். வயதான பாட்டிமார்க்கு அதுதான் இங்குத் தொழில்" என்றார்.

"பாட்டி இலை" என்ற பெயர் பொருத்தமாக இருக்கும் என்று நினைத்துக் கொண்டேன்.

நான் என்ன சாப்பிட்டேன் என்று எழுதலாம். அது சைவர்க்குப் பிடிக்காது. அதனால் அதைப் பற்றி எழுத விரும்பவில்லை. அவள் நன்றாகவே சமையல் செய்து இருந்தாள்.

'முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்' என்ற ஒரு கவிதையைப் பற்றிய விமரிசனத்தை எங்கள் தமிழாசிரியர் ஒரு முறை சொல்லி இருக்கிறார். அழகிய கவிதைச் சித்திரம் அது.

கலியாணமான பெண்; புதுக் குடித்தனம் நடத்தினாள். தானே குழப்பி வைத்த குழம்பு. அதாவது புளிக்குழம்பு. அவளுக்குச் சமையல் தெரியாது. அதுதான் ஆரம்ப முயற்சி; அதனால்தான் 'குழம்பு' என்று சொன்னார் கவிஞர் என்பது தமிழாசிரியர் தந்த விளக்கம். அதைச் சாப்பிட்டவுடன் சமையல் நன்றாக இருக்கிறது என்று பாராட்டி இருந்தானாம். வேறு எப்படிச் சொல்ல முடியும். அவள் முகத்தில் புது மகிழ்ச்சி உண்டாயிற்றாம். எப்பொழுதோ கேட்ட அந்தப் பாட்டின் கருத்து

அப்பொழுது நினைவுக்கு வந்தது. திடீர் என்று பெருச்சாளி ஒன்று அந்தப் பக்கம் ஓடியது. அவர் தடி கொண்டு அதை அடித்து நொறுக்கி வெளியே போட்டார். 'மண் குடிசையில் பெருச்சாளி' என்றேன். இது சகஜம்; அவ்வப்பொழுது அடித்துப் போடுவது வழக்கம் என்றார்.

அதற்குமேல் அங்குச் சாப்பிட்டுக் கொண்டிருக்க இலையில் ஒன்றுமில்லை; எல்லாம் காலி செய்துவிட்டேன்.

"பரவாயில்லையே ஒன்றும் விடாமல் சாப்பிட்டு விட்டீர்களே."

"இது என்ன கலியாணச் சாப்பாடா வீண் படுத்து வதற்கு" என்றேன்.

இலை அகற்றப்பட்டது.

"நீங்கள் அடிக்கடி வரவேண்டும்" என்றார்.

"வந்து பேச வேண்டும்" என்று சொல்லவில்லை.

அப்பொழுது என் முடிவை அவரிடம் பேச நினைத்தேன். அதற்கு அப்பொழுது வாய்ப்புக் கிடைக்க வில்லை. ஒரே கூட்டத்தில் எப்படி எல்லாவற்றையும் பேச முடியும்? ஒத்தி வைப்பு நல்லதுதானே!

## 9

'புரட்சிப்' பாதை பயங்கரமானது என்பது குப்பத்துக்குச் சென்று வந்த பிறகுதான் தெரிந்தது. நான் தான் புரட்சிக்காரன் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். நான் அதுவும் முதற்படியில் தான் நிற்கிறேன். அதுவும் என் கவர்ச்சிக்காக ஒரு விதவையை மணப்பது என்பது. இது சீர்திருத்தம் அள்ளவுதான். இது முதற்படி; ஓவியர் மூன்றாவது படியில் நின்று பேசுவது பயங்கரமானதுதான். அடியோடு மாற்றங்கள் நடக்கத்தான் போகிறது என்று உறுதியாகச் சொல்கிறார்.

தீய சக்திகளும் இம்மாற்றங்களில் ஈடுபடும் பொழுது அது குழப்பத்தில் கொண்டுபோய் விடும் என்று எண்ணத் தொடங்கினேன். பொதுச்சொத்துகளுக்குச் சேதம் விளைவித்து விடுவார்கள். இங்கேதான் 'காந்தீயம்' மக்களுக்கு வழிகாட்ட வேண்டும் என்று நினைத்தேன். அவர் வழியும் தேவை; முடிவும் தேவை என்று எண்ணாமல் இல்லை. வன்முறையை என்னால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. ஜனநாயகம் என்பது அமைதியான தேர்தல் முறை; கருத்து விளக்க முறை. அதை ஒப்புக்கொண்ட பிறகு வன்முறையில் ஈடுபடுவது பயன் இல்லை. தெளிவு அடைவதற்கு முன்னால் குழப்பம்தான் மிஞ்சும் என்று நினைக்கத் தொடங்கினேன். சங்கங்களும் கழகங்களும் மிகுதியாக இயங்க வேண்டும். ஆனால் அவை வன்முறையில் ஈடுபடும்பொழுது அவை செயல் இழந்து விடுகின்றன. இதைத் தவிர்ப்பதற்கு வழி?

எனக்கே விளங்கவில்லை. இவை எல்லாம் அரசியல் வாதிகள் முடிவு செய்யவேண்டும். நான் எப்படி முடிவு செய்ய முடியும். நாட்டில் சட்டத்துக்கு மதிப்புத் தந்தால் தான் அமைதி நிலவும். அந்தச் சூழ்நிலையிலேயே போராட்டம் நிகழ வேண்டும். ஓவியர் தன் குடிசையில் தீட்டி வைத்த போராட்டம் என்னும் சித்திரம் எனக்குப் பிடிக்கவில்லை. போலீசோடு மோதுவது என்பது நியாயமாகப் படவில்லை. அப்படி அவர்களோடு மோதுவது என்பது சட்டத்தோடு மோதுவது என்பதுதான் பொருள். சமூதாயக் கட்டுக்கோப்பைத் தகர்த்து எறியும் முயற்சி அது. அதைப் புரட்சி என்று கூற முடியாது. சட்டத்துக்கு மதிப்புத் தந்துதான் ஆக வேண்டும்.

அவர் இப்பொழுதைய நிலையைத் தீட்டிக் காட்டுகிறார் என்பதுதான் அதற்கு அர்த்தம். அதை அவர் ஆதரிக்கிறார் என்பது அதன் கருத்து அல்ல.

'அவள்' அன்று சொன்னது உண்மைதான். எனக்குத் திருமணம் ஆகி இருந்தால் எனக்குச் சலனங்கள் ஏற்பட்டே இருக்காது. கீழ்த்தரமான விஷயங்களில் ஏற்படும் தடுமாற்றத்தைத்தான் 'சலன புத்தி' என்று சொல்லு வார்கள். நான் உயர்ந்த லட்சியங்களுக்குத் தாவுகின்றேன். 'புரட்சி' 'காதல்' 'சமதர்மம்' இந்த மூன்றுக்குள்தான் என் எண்ணங்கள் அலைமோதுகின்றன. இதை எப்படித் தவறு என்று கூற முடியும்?

யாருக்குமே எது நல்லது என்பது தெளிவாகத் தெரிவதில்லை. எதையும் முடிவு செய்வது என்பது அவ்வளவு எளிதான காரியம் அல்ல; சாதாரண போக்கிலேயே தெளிவு ஏற்படுகிறது அருமை என்றால் என்னைப்போல அசாதாரண போக்கு உடையவர்களுக்கு எதுவும் முடிவு செய்வது என்பது எளிதான காரியம் அல்ல.

உண்மையிலேயே எனக்குத் திருமணம் ஆகி இருந்தால் இந்த மாதிரி சலனங்கள் ஏற்பட்டு இருக்காது. உஷாவைப் பற்றி நினைக்கிறது என் மனம்; இந்தக் குப்பத்துக் குடிசையை நாடுகிறது மற்றொரு மனம். எந்தக் தொந்தரவும் இல்லாமல் உஷாவின் தங்கையை மணம் செய்துகொண்டு ஒரு சாதாரண ஆண் பெண் நடத்தும் இல்லற வாழ்வை நடத்தத் தூண்டுகிறது மற்றொரு மனம்.

உலகம் இந்த மூன்றாவது நிலையைத்தான் விரும்பு கிறது. தடம் புரண்டு செல்லாத ஒழுங்கான வாழ்க்கை அதுதான். இப்படித்தான் எல்லோரும் வாழ்கிறார்கள். வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். ஆனால் எது எப்படிச் சுவை மிக்க வாழ்க்கை என்பது என்னால் புரிந்துகொள்ள இயலவில்லை. அதைத்தான் எங்கேயும் பார்க்கிறேன். அழைப்பிதழ் என்பதன் பேரில் 'மங்கலம் என்ப மனை மாட்சி' என்ற தொடர் என்னை வந்து அடைகிறது. ஒவ்வொருவரும் இந்த மாட்சியைத்தான் விரும்புகிறார்கள்.

"மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு"

இரண்டும் என் வீட்டில் புகும் 'அவளை' மணந்தால்,

வீட்டுக்கு அழைத்து வந்தால்தானே அந்தப் பிரச்சனை. நாங்கள் எங்காவது தனிக்குடித்தனம் நடத்தினால், அப்பொழுது அம்மாவுக்கு அஞ்சி எதையும் செய்யாதிருக்க முடியுமா. அஞ்சித்தான் வாழவேண்டும். பழமைக்கும் அஞ்சித்தான் வாழவேண்டி இருக்கிறது. அவசரப்பட்டுப் பழமைக்கு மதிப்புத் தராவிட்டால் புதுமை ஓட்டாமல் போய்விடும். இவ்வாறு இந்த நினைவுகள் எழுந்து கொண்டிருந்தன. மனப்போராட்டம் என்று சொல்வதற்கு இல்லை. அதெல்லாம் பழைய நிலை. வெறும் மனப் போராட்டங்களுக்கே மதிப்புத் தந்தால் எந்தக் காரியமும் துணிந்து செய்ய முடியாது.

யாரை வீட்டுக்கு அழைத்துச் செல்வது என்பதில் தான் என் மனப்போராட்டம்; ஓய்வு கொள்ளவில்லை. உஷாவின் எதிர்காலம்? அவளைப் பற்றியும் எண்ணாமல் இருக்க முடியவில்லை.

உஷா ஒரு தனி வாழ்க்கையைப் பெற்றிருந்தாள். அவள் புரட்சியைப்போல் முடிந்துவிட்ட கதை அல்ல. 'அவள் ஒரு தொடர்கதை' படம் பார்த்திருக்கிறேன். தான் பிறந்த குடும்பம் வறுமையின் பிடியில் அகப்பட்டு நசுங்கிப் போகாமல் இருப்பதற்காக அவள் ஓடி ஓடி உழைத்தாள். அதற்கப்புறம் அவள் வண்டியை 'மிஸ்' பண்ணி விட்டாள். அந்த 'மிஸ்' என்ற பட்டத்தைத் தாங்கி அதை அவள் 'விசிட்டிங் கார்டில்' தன் பெயருக்கு முன்னால் நிரந்தரமாகப் பொருத்திக்கொண்டாள். உஷா 'மிஸ்' அல்ல. வாழ்ந்துகொண்டே வாழமுடியாத 'வாழாவெட்டி'. இப்படி அவள் எதிரிகள் அவளுக்குப் பட்டம் சூட்டினர்.

அவள் வாழ்க்கைப்படப் புகுந்த அந்தவீட்டினர் அப்படிப் பேசினர். கணவன் என்ன சொன்னாலும் அவள் கேட்டுக் கொண்டுதான் இருக்கவேண்டும் என்பது சலனமற்ற அவர்கள் எண்ணம். 'என்ன சொல்லிவிட்டான்; அவளைப் பார்த்துச் சந்தேகப்பட்டான். எந்தப் பெண்ணை யும்தான் சந்தேகப்படுவார்கள். இவள் ஏன் எப்பொழுதும் அலங்காரம் செய்துகொள்ள வேண்டும். கண்ணுக்கு ஏன் மையிட்டுக் கொள்கிறாள். தலைக்கு ஏன் இவ்வளவு பூ; அதுக்கும் ஒரு அளவு இல்லையா. அவங்க அப்பன் என்ன மாதா மாதம் மணியார்டரா செய்கிறார். என்னத்தான் அழகாக இருந்தாலும் அவ்வளவு திமிர் இருக்கக் கூடாது; சதா பவுடர் பூச வேண்டுமா? போகட்டும் சாயுங்காலம் ஆனால் ஏன் தெருவிலே வெளியே நிற்கவேண்டும். இப்படி எல்லாம் பேசியதை அவள் எனக்கு எடுத்துச்சொல்லி இருக்கிறாள்.

மற்றும் அவள் ஒருநாள் சொன்னாள் "நான் அவனோடு எப்படி வாழமுடியும்? ஒருநாள்கூட அவன் அன்பாகப் பேசிப் பார்த்தது இல்லை. வா வெளியே என்று அழைத்துப் போனது இல்லை. நான்கு சுவர்களில் வைத்து என்னை அடக்கி வைத்தான். ஒருநாள்கூட என் உள்ளத்தை மதித்தது இல்லை. காதல் கலந்த சொற்களைக் கேட்டது இல்லை. என் உடலைத்தான் மதித்தான். முன் சொன்னேனே அந்தச் சொல்தான் நினைவுக்கு வருகிறது. அசிங்கமாக நடப்பான்; அழகு உணர்ச்சியே அவனுக்கு இருந்ததாகத் தெரியவில்லை. நான் என்ன மென்மையான உணர்ச்சி அற்றவளா? பெண் மென்மை உடையவள் என்பதை அவன் அறிந்ததே இல்லை. அவனை ஒரு மிருகமாகப் பார்க்க முடிந்ததே தவிர மனிதனாக நான் பார்த்தது இல்லை."

இப்படி எல்லாம் அவனைப் பற்றி அவள் சொல்லி இருந்தாள். எனக்கு ஆச்சரியமாக இருந்தது. இந்த

அனுபவங்கள் என் வாழ்க்கையில் அறிய வாய்ப்பு இல்லை. அதற்காகவாவது நிச்சயம் மணம் செய்து கொள்ள வேண்டும். நான் எப்படி நடந்து கொள்வேன் என்பது எனக்கே தெரியவில்லை. அவளிடம் நெருங்கிப் பழகும் பொழுது ஒரு சில சொற்களை உதிர்ப்பாள். எனக்கு ஆச்சரியமாக இருந்தது. பொதுவாகப் பால் உறவுகளைப் பற்றிப் புத்தகங்கள் படித்திருக்கிறேன். அதில் ஆணின் மிருக உணர்வைப் பெண் விரும்புகிறாள் என்பதை வற்புறுத்தி இருக்கிறார்கள். அவற்றைத்தான் படித்திருக்கிறேன். அது பொய் என்பதை அவள் சொற்களில் அறிய முடிந்தது. 'என் வாழ்க்கை' என்ற நாவலிலும் அதன் ஆசிரியையும் அப்படித்தான் எழுதுகிறார். "என்னை வற்புறுத்தி அவர் இச்சையை முடித்துக் கொள்வதை என்னால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை" என்று எழுதி இருக்கிறாள். அதே போல இவள் பேசியதும் எனக்கு வியப்பாக இருந்தது.

நான் அவளை மணந்து கொண்டால் எப்படி நடந்து கொள்வேன். நிச்சயமாக அவள் உடல் என்னைக் கவராது. என்னைப் பொறுத்தவரை அவள் உள்ளத்தில் நான் ஒன்றிப் போக வேண்டும். அந்த அன்பு உள்ளத்திலே நான் நீந்தி விளையாட வேண்டும். அவள் அன்பு ஊறும் விழிகளுக்கு நான் விருந்தாக வேண்டும். திருமணத்தைத் தள்ளிப் போட்டுவிட்டதால் என் மனம் பண்பட்டு விட்டதா அதுவும் தெரியவில்லை. அவள் என்னோடு பழகும் பொழுது சில சமயம் சிறு குழந்தையாக இருப்பாள்; பேசும் போது அறிவு மேதையாகத் தெரிந்தாள் பழகும் பொழுது அவள் இனியவளாக இருந்தாள். அவளோடு பேசுவதில் பழகுவதில் என்னால் ஒரு தனி இன்பத்தைக் காண முடிந்தது. ஆபீசில் அவள் ஒரு குமாஸ்தா தான். வெளியே பழகும்பொழுது அவள் என் சிநேகிதி; என் கற்பனையில் நான் விரும்பும் இனிய காதலி.

"அவள்" — அது வேறு. அவள் உடல் என்னைக் கவர்ந்தது. துடுக்குத்தனம் என்னை இழுத்தது. அவளிடம் வன்மையும் இருந்தது; இனிமையும் இருந்தது ஆனால் மென்மை இல்லை. அதற்கு அவள் சூழ் நிலைதான் காரணம். காடு மேடுகளில் வயற்காட்டில் வேலை செய்யும் வனிதையர்களின் வனப்பு அவளிடம் காணப்பட்டது. அந்தப் பரம்பரையைச் சார்ந்தவள் அவள், கிராமங்களில் உழைத்துப் பலன் காணாமல் ஓடிவந்து பிழைக்க வந்த குடும்பங்களின் பிரதிநிதி அவள். நிலங்களின் உடைமை ஒரு சிலருக்கே சொந்தம். மாடு போல் உழைத்தும் அடிமை வேலை செய்தும் கூழும் தண்ணீரும் உண்டு. காலத்தைக் கடத்திய பரம்பரையைச் சார்ந்தவள் அவள். நகரங்களில் சிற்றாளாகக் கல் சுமந்தும், காய்கறி சுமந்தும், தன் வயிற்றை நிரப்பி வரும் குடும்பத்தைச் சார்ந்தவள் அவள். அவளிடத்தில் எப்படி உஷாவிடம் காணப்படும் மென்மை இருக்க முடியும்?

உஷாவின் உடலில் என்ன இருக்கிறது. அவள் உடலைப் பொறுத்தவரை அவள் ஒரு இயந்திரம். வ்யிற்றுப் பிழைப்புக்காக நான் வேலை செய்யும் ஆபீசில் அவளும் வேலை செய்கிறாள்.

கோயிலில் சிற்பங்களைக் கண்டு இருக்கிறேன். அந்தச் சிற்பிகள் மட்டும் எப்படி அந்த அழகிகளைப் படைக்க முடிந்தது? மனித உருவங்களை அவற்றைப் போல இறைவன் படைத்து நான் கண்டது இல்லை. அற்புதமான சிருஷ்டிகள். யாரோ எவளோ அப்படி ஒருத்தி இருந்திருப்பாள். மற்றைய சிற்பிகள் அதை மேலும் அழகு படுத்தி இருப்பார்கள். அவன் 'மாடல்' வைத்துப் படைத்திருப்பானா யாரோ ஒரு சிலருக்குத்தான் அந்த மாடல் கிடைத்திருக்கும். ஆனால் மனித இயந்திரமாக மாறிவிட்ட உஷா நிச்சயமாக ஒரு மாடலாக ஆக முடியாது. எந்த ஓவியனும் அவளை வைத்து எழுத

வரமாட்டான். அவள் சிதைந்த சிலையாகி விட்டாள் என்று தான் கூறமுடியும்.

மனித சிருஷ்டியை மதிக்கும் பொழுதுதான் அதுவும் அழகாக இருக்கிறது. அது பாழ்படுத்தப்பட்டால் அது தன் அழகை இழக்கிறது.

"நீ அழகி என்பதால் தானே அவன் உன்னை வாட்டு கிறான். அதுவும் உனக்கு ஒரு வகையில் பாராட்டுதானே, அழகை அவன் மதிக்கிறான் என்பதுதான் அர்த்தம் என்றேன்."

"மதித்தால் பரவாயில்லை அதற்காகவே அவன் என்னை வெறுத்தால் அதைத்தான் நினைக்கும் பொழுது எனக்கு அழுகை வருகிறது. நான் உண்மையிலேயே அழகாகத்தான் இருந்தேன். பெண் எப்பொழுதோ ஒரு முறைதான் மிக அழகாக இருக்கிறாள். அதைத்தான் மணப்பருவம் என்று கூறுகிறார்கள்." மேலும் தொடர்ந்தாள், "அப்பொழுது எத்தனையோ பேர் பார்க்க வருகிறார்கள். அப்பொழுது அழகைக் கட்டிக் காத்தேன். இப்பொழுது அழகு என்னைத் தட்டிக் கழித்து விட்டது. நான் ஒரு ஆபீசு குமாஸ்தா" என்று தன்னை வருணித்தாள்.

வளையல்கள் அணிய வேண்டிய கை கைக்கடியாரத்தை அணிந்திருந்தது. அது இன்று 'பாஷன்' ஆகிவிட்டது. அவள் ஒரு தொழிலாளி என்பதை ஒரு கையில் வளையல் ஒரு கையில் கடிகாரம் காட்டியது. வீட்டில் அவள் பெண்; வெளியே அவள் தொழிலாளி. இதுதான் கைக் கடிகாரத்தின் அடையாளம். அவள் வாழ்க்கையில் ஏற்பட்ட பெரிய மாற்றம் அது. தோளில் ஒரு பை; கையில் ஒரு கடிகாரம்; இது அவளைப் பற்றி நினைக்கும் பொழுது மறக்க முடியாத சித்திரம்.

இன்று பெண்மை தன் பொலிவை இழக்கிறதே என்று நினைத்து வந்தேன். எங்கேயாவது யாராவது அழகாக

இருந்தால் என் மனம் மிகவும் மகிழ்ச்சி அடைகிறது. அவளுக்கும் எனக்கும் எந்தவிதத் தொடர்பும் ஏற்பட்ட தில்லை. ஏற்படப் போவது இல்லை. இருந்தாலும் இந்த உலகம் அழகாக இருக்கிறது. வாழத் தகுந்த இடம்தான் என்று என்னையும் அறியாமல் எண்ணி விடுவது உண்டு.

அவள் ஒரே லட்சியம் தன் தங்கைக்கு வாழ்வு கொடுக்க வேண்டும் என்பதுதான். தனக்குக் கிடைக்காத வாழ்வை அவளுக்குத் தருவதில் அவள் ஆர்வம் காட்டினாள். அந்த ஆசையால்தான் அவள் என்னோடு அதிகம் பழகினாள். அது தெரியாது. அப்படிச் சொல்லி விடவும் முடியாது. மனிதர்களுக்கு இரண்டு விதமான உணர்வுகள் இருக்கின்றன. ஒன்று உலக இயலோடு ஒரு பொருளைப் பார்ப்பது; மற்றொன்று தன் அனுபவ இயலோடு பார்ப்பது. இந்த இரண்டாவது இயலும் அவளிடம் இருக்கத்தான் செய்தது. முன்னதை வாய்விட்டுச் சொல்ல முடிகிறது; பின்னதைச் சொல்ல முடிவதில்லை. சொல்லாமல் இருப்பதும் நல்லதுதான். மனத்தில் தோன்றும் சலனங்களுக்கு எல்லாம் சொற்களைப் படைக்க முடியாது; படைக்கவும் கூடாது.

என்னை நீக்கிவிட்டுக் கண்ணம்மாவின் வாழ்க்கையைப் பற்றி எண்ணிப்பார்க்கிறேன். அவள் இரண்டு குழந்தைகளுக்குத் தாய். அவளுக்கு வாழ்க்கையில் லட்சியம் இருந்தது. வாழமுடியாமையே அவள் வாழ்வின் லட்சியம். அதற்காக நடத்தும் போராட்டமே அவள் தொழிலாகவும் போய்விட்டது. அவளுக்கு ஒரு காப்பு வேண்டும். அதற்கு ஓவியர் கிடைத்தார். அவர் வாழ்வும் இந்த வகையில் நிறைவு பெறுகிறது. வறண்ட துறவில் வாழ்க்கை முடியாமல் தொண்டில் அவர் வாழ்வு சிறக்கிறது. அவர் நாளைக்குச் செத்தால் கண்ணீர் விட ஒரு ஜீவன் இருக்கிறது. அவருக்குப் பந்தம் பிடிக்க இரண்டு ஆத்மாக்கள் வளர்ந்து கொண்டு

இருக்கின்றன. 'தாத்தா' என்று அழைக்க அவர்கள் அவரைச்சுற்றி இருக்கிறார்கள்.

எனக்கு 'அப்பா' என்று அழைக்க ஒரு ஜீவனும் இல்லை. அவர் அதிருஷ்டசாலி; பெரிய பதவி கிடைத்து விட்டது. அன்புக்கு அடுத்த சொல் அருள் என்பார்கள். அப்பாவுக்கு அடுத்த பதவி தாத்தா. அவர் பதவியைப் பெற்று உயர்வு பெற்றுவிட்டார். அந்த வகையில் அந்தக் குடும்பத்தைப் பார்க்கும் பொழுது எனக்கு மனநிறைவு ஏற்பட்டது. அதைவிட நான் என்ன பெரிய வாழ்க்கை அமைத்துக் கொடுக்கப் போகிறேன். இதைப் போன்ற நினைவுகளும் வராமல் இல்லை. அவர்களை ஒன்றாகச் சேர்த்துப் பார்க்கும் பொழுது 'குடும்பம்' என்ற அழகான சொல் என்னிடம் அமைந்தது.

என் தாயும் நானும் மட்டும் இருப்பது ஒரு குடும்ப மாகப் படவில்லை. அதே போலத் தந்தையும் மகனும் மட்டும் ஒருவருக்கு ஒருவர் உதவிக் கொண்டு இருந்தாலும் அது குடும்பம் என்று யாரும் சொல்லுவதில்லை.

ஒரு பெரியவரைச் சந்தித்தேன். அவர் 'துறவி' என்று தன்னைக் கூறிக்கொண்டார். அவருக்கு ஒரு மகனும் இருந்தார். அவன் வயதானவனாகவே காணப்பட்டான். அவனுக்கு முப்பது வயது இருக்கும். குழந்தை மனம் படைத்தவனாக இருந்தான். அப்பா மகனைப் பத்திரமாகக் காத்து வருகிறராம்.

"நான் இவனைக் கேட்டுப் போகாமல் காப்பாற்றி வருகிறேன். 'பிரம்மச்சரியம் கெடாமல்' காப்பாற்றி வருகிறேன் என்று சொன்னார். கன்னியைத்தான் கற்புக் கெடாமல் இருக்கக் காப்பாற்றுவதைப் பார்த்து இருக்கிறேன். காளைப் பருவம் மிக்க ஆளையும் இப்படிக் காப்பாற்றுகிறார் என்று அறிந்ததும் சிரிப்பதா சிந்திப்பதா என்று தெரியாமல் திகைத்தேன்.

"உங்களுக்கு ஏதாவது சொத்து இருக்கிறதா?" என்று கேட்டேன்.

"அறிவுதான் சொத்து. அவனை பி.ஏ. வரை படிக்க வைத்திருக்கிறேன்" என்று சொன்னார். பையன்தான் காலையில் இருவருக்கும் சேர்த்துச் சமைக்கிறானாம். இரவு எட்டு மணிக்கெல்லாம் அவன் வீடு வந்து சேர்ந்துவிட வேண்டுமாம். அம்மா என்னை அப்படி எல்லாம் கட்டுப் படுத்தியது இல்லை. மகன் 'கட்டைப் பிரம்மச்சாரியாகக்' காலம் கடத்துகிறானே என்பதில்தான் அவர்களுக்குக் கவலை. இது தாய் மனம் என்பதை அறிய முடிந்தது.

## 10

குப்பத்திற்குச் சென்று வந்தது என்னால் மறக்க முடியவில்லை. ஞாயிற்றுக்கிழமை பொழுது போவது சில சமயம் கஷ்டமாகத்தான் இருக்கிறது. ஏன் விடுமுறை விடுகிறார்கள் என்று தோன்றாமல் இல்லை. அவனுடைய அந்தரங்க ஆசைகள் வேகமாகச் செயல்படுகின்றன. அந்த விடுமுறை நாளில்தான் என்பது என்னைப் பொறுத்தவரை என்று உணர முடிந்தது.

ஒவ்வொருவருக்கும் ரகசியமான ஆசைகள் ஒரு சில இருக்கத்தான் செய்யும். அதில் என் ஆசை விசித்திர மானதுதான். குப்பத்திற்குச் சென்று என் 'புரட்சியைப்' பார்க்க வேண்டும் என்ற ஆசை என்னை விடாமல் தள்ளியது.

இதைப் போல மனத்தைச் சிதறக் கூடாது என்றுதான் எல்லாரும் சொல்கிறார்கள். 'அகல் விளக்கு' என்று நினைக்கிறேன். மிகப் பழைய கதை. எப்பொழுதோ படித்த நினைவு. அழகாக இருக்கின்ற இளைஞன் கெட்டு விடுகிறான். அழகில்லாதவன் அகல் விளக்காக

எப்பொழுதும் நிதானமாக இருக்கிறான். இரண்டும் இரண்டு எல்லைகள் என்று நினைக்கிறேன். சந்திரன் அதுதான் அழகானவன் ரொம்ப வேகமாக அழிகிறான்; வேலப்பன் தன்னைக் காத்துக்கொள்கிறான். நான் இரண்டுக்கும் இடைநிலையில் இப்படியும் அப்படியுமாய் இருக்கிறேன். என்னைப் போலத்தான் பெரும்பான்மை யோர் இருப்பார்கள் என்று நினைக்க வேண்டியுள்ளது. எல்லாரையும் எப்படி அப்படிக்கூற முடியும். நான் அப்படி இருக்கிறேன்.

"ஆகவே பிள்ளைகளே ஒழுக்கமே உயர்வு தரும்" என்றுதான் ஒவ்வொரு கதையும் சொல்லுகிறது. கேட்க நன்றாக இருக்கிறது. அப்படியே கட்டுப்பாடாக இருப்பதில் என்ன வாழ்க்கை இருக்கிறது. அப்படி ஒன்றும் என்னை ஒழுக்கம் கெட்டவன் என்று கூற முடியாது. காதல் என் பிறப்புரிமை; புரட்சி வளர்ச்சியின் அறிகுறி. இப்படித்தான் தாவிக் கொண்டு இருக்கிறேன். இதற்கு இடையில் விசித்திரமான மனிதர் சமுதாய உணர்வை ஊட்டி என்னைச் சுற்றுப்புறத்தையும் பார்க்க வைக்கின்றார்.

இதுவரை எழுந்த கதைகள் எல்லாம் தனிப்பட்டவர் வாழ்க்கையைச் சித்திரித்துக் கொண்டு இருந்தன. பால் உணர்வை மையமாக வைத்து நல்லவன் கெட்டவன் என்று மனிதர்களைப் பகுத்துக் கொண்டு இருந்தன. அந்தக் கண்ணோட்டத்தோடு தனி மனிதர்களைப் பார்ப்பது தவறு என்பதை அந்த ஓவியரிடம் பழகிய பிறகுதான் தெரிந்தது.

அவர் காட்டிய சூழ்நிலையைப் பார்த்த பிறகுதான் அங்கே யார் நல்லவர் கெட்டவர் என்பது விளங்கவில்லை. சுரண்டப்படுகிறவர் சுரண்டுகிறவர் என்றுதான் மனித இனத்தைக் காணமுடிகிறது. அங்கே வாழ்பவர் அனைவரும் சுரண்டப்படுகிறவர்கள். தம் உழைப்புக்கு ஏற்ற ஊதியம் பெறாதவர்கள். மனித அடிப்படைகளைக் கூட

அடைய முடியாத நிலையில் வாழ்பவர்களாகக் காணப் பட்டனர்.

வாழ்க்கையில் எந்த விதமான வசதியோ பரது காப்போ இல்லாதவர்களாக வாழ்கிறார்கள். இன்று வேலை கிடைக்கிறது. மறுநாள் வேலை கிடைக்கும் என்று சொல்ல முடிவதில்லை. பிள்ளைகளைப் படிக்க வைக்க முடிவதில்லை. அவர்களை உருவாக்க வசதிகளைப் பெறாமல் புறக்கணிக்கப்படுகின்றனர். யாராவது நல்ல ஆடை உடுத்திப் பார்க்க முடியவில்லை. இதைப்பற்றி நினைப்பதால் பயன்? அவர்கள் வாழப் பிறந்தவர்கள் அல்ல போராடப் பிறந்தவர்கள். அவர்கள் நிச்சயமாகப் போராடத்தான் போகிறார்கள். வெற்றி அவர்கள் பக்கத்தில் நிச்சயம் ஒரு நாள் கிடைக்காமல் போகாது.

இந்தத் துன்பத்தை எல்லாம் மறக்க ஒரே வழி. 'காதல் தான்' காதல் ஒரு போதை என்று நினைக்கிறேன். யாராவது ஒருத்தியைக் கைப்பிடித்தால் அவளைச் சுற்றி ஒரு வாழ்க்கையை அமைத்துக்கொள்ள முடியும். பிறகு அந்தக் குடிசைப் பக்கமே போக வேண்டியிருக்காது.

'குப்பத்திற்குச் சென்றேன்' என்று உஷாவிடம் சொல்லாமல் இருக்க முடியவில்லை. "தெரியும்; போகாமல் இருக்கமாட்டீர்கள்; ஆறு நாள் ஆபீசில் கிடக்கிறீர்; ஒரு நாள் ஒரு மாற்றம்" மறுபடியும் கொஞ்சம் விளக்கமாகச் சொன்னாள். "இந்த ஆபீசு சூழ்நிலையில் பழகிவிட்ட உங்களுக்கு அது ஒரு பெரிய மாற்றம்" என்றாள்.

என்னை அங்கிருக்கும் பைல்கள் முறைத்துப் பார்ப்பது போல இருந்தன.

"நான் இந்த வாரம் கட்டாயம் எதிர்பார்த்தேன்" என்றாள்.

"உன்னை உங்கள் வீட்டில் சந்திக்க விரும்பவில்லை" என்றேன்.

"என் தந்தை எதிர்பார்த்தார்" என்றாள். எனக்கு ஆச்சரியமாக இருந்தது. அந்த மாஜி இன்ஸ்பெக்டர் என்னை எதிர்பார்த்தது ஆச்சரியமாக இருந்தது. 'குற்றவாளியைச்' சிறைப்படுத்த விரும்புகிறார் என்று பட்டது.

அவர் வாழ்க்கை என்னை மிகவும் கவர்ந்திருந்தது. 'தப்பிப் பிறந்தவர்' என்று சொல்வார்களே அதில் அவரும் ஒருவர். லஞ்சம் வாங்காத அதிகாரி, மக்கள் நோயை நம்பி வாழாத மருத்துவர், வழக்குகள் குறைய வேண்டும் என்று நினைக்கிற வக்கீல்கள், மக்களும் அறிவாளிகள் என்று நினைக்கிற அரசியல் வாதிகள், உரிமை கொடுத்து வாழ நினைக்கும் தம்பதிகள், மகள் திருமணத்தைத் தள்ளிப் போடலாம் என்று நினைக்கும் தாய்மார்கள், குழந்தைகள் இல்லாமல் இல்லறம் நடத்திச் சமூகத்திற்குத் தொண்டு செய்ய முடியும் என்று நம்புகின்ற ஆண் பெண்கள், கான்வென்டில் படிப்பது நம் தாய்மொழியையும் நம் தாய் நாட்டையும் நம் பண்பாட்டையும் மறப்பது என்று நினைக்கும் பெற்றோர்கள், தொழிலாளிகளின் உழைப்பைச் சுரண்டிப் பணம் சேர்க்கக்கூடாது என்று நினைக்கும் முதலாளிகள், அரசியல் தனிப்பட்டவரின் நன்மைக்காக அல்ல, சமுதாயத்தின் வளர்ச்சிக்கு என்று நினைக்கும் கட்சிக்காரர்கள் இவர்கள் எல்லாம் தப்பிப் பிறந்தவர்கள் என்பது என் எண்ணம்.

அவர் மகளுக்கு அதுதான் உஷாவின் தங்கைக்கு மணமாகாத குறை அவருக்கு இருந்தது என்பது எனக்கு நன்றாகப்பட்டது. அவர் லஞ்சம் வாங்கி இருந்தால் இந்த வேதனை அந்தக் குடும்பத்தை வந்து அடைந்திருக்காது. யோக்கியமாக வாழ்ந்தது அவர் தனிப்பட்ட வாழ்வில் செய்த ஒரு தவறு. சமூகப் பார்வையில் பார்க்கும்பொழுது அதுதான் லட்சியம், லட்சிய மாந்தர்கள் சமூகப் பார்வை யில் போற்றப்படுகிறார்கள். தனிப்பட்ட வாழ்வில் தூற்றப்

படுகிறார்கள். லட்சியத்துக்கும், வாழ்க்கை உண்மைக்கும் உள்ள வித்தியாசம் இதுதான். அவர் ஒரு லட்சிய மனிதராகவே வாழ்ந்து விட்டார்.

அவள் கேட்ட கேள்வியை நானும் திருப்பிக் கேட்டேன்.

"நீ ஞாயிற்றுக் கிழமை எந்தப் படம் பார்க்கப் போயிருந்தாய்?"

இப்படித்தான் கேட்க முடியும் ஒரு பெண்ணைப் பார்த்து. நீ எங்கே போயிருந்தாய் என்று எப்படிக் கேட்க முடியும்? எந்தப்படம் பார்க்கப் போயிருந்தாய் என்று கேட்பது தான் நியாயமான கேள்வியாகப்பட்டது.

இப்பொழுது யாரிடமாவது பேசுவதாக இருந்தால் இதைத்தான் கேட்க முடிகிறது. அதிலும் பெண்ணுக்குப் பிடித்த கேள்வி இதுதான் என்பதும் என் அனுபவமாக இருந்தது. அதற்கப்புறம் அவர்கள் சொல்லுவார்கள் தான் படம் பார்க்கப் போன கதையை, டிக்கெட்டு வாங்கு வதற்குள் பட்ட பாட்டிலிருந்து வீடு வந்து சேர்ந்த கதை வரைக்கும் சொல்லி முடிப்பார்கள்.

இதற்கு முன்னால் உஷா என்னிடம் சொல்லி இருக்கிறாள். ஒரு பகல் காட்சி பார்த்து விட்டு வீடு திரும்பிய கதையை, "அன்று பொழுது போகவில்லை. என்ன செய்வது என்றே தெரியவில்லை. 'ஒரு தாய்க்கு ஒரு மகள்' என்ற கதை அது. அந்த மாதிரி இதுவரை வந்ததே இல்லை அவளைச் செல்லமாக வளர்த்தாள் பிறகு எப்படியோ கதை முடிந்தது. அதைப் பார்த்து விட்டு பஸ் நிலையத்திற்கு வந்தேன். பத்திரகாளி படத்தில் ஒரு ஆள் பயங்கரமான உருவம் அதே போல இருந்தான் அவன். அவன் பின்னாலேயே நடந்து வந்தான். அப்பொழுதுதான் கணவன் எவ்வளவு அவசியம் என்பதை உணர்ந்தேன். பயிருக்கு வேலிபோல் பெண்ணுக்குக் கணவன் என்பதை

உணர்ந்தேன். அவன் என்ன நினைத்தானோ தெரிய வில்லை எனக்கே ஒரு பயமாகிவிட்டது. நான் ஏறுகிற பஸ்ஸிலேயே அவனும் ஏறினான். எனக்கு இன்னும் பயமாகிவிட்டது. பஸ் நகர்ந்தது. பெட்ரோல் பங்குக்கு ஒரு டிக்கட் கேட்டு வாங்கினேன். அவனும் அதே இடத்திற்கு வாங்கினான். நான் எங்கள் வீட்டுக்கு என்று இடம் சொல்லி இருந்தால் கட்டாயம் தொடர்ந்து இருப்பான். வேண்டுமென்றே இந்தப் பாதி தூரத்திற்கு வாங்கிக் கொண்டேன். அவசரப்பட்டு அவன் முன் இறங்கி விட்டான். நான் இறங்குவது போல அசைந்தேன் அவ்வளவுதான் தப்பித்துக் கொண்டேன்'' இந்த அனுபவத்தை அவள் என்னிடம் சொல்லியிருந்தாள். இதைப் போல ஏதாவது அனுபவத்தைக் கட்டாயம் சொல்லித்தீர்வாள் என்பதற்காககத் தான் "நீ எந்தப் படத்தைப் பார்த்தாய்?" என்று கேட்டேன்.

"வீட்டில் பழைய படங்களை எல்லாம் எடுத்து வைத்தேன். அவற்றை ஏறகட்டி வைத்தேன்" என்றாள். அதாவது கலியாணப் படங்களை எடுத்துப் பத்திரப் படுத்தினேன் என்று சொன்னாள்.

அவள் வீட்டுக்கு முதல் முதல் சென்ற போது அவள் திருமண அனுபவ நிகழ்ச்சிகள் அடங்கிய போட்டோ ஆல்பத்தை என் முன் எடுத்துவைத்தாள். அவள் அம்மாவுக்கும் அதைக் காட்டுவதில் ரொம்பவும் திருப்தி. குழந்தை இருக்கிற வீட்டில் அந்தக் குழந்தையை நம்மிடம் எடுத்துக் கொடுக்க முன் வருவது போலக் கலியாணமான புதிதில் இதைக் காட்டுவது வழக்கம் என்பதை ஏற்கனவே பார்த்திருக்கிறேன். இங்கே அவள் தன் கதையின் ஆரம்பத்தை அந்தப் படத்தைக் கொண்டு சொல்லத் தொடங்கினாள். ஆரம்ப பாடத்தைப் படங்கள் கொண்டு தானே சின்ன வயதில் கற்றுக் கொடுக்கிறார்கள். அந்த நினைவு என்னுள் ஓடத் தொடங்கியது. அவள் திருமணக்

கோலத்தில் மிக அழகாக இருந்தாள். அவள் நாணம் மிக்க பார்வை கலியாணத்துக்காகவே அமைந்து விட்டதுபோல இருந்தது. அவன் தலைப்பாகை கட்டியிருந்தான். நெற்றியில் ஏதோ பட்டமாம்; அதைக் கட்டி இருந்தார்கள். அவன் அன்று ராஜாவைப் போல் இருந்தான். "ஒரு நாள் இராஜா" என்று நான் எனக்குள் சொல்லிக் கொண்டேன்.

"பொருத்தமான ஜோடி" என்று பட்டது.

நான் என்னைப் பற்றி நினைத்துக் கொண்டேன். நானும் ஒரு நாள் ராஜாவாக ஆகாமல் போகமாட்டேன் என்று நினைக்கத் தொடங்கினேன். நிச்சயமாகப் 'புரட்சி' என் ராணியாக இருந்து 'போட்டோ' எடுத்துக் கொள்ள முடியாது. அந்த வாய்ப்பு எனக்குக் கிட்டாது. உஷா முடியாது. அவள் மற்றொருவனின் மனைவி.

"நீ விவாகரத்து செய்து கொள்ளலாமே" என்று நான் சொன்னது நினைவுக்கு வந்தது.

"அதனால் அவன் கெட்டுத்தான் தொலைவான்" என்று அழகாகச் சொன்னாள்.

பெண் ஏன் கணவனை விட்டுப் பிரிவது இல்லை என்பது அப்பொழுது தான் விளங்கியது.

அவனோடு தான் இருக்க வேண்டுமென்பது அடிப்படை அல்ல; அவன் தனியாக விடப்படக் கூடாது. என்பது தான் அவள் அழகிய தொடர் விளக்கியது.

அவள் அவன் மீது அக்கரை காட்டினாள் என்பது மட்டும் எனக்கு விளங்கியது. முன்னால் ஓவியர் சொன்னது நினைவுக்கு வந்தது. சீர்திருத்தம், சீரமைப்பு, அடியோடு மாற்றம் இந்த மூன்று நிலைகளில் அவள் முதற்படியில் நின்றாள் என்பது தெரிந்தது.

அவசரப்பட்டு விவாகரத்து செய்யக் கூடாது என்றாள். "நான் அவனை வெறுக்கால் தானே விவாகரத்து

செய்து கொள்ள வேண்டும். என்னால் அவனை வெறுக்க முடியவில்லை; துறக்க முடியவில்லை" என்றாள்.

"வெறுப்பு முதற்படி; துறவு இரண்டாவது நிலை" என்று சொல்வது போல இருந்தது.

"யாரிடமாவது சொல்லித் திருத்தி இருக்கலாமே".

"அது அவ்வளவு பயன்தராது. கள்ளோ காவியமோ படித்திருக்கிறீர்களா? கணவன் மனைவி தகராறில் மூன்றாவது ஆள் வரக் கூடாது என்பதைத்தான் அந்தக் கதை விளக்குகிறது" என்றாள். பலபேர் வாழ்க்கை முறிவுகளை அந்த நாவல் காத்திருக்க வேண்டும் என்று நினைக்கிறேன். அவர் குடும்ப நாவல்களுள் அது தலை சிறந்ததாகப் போற்றப் படுகிறது என்பது அவள் பேச்சால் அறிய முடிந்தது.

"நீ நாவல் படிப்பது உண்டா?" என்று கேட்டேன்.

"குடும்ப நாவல்கள் பிடிக்கும்" என்றாள்.

"இவ்வளவு நாவல் படித்தும் உன் வாழ்க்கையைத் திருத்திக் கொள்ள முடியவில்லை."

"இதுவரை எந்த ஆசிரியனும் என் கதையைச் சித்திரித்துக் காட்ட வில்லை."

இது புதிய செய்தியாகப்பட்டது.

"அதனால் தான் உங்களை 'அவர்கள்' பார்க்கச் சொன்னேன்' என்றாள்.

"இந்தப் படத்தில் நீ அழகாக இருக்கிறாய்" என்றேன். அதை அவளைப் பாராட்டுவதற்கு ஒரு வாய்ப்பாகப் பயன் படுத்திக் கொண்டேன்.

அவள் சிரித்தாள். "படம் எடுப்பதே அழகாக இருப்ப தால்தான்" என்று ஒரு புதிய தத்துவத்தைச் சொன்னாள்.

சில பேர் செத்த பிறகும் படம் எடுப்பதைப் பார்த்தி ருக்கிறேன். வாழும் போது அவர்களைப் பற்றி நினைவுகள் வராததால்தான் என்பதை எண்ணிப் பார்க்க முடிந்தது.

வித விதமாக அந்தப் படங்கள் எடுக்கப் பட்டிருந்தன. மணச் சடங்கு ஒவ்வொன்றுக்கும் முக்கியத் துவம் தரப்பட்டு இருந்தன. ஐயர் மிக அழகாக விழுந்திருந்தார். அவர் போட்டோவுக்கு போஸ் கொடுத்துப் பழக்கம் என நினைக்கிறேன். எல்லாம் கண்ணியமாக இருந்தன. அவர்கள் புறத் தோற்றத்தைத் தான் அவை காட்டின. அவன் அவளைப் பற்றி என்ன நினைக்கிறான் உண்மையில் அன்பால் பிணைந்தார்களா என்பதை அவை காட்டவில்லை. அவள் மட்டும் தன் நாணத்தால் அவனுக்காக அடங்கிக் கழுத்தை வளைத்துக் கொடுப்பதைப் பார்க்க முடிந்தது.

அப்படங்கள் சிலவற்றைப் பெரிதாக மாட்டிச் சுவரை அழகு படுத்தினாள். சுவருக்கு அப்படங்கள் அவசியம் போல் பட்டன. விளம்பரப் பலகைகளாக விளங்கின என்று அவள் வேடிக்கையாகச் சொல்லி இருக்கிறாள். நான் அப்படி நினைக்கவில்லை. அவை இனிய நினைவுகளாக அழகு செய்தன என்றுதான் கருதுகிறேன்.

அந்தப் படங்கள் கண்ணியமான தோற்றத்தோடு விளங்கின. திரைப் படத்தில் மட்டும் ஏதோ படங்கள் காட்டுகிறார்களே ஏன்? தெரியவில்லை. வாழ்க்கை என்பது அது தான் என்பது விளம்பரம். அற்புதமான படங்களை வெளியே விளம்பரப்படுத்துகிறார்கள். வெளி விளம்பரங்கள் இருக்கட்டும் உள் செய்திகளும் அப்படித் தானே இருக்கின்றன. அதற்காகவே இளைஞர்கள் சென்று படம் பார்க்கிறார்கள். சில சமயம் நானும் அந்தக் கவர்ச்சிக்கு உள்ளாகி இருக்கிறேன். "அடல்ட்ஸ் ஒன்லி"

படம் பார்க்கச் சென்றது உண்டு. அங்கே என்ன இருக்கிறது எல்லாம் சென்சார் போர்டு பார்த்துக் கழித்துவிட்ட படங்கள் தானே.

இந்தவகையில் நாடகம் என் மதிப்பில் உயர் இடம் பெறுகிறது. அங்கே குறிப்புதான் இடம் பெறும். கலைக்கே இந்த நுட்பம் அவசியம். பல்லாயிரக் கணக்கான பேர் பார்க்கும் படங்கள். அங்கே நுட்பமாகக் காட்டினால் அவர்களால் ஏற்றுக் கொள்ள முடியாது. நம் நாட்டுப் ப்டங்கள் எவ்வளவோ மேல். ஆங்கிலப் படங்கள் 'ஒரு உணர்ச்சியை வைத்தை முழுப் படத்தை எடுத்துக் காட்டி விடுகிறார்கள். அதற்காகப் பலர் அதைப் பார்க்கப் போகிறார்கள். 'வற்புறுத்தல்' (rape) என்பதே படத்தின் தலைப்பாக இருக்கும். அதையே முழுப் படமாகவும் காட்டி விடுகிறார்கள். அதைப் பார்க்கக் காரில் செல்கிறவர்கள் தான் போகிறார்கள். 'house full' என்று பலகை மாட்டி விடுகிறார்கள். 'கலைகள் மெத்த வளருது மேற்கே' என்றுதான் நான் நினைப்பது உண்டு.

நம் தமிழ்ப் படங்களில் கத்திச் சண்டைகள் குறைந்து வருகின்றன. வாழ்க்கைச் சித்திரங்கள் மிகுதியாக இடம் பெறுகின்றன. இது வரவேற்கத்தக்க முயற்சி என்றுதான் கூறமுடியும். வீரத்தைக் காட்டுவதற்குக் , கத்திச் சண்டை பயன்படுத்தப்பட்டது. அது அந்த மாதிரி பழைய காலத்துச் சண்டைக்கு அவசியம் தான். வாழ்க்கைச் சித்திரத்துக்குத் தேவைப்படாது என்று நினைக்கிறேன்.

கீழ் நிலையில் இன்னும் வீரமாகத்தான் பல பேர் இருக்கிறார்கள். எதற்கும் துணிந்து விடுகிறார்கள். எந்தத் தொழிலாளியும் விட்டுக் கொடுக்க மாட்டான். அவன் 'சம அந்தஸ்து' 'சம உரிமை' என்ற போராட்டத்தில் கால் எடுத்து வைத்து விட்டான். ஆனால் இன்னும் கிராமங்களில் தொழில் அடிமை இருக்கத்தான் செய்கிறது.

காலம் மாறிக் கொண்டு இருக்கிறது. அவர்களும் எழுச்சி பெறுகிறார்கள்; பெற்றுக் கொண்டு வருகிறார்கள்.

இந்த நடுத்தர வர்க்கத்தில் தான்'காக்காய் பிடித்தல்' என்ற கெட்ட பழக்கம் இன்னும் ஓட்டிக் கொண்டு இருக்கிறது. இது வெள்ளையன் கற்றுக் கொடுத்த பாடம் என்று நினைக்கிறேன். அவனிடம் நல்லவிதமாக நடந்து காட்டினால் அவன் உடனே பதவி உயர்வு கொடுத்தான். அதே பழக்கம் பலருக்கு இப்பொழுது படிந்து விட்டது. அதெல்லாம் எனக்குத்தெரியவில்லை. நானும் எப்படியோ நாலு பேர் மதிக்கவே தொழில் செய்து வருகிறேன்.

எனக்கு என் அதிகாரியைக் கூடத் தேவையில்லாமல் பார்ப்பது இல்லை. எல்லாம் எழுத்து மூலமாகத் தான் தொடர்பு கொள்வேன். அதனால்தான் என் சுயமரியாதை யைக் காப்பாற்றிக் கொள்ள முடியும் என நினைக்கிறேன்.

"அவன் கெட்டுப் போனால் உனக்கு என்ன?"

அவள் மீண்டும் சொன்னாள் "மண வாழ்வே மனிதனைக் காப்பாற்றுவதற்குத் தான். ஒருவனுக்கு ஒருத்தி என்ற கட்டுப்பாடு இல்லை என்றால் அவன்காட்டு மிராண்டியாகிவிடுவான். அவனைக் கட்டுப்படுத்த முடியாது. ஆடவர் திருந்தி வாழ்வதே மண வாழ்வில்தான்" என்று அவள் தெளிவாகக் கூறினாள்.

திரு.வி.க. எழுதிய பெண்ணின் பெருமை என்னும் நூல் கவனத்திற்கு வந்தது. அதை அவள் சொற்களில் நேரில் காண முடிந்தது.

"பின் ஏன் அவன் உன்னை வெறுத்து ஒதுக்குகிறான்?"

"அந்தக் கட்டுப்பாட்டை அவர் விரும்பவில்லை. சில மாடுகள் கையிலிருந்து கயிற்றையும் அறுத்துக் கொண்டு ஓடுவதைப் பார்த்தது இல்லையா?"

"கடைசியில் அது கட்டுக்குள் அகப்பட்டுத்தானே ஆக வேண்டும்" என்று சமாதானமும் சொன்னேன்.

இந்தச் சின்ன வயதில் அவளுக்கு இவ்வளவு அனுபவம் ஏற்பட்டிருக்கிறது கண்டு வியந்தேன்.

"உன் வயது என்ன? இருபத்தாறு என்று நினைக்கிறேன்".

"பல முறை இதே கேள்வியைக் கேட்டு இருக்கிறீர்கள். என் வயது இருபத்திரண்டு என்று சொல்லி இருக்கிறேன். மறந்து விடுகிறீர்கள். மார்க்கண்டேயனுக்கு என்றும் பதினாறு. எனக்கு உங்களைப் பொறுத்த வரையில் என்றும் இருபத்தாறு" என்றாள்.

"அதற்கு என் வயதுதான் காரணம். என்னை வைத்து உன்னைப் பார்க்கிறேன்" என்றேன்.

அவள் கண்களில் நீர் நிறைந்தன. அந்த வாய்ப்பு அவளுக்குக் கிடைக்கவில்லையே என்ற ஏக்கத்தை அவள் கண்ணீர் எடுத்துக் காட்டியது.

"ஏன் அழுகிறாய்?"

"அழ வேண்டும் போல் இருந்தது"

"அப்படிக் கூடவா தோன்றும்?"

இப்படியெல்லாம் அவள் பேசி இருக்கிறாள். அந்த நினைவுகள் 'அந்த ஆல்பத்தைப்' பார்த்ததும் நினைவுக்கு வந்தன.

"இப்பொழுது இந்தப் படங்களை மறைக்க வேண்டும். அப்பொழுதுதான் எனக்கு அமைதி கிடைக்கும்" என்றாள்.

மேலும் சொன்னாள் "அம்மா இதை ஒப்புக் கொள்ள வில்லை. வீட்டுக்கே இந்தப் படங்கள் தாம் களை, இவற்றை நீக்கிவிட்டால் குட்டிச்சுவர் தான் மிஞ்சும் என்கிறாள். அவர் களுக்கு என்ன தெரியும். என் உணர்ச்சிப்

போராட்டத்தை, என்னைப் பிடிக்காத ஒருவரின் முகத்தை நான் எப்படிப் பார்க்க முடியும்? எவ்வளவு தொல்லை தெரியுமா? வீட்டுக்கு வருகிறவர்கள் எல்லாம் என்ன கேட்கிறார்கள் எப்பம்மா நீ மாமியார் வீட்டிற்குப் போகப் போகிறாய் என்று கேட்கிறார்கள். அல்லது ஏனம்மா அவர் வர்ரதே இல்லையா சண்டையா என்ன? நான் எப்படிச் சொல்ல முடியும். எனக்கும் அவருக்கும் மனம் ஒத்துப் போகவில்லை என்று.

எனக்கு என்று ஓர் இதயம் இருக்கிறது என்பதை இந்த வீட்டில் உள்ளவர்கள் உணர்வதில்லை.

ஒன்று மனதுவிட்டுச் சொல்லுகிறேன். தெருவில் யாராவது ஜோடியாக இரண்டு பேர் போனால் என் உள்ளத்தில் எழும் குமுறலை நான் எப்படிச் சொல்ல முடியும்.

திருக்குறளைப் புரட்டிப் படிப்பேன். அதில் ஏதாவது எனக்கு ஆறுதல் கிடைக்கும் என்று எதிர்பார்த்தேன். மனை மாட்சியைப் பற்றி அவர் பேசுகிறாரே தவிர, மனையோன் மாட்சியைப் பற்றி அவர் பேசியதாகத் தெரியவில்லை. அவன் திருந்துவதற்கு என்ன சொல்லியிருக்கிறார். கட்டிய மனைவியை வைத்து வாழ வேண்டும் என்று எங்கேயாவது சொல்லியிருக்கிறரா? கூடா ஒழுக்கம் கூடாது என்றுதான் பேசுகிறார். அதைக்கூட நான் தடுக்க வில்லையே; எப்படி யாவது ஒழிந்து போகிறான். நான் போராடுவது எல்லாம் இந்தச் சமூகம் எனக்கு அளிக்க வேண்டிய கவுரவத்துக்குத் தான், என்னைக் கண்டு ஒரு சிலர் இரக்கம் காட்டு கிறார்கள். எல்லாம் போகப் போகச் சரியாகப் போய்விடும் என்று ஆறுதல் கூறுகிறார்கள். அவ்வளவுதான்.

எதைத் தாங்கினாலும் தாங்கிக் கொள்ளலாம். பிறர் நம்மைக் கண்டு இரக்கம் காட்டுவது எனக்குப் பிடிக்க வில்லை. அவன் முகத்தில் விழிக்கக் கூடாது என்ற எண்ணம் இப்பொழுது அதிகமாகிக் கொண்டு வருகிறது.

நீங்கள் குப்பத்துக்குச் செல்கிறீர்கள். அங்கே யார் நல்லவர் யார் கெட்டவர் என்று உங்களால் கூற முடிந்ததா? மொத்தமாகப் பார்க்கும்பொழுது அவர்களைச் சுரண்டப் பட்டவர்கள் என்று கூறி விட்டீர்கள். அவர்களுடைய நல்ல பண்புகளை எல்லாம் கூட இந்த மேல் நிலை மட்டத்தார் சுரண்டிவிட்டார்கள் என்றுதான் கூற முடியும். வாழ்க்கை வசதிகளை அவர்களுக்கு மறுத்து விட்டனர். அதனால் அங்கே எப்பொழுதும் ஒரு அமைதியின்மையைக் காண்கிறீர்கள்.

அதே நிலைதான்; நான் சுரண்டப்பட்டவள்; என் நலம் எல்லாம் அவனால் கெட்டு விட்டது; அப்பாவிடம் பெற்ற பணத்தை எல்லாம் சுரண்டி எங்கள் குடும்பத்தை நாசப்படுத்தி விட்டான். அவனைச் சீர்திருத்த முயன்றேன்; அதில் தோல்வியைத்தான் கண்டேன். என் மனநிலையைச் சீர் அமைப்புச் செய்து கொள்வதற்குத்தான் இந்தப் படங் களைக் களைய வேண்டியதாயிற்று. அதற்காகத்தான் இந்த ஞாயிற்றுக் கிழமையை முழுவதும் பயன்படுத்தினேன்" என்று கூறி முடித்தாள். அவள் பேசியது ஒரு கட்டுரையைப் படிப்பது போல இருந்தது.

"ஒவ்வொரு படத்தையும் ஒரு தாள் போட்டுக் கட்டி வைத்தேன். அதோ அந்த மூலையில் உறங்கிக் கிடக்கின்றன."

அவள் பழைய நினைவுகளை மேலும் தட்டி எழுப்ப நினைக்கவில்லை.

"அப்பொழுது உன் எதிர்காலம்?"

"அதுதான் தெரியவில்லை."

"மணமாகாத பெண்ணுக்கு நம்பிக்கை இருக்கிறது அவள் எதிர்காலத்தைப் பற்றி; விதவைக்கு இறந்த காலம் அவளுக்குப் பழங்கதையாகி விடுகிறது. நான் இரண்டும்

கெட்ட நிலையில் வேதனைப்பட்டுக் கொண்டு இருக்கிறேன்" என்றாள்.

இந்தப் பேச்செல்லாம் நான் ஆபீசில் பேசியது இல்லை. சில நாட்களில் அவள் வீட்டுக்குச் சென்றது உண்டு. அப்பொழுது வேறு பேச முடியாத காரணத்தால் அவள் உள்ளக் குமுறல்களைக் கேட்க வாய்ப்புகள் ஏற்பட்டன.

ஒன்று ஏழையாகப் பிறக்க வேண்டும். அல்லது பணக்காரக் குடும்பத்தில் வசதி மிக்க வாழ்வு பெற வேண்டும். இரண்டும் கெட்ட மத்தியதர வாழ்க்கையில் தான் இந்த இக்கட்டான நிலை என்றாள்.

இதைப் போலப் பலர் பேசக் கேட்டிருக்கிறேன். அவள் சொல்லியதில் எந்தப் புதுமையும் காணப்பட வில்லை.

பிறகுதான் தெரிந்தது அதற்கு அர்த்தம் இருந்தது. கட்டுப்பாடுகள் எல்லாம் இந்த மத்தியநிலைக் குடும்பங் களுக்குத்தான். அவர் காட்டிய குப்பத்தில் இப்படி யாரும் வாழா வெட்டியாக இருந்ததில்லை. அவள் தனக்கு வேண்டிய மற்றொருவனை உடனே தேர்ந்து எடுத்துக் கொள்வாள். அவனோடு குடித்தனம் செய்வாள். துணிந்து அவனைத் தந்தையாக்கி விடுவாள்; இரண்டொரு குழந்தை களுக்கு, அதைத்தான் அவள் சுட்டிக் காட்டினாள்; மேல் நிலையில் துணிந்து அவனைத் துறப்பாள் சட்டப் பின்னணியில், உடனே விளம்பரம் தந்து மற்றொருவனை மணப்பாள். பாவம் உஷா, அவள் குடும்பத்தைப் பற்றி எண்ணுகிறாள். அதைவிட மற்றொன்று சொன்னதுதான் எனக்கு இன்னும் வேதனையைத் தருகிறது.

"யார் என்னைத் துணிந்து மணம் செய்து கொள்வார்கள்?"

இந்தக் கேள்விக்கும் 'அவள்' கேட்ட கேள்விக்கும் நிறைய வித்தியாசம் இருக்கிறது. "நீ ஒரு விதவையை மணப்பாயா? என்னைக் கலியாணம் செய்து கொள்ளத் துணிவு இருக்கிறதா?" என்று கேட்டாள். அது அநாகரிகமாகப் பட்டது.

இது நாகரிகமாகப் பட்டது. அவள் பொதுவாகவே இந்தக் கேள்வியை எழுப்பினாள்.

இந்தப் பொதுக் கேள்விக்கு நான் பதில் சொல்ல முடியவில்லை. யாருமே சொல்ல முடியாது என்றுதான் நினைக்கிறேன்.

கண்ணம்மாவின் வாழ்க்கைக்கும் உஷாவின் வாழ்க்கைக்கும் நிரம்ப வித்தியாசம் இருக்கிறது. அவள் நினைத்தால் யாரையும் துணிந்து தேர்ந்து எடுத்துக் கொள்ளலாம். சுருக்கமாகச் சொன்னால் அவளை யார் வேண்டுமானாலும் எப்படிச் சொல்வது வைப்பாட்டியாக வைத்துக் கொள்வான்; அது அவளுக்குப் போதும். அந்த நிலையிலும் அவள் கவுரவம் இழக்க மாட்டாள்.

"அவள் என்ன செய்வாள்; கணவன் செத்து விட்டான். இன்னாரை வைத்துக் கொண்டிருக்கிறான் என்று முடித்து விடுவார்கள். அவளுக்குப் பழையபடி எல்லா மதிப்புகளும் இருக்கத்தான் செய்கின்றன. அவள் கவுரவத்துக்குத் தன் வாழ்வை இழக்க வேண்டியது இல்லை.

உஷா? கவுரவத்துக்காக எல்லாவற்றையும் இழக்க வேண்டியுள்ளது. அதுவும் இன்ஸ்பெக்டர் மகள்; கவுரவ மாக வாழ்ந்த குடும்பம்; அப்பாவின் கண்காணிப்பிலிருந்து அவள் தப்ப முடியாது.

மற்றும் அவள் சொல்வாள், "நான் மணமாவதற்கு முன் வாய்ப்புக் கிடைத்திருந்தால் தவறி இருப்பேன்; இப்பொழுது அந்த எண்ணமே உண்டாவது இல்லை. தவற

இந்தச் சமூதாயமே உரிமை கொடுத்தாலும் என்னால் முடியாது'' என்கிறாள்.

அது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. மணவிலங்கு எத்தகையது என்பதை அப்பொழுதுதான் தெரிந்து கொண்டேன், எனக்கு மானம்தான் பெரிது என்று வற்புறுத்திக் கூறுகிறாள்.

அவள் என்னைப்பார்க்கச் சொன்ன படத்தோடு அவளை ஒப்பிட்டுப்பார்க்கிறேன். பாலச்சந்தர் சமாளித்துக் கொண்டார். அவர்கள் படத்தில் அந்தக் கதை ஒரு வகையாக முடிவு பெறுவதற்கு ஒரு குழந்தை இருந்தது. அவள் வாழ்வதற்கு ஒரு பிடிப்பைத் தந்தது அந்தக் குழந்தை. எத்தனையோ பெண்கள் மன அமைதியோடு பழைய நினைவுகளில் வாழந்துகொண்டிருப்பதைப் பார்க்கிறேன். அவர்கள் தாய்மை பெண்மையைக் காப்பாற்றிவிடுகிறது. அக் குழந்தைகளின் நன்னடத்தையில் கவனம் செலுத்து வதால் அவர்கள் நல்ல பண்பு உடையவர்களாக மாறி விடுகிறார்கள்.

உஷாவுக்கும் ஒரு குழந்தை இருந்தால் உண்மையாக அவள் வாழ்க்கை ஒளிபெற்றுத்தான் திகழும். அவள் மார்பில் தவழ அது எவ்வளவோ ஆறுதலாக இருக்கும். அவளுக்கு ஒரு லட்சியம் கிடைத்துவிடும். சின்ன ஆசைகள் அவளைத் தின்ன வராது. அவள் அதை அணைத்து முத்தம் இடுவாள். அந்தச் சத்தம் அவளுக்கு இனிய நாதமாக இருக்கும். அதில் இந்த உலகத்தையே மறப்பாள். அந்த பாக்கியத்தை அவள் பெறவில்லை. அதற்குள்ளாகவே அவள் ஏறி இருந்த கிளை முறிந்துவிட்டது. அது அவனைத் தாங்க மறுத்துவிட்டது. அவளுக்குக் குழந்தை இல்லாததும் நல்லதுதானே. அது அவளுக்கு ஒரு கட்டுப்பாடுதானே என்று நினைப்பேன்.

“உஷா உனக்கு ஒரு குழந்தை பிறந்திருந்தால்”

"எனக்கு அந்த ஆசை தோன்றவில்லை. அந்தக் குழந்தை ஒரு பெண்ணாக இருந்தால் அதன் எதிர்காலம் என்னைப் போல் அமைந்து விட்டால்"

"பையன்தான் பிறப்பான்" என்றேன்.

"அவரைப் போல் மாறிவிட்டால்"

அவள் குழப்பத்தை மாற்ற முடியாது. சில சமயம் குழப்பமே நல்லது என்றும் படுகிறது. அதுவாவது அவளை இழுத்துப் பிடித்துக் கொண்டு இருக்கும் என்று நினைக்கிறேன்.

சில சமயம் என்ன பேசுவது என்பது தெரியாது. அவள் தங்கை 'காப்பி' கொண்டு வந்து கொடுப்பாள். நான் ஆபீசர் என்பதால் அவளும் கொஞ்சம் மரியாதை காட்டினாள். நான் அவர்கள் வீட்டுக்குப் போகும் பொழுதெல்லாம் பொதுவாக இன்ஸ்பெக்டர் வெளியே போய்விடுவார். நாகரிகம் தெரிந்த மனிதர் என்று நினைத்துக் கொள்வேன்.

"ஒன்றே ஒன்றை நான் வெறுக்கிறேன்" என்றாள் உஷா.

"அம்மா என்னைச் சுற்றிக் கொண்டே இருப்பாள். நான் யாரிடமும் பழக விடமாட்டாள். உங்களிடம் பேசிக் கொண்டிருந்தால் வந்து எப்படியும் கலந்து கொள்வாள். சில சமயம் நான் உங்களை நினைப்பேன். ஏதாவது பேச வேண்டும் என்று தோன்றும். ஆனால் பேச முடிவது இல்லை. வேண்டாத ஆபீஸ் விஷயங்களைத்தான் பேச முடியும். அப்பொழுது நிரம்ப சலிப்பு ஏற்பட்டுவிடும்."

"சில சமயம் அதற்காகவாவது அவர் இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று நினைப்பேன். கணவன் ஒருவர் இருந்தால் எவ்வளவு தைரியமாக உங்களை வர வேற்க முடியும். அந்த பாக்கியத்தை நான் செய்யவில்லை." என்று வாய்விட்டுக் கூறி விடுவாள்.

“பெண்கள் கணவன் பேரைச் சேர்த்துத் தம் பெயர் எழுதிக் கொள்கிறார்கள். நான் அதை விரும்பவில்லை. அவரே என்னோடு ஒட்டாதபோது நான் ஏன் அவர் பெயரை ஒட்டிக்கொள்ளவேண்டும். துணை இல்லாமல் வாழ முடியாது என்பதற்குத்தானே இப்படிப் பெயரை ஒட்டிக் கொள்கிறார்கள்” என்று கேட்டாள்.

“இல்லை. அவன் தன்னைவிட்டு எப்பொழுதும் விலகக் கூடாது என்பதற்காகத் தான்” என்றேன்.

அவள் சிரித்தாள். அவளுக்கும் ஏனோ தெரியவில்லை. என்னிடம் பேசித் தன் துன்பத்தைக் கொட்ட நினைத்தாள்.

அவளுடைய மென்மையான உணர்வுகளைப் புரிந்து கொள்ள அவளுக்கு நான்தான் அகப்பட்டேன். எவ்வளவோ அடக்கி வைப்பாள்; முடியாது. ஏதாவது சொல்லித் தீர்ப்பாள்.

நானும் பொறுமையாகக் கேட்பேன். அதில் எனக்கும் ஒரு திருப்தி. நாம் பிறர் சொல்லக் கேட்பது ஒரு கலை; அது அவசியம்; பிறர் சுமையைக் குறைக்க முடிகிறது. அது ஒரு நியாயமான தொண்டு என்றே நினைப்பது உண்டு. ஆனால் உஷாவிடம் அப்படி என்று நினைக்க முடிவது இல்லை. அவள் வாழ்வில் எனக்கும் பங்கு இருப்பது போன்ற உணர்வு எழுவது உண்டு. அதனால் தான் நான் அவள் பேசுவதைப் பொறுமையாகக் கேட்கிறேன் என்று நினைக்கிறேன்.

இப்படித்தான் நினைத்துப் பழகினேன் அன்று யாருமே வீட்டில் இல்லை. நான் அப்படி எதிர்பார்க்க வில்லை. அவள் அப்பா பென்ஷன் வாங்க வெளியே சென் றிருந்தார். அம்மா, தங்கை எங்கேயோ சென்றிருந்தார்கள். ஏன் அந்தத் தனிமை கிடைத்தது என்று தெரியவில்லை. அன்று நாங்கள் கணவன் மனைவியராக ஆகிவிட்டோம்.

சன்னல் திறந்து இருந்தது. வெளியே மாலை நேரக்காற்று மயக்கத்தை உண்டாக்கி விட்டது. அவள் ஆபீசு குமாஸ்தாவாக அன்று காணப்படவில்லை. கோயில் சிலையின் சிற்பமாக அவள் எனக்குக் காட்சித் தந்தாள். அது என் மானசீகக் காட்சியாக நின்றது.

நான் அவள் தங்கையை மணக்க வேண்டும் என்ற ஆசை நிறைவேறவில்லை. அவள் அன்று அவசரப்பட்டு விட்டாள் என்று நினைக்கிறேன். அவள் பதறினாள் அவளும் ஒரு பெண்தான் என்பதை அன்று வெளிப்படுத்தி விட்டாள்.

எனக்கு ஏற்பட்ட அனுபவம் தொடர்கதையாக மாறி விட்டது. அவள் என்னைப் பொறுத்தவரை ஒரு தொடர் கதையானாள். என் மனச் சான்று என்னை உறுத்தவில்லை. இப்படித்தான் லஞ்ச ஊழல்களே ஏற்படுகிறது என்பதை எண்ணிப் பார்க்க முடிந்தது. ஒருமுறை சுவை காண்பவர் அதைவிட முடிவதில்லை.

நான் உத்தமனாக இருந்து வந்தேன் என்ற ஆணவம் இருந்து வந்தது. இராமாயணக் கதையில் இராமனை எனக்கு மிகவும் பிடித்திருந்தது. அவன் 'ஏக பத்தினி விரதன்' என்று காவியங்கள் பேசின. நானும் அப்படித்தான் வாழ்வேன் என்று நம்பினேன். உஷாவின் தங்கை எனக்கு வாய்த்திருந்தால் அப்படித்தான் என் வாழ்வு அமைந் திருக்கும் என்பதில் சந்தேகம் இல்லை.

உஷாவின் வாழ்வில் நான் ஒரு புதிய திருப்பத்தை உண்டு பண்ணி விட்டேன் என்று நினைக்கிறேன். இதற்கு முன் அவளும் சொல்லி இருந்தாள். அந்த மடையன் நினைப்பது போல் நான் தவறமாட்டேன் என்று அகம் பாவம் பேசினாள். நான் கல் நெஞ்சத்தைக் கண்டு உண்மையில் வியந்தேன். அதைக்கொண்டுதான் கற்பு என்பதன் பொருளை அறிந்தேன்.

எப்படி அவள் வாழ்நாள் எல்லாம் இப்படியே காலம் தள்ள முடியும் என்று நினைத்தது உண்டு. சமுதாயத்தின் கண்ணோட்டத்தில் நான் ஒரு குற்றவாளி; லட்சியத்தி லிருந்து தவறிவிட்டேன். மற்றவன் மனைவியை விரும்பினேன். காதல் கொண்டேன். என்னை இழந்தேன். என் பார்வையில் பார்க்கும் பொழுது நான் தவறி விட்டதாக நினைக்கவில்லை. அவளை யாரோ ஒருவன் புறக்கணித்ததுதான் காரணம் என்று நினைக்கத் தொடங்கியது என்மனம்.

ஓவியரைப் பற்றி நினைத்தேன்; அவரால் என்னை வைத்து ஒரு படம் வரையச் சொன்னால் எப்படி வரைய முடியும்? இராமனைப் போன்ற உணர்வை என் உருவத்தில் அவரால் தீட்டிக்காட்ட முடியாது. கடவுள் வடிவங்களை அவரால் எளிதாக எழுத முடியும். மற்றும் சாதாரண மனிதனையும் தீட்டிக்காட்ட முடியும். கடவுளரின் குணங்கள் அவருக்குத் தெரிந்தவை. சாதாரண மனிதனை அவர் அறிந்திருக்கிறார். இராட்சதர்களைக் கோரப்பல் உடையவர்களாகத் தீட்டிக்காட்டி இருக்கிறார்கள். ஆற்றல் மிக்கவனைப் பத்துத்தலைகள் உடையவனாகக் காட்டி இருக்கிறார்கள். மற்றும் அடையாளம் காட்டுவதற்காக யானை முகன் ஆறுமுகன் என்று பிரித்துக் காட்டி இருக்கிறார்கள். நீல நிறத்தவன் இராமன் என்று நிறம் தீட்டிக் காட்டி இருக்கிறார்கள். மயிலும் வேலும் முருகனுக்கு அமைத்துத்தந்து இருக்கிறார்கள். நின்ற வண்ணத்தில் நெடுமாலையும், கிடந்த வண்ணத்தில் திருமாலையும் காட்டி இருக்கிறார்கள். ஆடும் கோலத்தில் அம்பலவாணனைக் காட்டி இருக்கிறார்கள். இப்படி எல்லாம் தெய்வங்களைக் காட்ட முடிந்தது. மனிதன் உருவத்தால் ஒத்து இருக்கிறான்; பண்பால் வேறுபட்டு இருக்கிறான், 'மக்களே போல்வர் கயவர்' என்று தெரிந்துதானே வள்ளுவர் கூறி இருக்கிறார். நல்லவன்

கெட்டவன் என்று பிரித்துக்காண்பது அரிது என்று வள்ளுவர் கூறியிருக்கிறார். என்னைப் போன்றவர்களை வைத்துத்தான் அவர் அப்படிக் கூறி இருக்கவேண்டும் என்று நினைக்கிறேன். நல்லவன் கெட்டவன் ஆவதற்குச் சில சமயம் நெடுநேரம் ஆவதில்லை என்று சொல்வார்கள். நான் அப்படி நினைக்கவில்லை. கெடுவதற்கு வேண்டிய சூழ்நிலை என்னுள் உருவாகி இருந்தது. அதைப்பற்றி நான் நினைத்துப் பார்க்காமல் போய்விட்டேன். நான் 'கெட்டவன் தான்' என் மனத்தை அவ்வளவு தூரம் சிதறவிட்டிருக்கக்கூடாது. யாரும் இந்நிகழ்ச்சிக்குப்பின் அப்படித் தான் சொல்வார்கள் ஏன் என் மனச் சான்றும் அப்படித் தான் கூறுகிறது.

வள்ளுவர் 'பிறன் மனை நயவாமை' என்ற அதிகாரத்தை எழுதி வைத்தார். அவள் பிறனுடைய மனைவியா? அந்த உடைமை அவனை விட்டு எப்பொழுதோ போய் விட்டது. வேலி நீங்கிய வயல் சில சமயம் காவல் இல்லாமல் போய்விடுகிறது.

என் உவமை நான் நினைத்தது நியாயமா? என்று கூற உதவாது. அப்பொழுது நான் வயலில் புகுந்துவிட்ட மாடா? சே! எவ்வளவு கீழ்மை என்னிடம் இடம்பெற்று விட்டது. பழையகாலத்து நாவலாசிரியராக இருந்தால் இந்த மனச் சான்றை வைத்தே ஆயிரம் பக்கங்கள் எழுதி இருப்பார்கள். நாடகத் தனி மொழியாக இருந்தால் கூட்டம் கலையும் வரை பேசி வெறுக்கச் செய்து விடுவார்கள்.

அவள் என்னை விரும்பியது தவறா? அவள் நெஞ்சி லிருந்து அவனை அகற்றிவிட்ட பிறகு அவனுக்கு அங்கே இடம் ஏது? வெறுங்கோயில் பாழடைந்து விடாதா? அதில் ஒரு கற்சிலையை வைத்தால் தானே அந்தக் கோயில் மறுபடியும் பொலிவு பெறும். அந்தச் சிலையாக அவள் என்னை மதித்தாள்.

இப்பொழுது 'அவள்' அதுதான் புரட்சி என்னைப் பற்றி என்ன நினைப்பாள்? நான் செய்ய நினைத்த புரட்சி என்று ஏற்றிச்சொல்வாளா? அப்பொழுதே சொல்லி இருக்கிறாள். நான் திருமணம் செய்து கொண்டிருந்தால் எனக்குச் சலனம் ஏற்பட்டு இருக்காது என்று, பெண் தன்னைக் காத்துகொள்ள வேண்டுமென்பது இப்பொழுது தான் தெரிகிறது. அவளுக்கு ஒரு முடிவைத் தெளிவாகச் சொல்லிவிட முடியும். காதல் வென்று விட்டது என்று அழகாகச் சொல்ல முடியும். 'கள்' தோற்றுவிட்டது; காவியம் கவர்ந்து விட்டது என்று கூற முடியும்; வன்மை என்னைக் கவரவில்லை; மென்மை என்னை விழுங்கி விட்டது என்று கூறமுடியும். அவள் முகத்தை இனிப் பார்க்க முடியாது. அவளை நான் ஏன் பார்க்க வேண்டும்? சலனமுள்ள நெஞ்சு இனி ஒரு பக்கத்தே நின்று நிலை பெற்றுவிட்டது.

ஓவியர் என் சொந்த வாழ்க்கையைப் பற்றி ஒன்றும் பேசமாட்டார். ஒரு சிலர் அவசியமில்லாமல் தனிப்பட்ட வரின் சொந்த வாழ்க்கையைப் பற்றி ஆராய்வதே பழக்க மாகிவிட்டது. அது ஒரு அநாகரீகம் என்பதை அவர் அறிவார். நல்ல காலம் நான் இதுவரை கண்ணம்மாவைப் பற்றிக்கூட பேசியது இல்லை. அன்று நான் கேட்டிருந்தால் இன்று நிச்சயமாக அவர் என்ன்ன மதிக்கமாட்டார்.

ஆபீசில் இரண்டு நாளைக்கு எந்த வேலையும் நடக்காது. பொழுது போக்குக்காக வாரப் பத்திரிகைகள் கொண்டு வருபவர்க்கு அதைப் படிக்க நேரம் இருக்காது. 'ஆபீசரின் அந்தரங்க லீலைகள்' என்று மஞ்சள் பத்திரிகைகள் செய்யும் வேலையை அவர்கள் செய்வார்கள்.

புரட்சி அவள் தன் உடலால் கவர்ந்தாள். அதற்கு ஒரு தனி மதிப்பு இருக்கத்தான் செய்கிறது. உஷா அவள் தன் உள்ளத்தால் கவர்ந்தாள். இப்பொழுது அவள்

உடலையும் கண்டேன். உள்ளமும் உடலும் ஒன்று பட்டேன். இனி நான் 'புரட்சியைப்' பற்றி நினைக்க வேண்டிய அவசியமே இருக்காது. அவள் முதலில் 'பிகு' பண்ணினாள். இப்பொழுது அவள் என்ன நினைப்பாள். அவள் நான் ஒரு பைத்தியக்காரன் என்றுதான் நினைப்பாள். 'நல்ல வயசு' உத்தியோகம். பதினாறு வயதா கிடைக்காமலா போய்விடும். 'லட்சணமாக' என்ற அகராதியைத் தாராளமாகப் பயன்படுத்துவாள்.

வாழ்க்கையில் சலனங்கள் ஏற்பட்டன. எங்கேயோ ஓர் இடத்தில் சுழிகளும் ஏற்படுகின்றன. அதில் அகப்படும் பொழுது திக்குமுக்காடிப் போக வேண்டியும் இருக்கிறது. இந்த நிலையில் தான் நான் அகப்பட்டுக் கொண்டேன். அம்மாசொன்ன வார்த்தைகள் நினைவுக்கு வந்தன.

"காலாகாலத்தில் கலியாணம் செய்து கொள்வது நல்லது" என்று சொல்லுவார்கள். காலம் தவறிவிட்டேன் என்று நினைக்கிறேன். அவளுக்குக் கொஞ்சி விளையாடப் பேரன், பேர்த்தி தருவேன் என்று எதிர்பார்த்தாள். நான் ஏன் அந்தப் புரட்சியின் குழந்தைகளை என் குழந்தைகள் என்று சொல்லக்கூடாது. அந்தக் குழந்தைகளை அம்மாவிடம் கொண்டு போய்ச் சேர்ப்பேன். அம்மா! நான் உனக்கு இப்பொழுது குழந்தை தரமுடியாது. அப்படிக் குழந்தைகள் பெறும்வரை உன்னால் பொறுமையை இழக்க முடியாது. என் குழந்தைகள் என்று சொன்னாலும் நீ ஏற்க மாட்டாய். அவள் குழந்தைகள் என்றுதான் சொல்லுவாய். நிச்சயமாக உஷாவை வீட்டில் சேர்க்கமாட்டாய்.

அம்மா! அவள் தொழுவத்தில் தான் இருந்துவிட்டுப் போகட்டுமே! அவள் நல்லவள் அம்மா! தவறு செய்தது நான் தான். இதெல்லாம் அவள் எங்கே கேட்கப் போகிறாள். சுழிக்குத் தப்பினால் பூகம்பம் ஒன்று காத்து இருக்கிறது. அதையும் பார்த்துதான் தீர வேண்டும்.

மூன்றாவது நிலை அதாவது அடியோடு மாற்றம் என்பது அவ்வளவு லேசான காரியம் அல்ல; சீர்திருத்தம் எளிது; சீர் அமைப்பு அதற்கு அடுத்த நிலை; உள்ளதைக்கொண்டு அமைப்பவை இவை. சம்பிரதாயத்திற்கும் சட்டத்திற்கும் வழக்கத்திற்கும் உட்பட்டவை இவை. இவற்றில் எதிர்ப்புகள் அவ்வளவாக இருப்பதில்லை. ஓரளவு வந்தாலும் சமாளித்துக் கொள்ள முடியும். இந்த மூன்றாவது நிலைதான் மிகவும் கஷ்டமானது. சமூகத்தின் சட்டத்தைப் புறக்கணித்து அதைச் சமூகம் ஒப்புக்கொள்ளும்படிச் செய்வதுதான் கடினம், சமூகத்தின் சட்டத்தைப் புறக்கணித்து விடலாம். அதை மறைத்து எப்படியாவது வாழலாம். இதைத்தான் பலர் செய்து கொண்டிருக்கிறார்கள் எப்பொழுதாவது வெளியாகும் போது அவன் குற்றவாளிக் கூண்டில் நிறுத்தப்படுகிறான். 'கெட்டவன்' என்ற பட்டம் சூட்டி அவனைப் புறக்கணிப்பார்கள்.

அந்த நிலையை நான் ஏற்றுக்கொள்ள விரும்ப வில்லை. பிரச்சனையை எதிர்த்து ஏற்காதவன் கோழை. உண்மையை ஊருக்கு எடுத்து ஓதாமல் இருப்பது அயோக்யத்தனம். நான் மறைத்து வைப்பதால் அவளுக்கு என்ன லாபம்? மறுபடியும் அவள் அவனை இனி அடையப் போவது இல்லை.

அதை அவள் விபச்சாரமாகக் கருதுகிறாள். கொண்ட கணவனாக இருந்தாலும் உள்ளம் இருக்கலாம்; அவனோடு உறவு கொள்வது விபச்சாரத்துக்குச் சமம் என்று தத்துவம் பேசுகிறாள். இனி இந்த உடம்பை அவனுக்குக் கொடுக்க முடியாது என்று உறுதியாகச் சொல்லிவிட்டாள்.

என்னைப் பொறுத்தவரை நான் உறுதியோடுதான் இருக்கிறேன். அம்மாவை நினைக்கும் பொழுதுதான் அச்சமாக இருக்கிறது. அவளுக்கு அப்பொழுதே பைத்தியம் பிடித்துவிடும்; அல்லது மனோதைரியம் இல்லாதவர்கள்

அடையும் இரத்தக் கொதிப்பு அவளை வந்து சேரும். ஒரு மனிதனுடைய மன நிலையை இந்த ரத்தக் கொதிப்பா லேயே தெரிந்து கொள்ளலாம் என்று நினைக்கிறேன்.

பாசமும் பந்தமும் மிகுதி ஆக ஆக இந்த நோய் மிகுகிறது என்று நினைக்கிறேன். பிரபல சினிமா எழுத்தாளர் ஒருவர் சொன்னார். "ஆண்டவன் தண்டிக்கிறான் என்றால் இந்த இருதயத் தாக்குதலால்தான். பணக்காரர்கள் மனமுடைந்து சாக இந்நோயைப் படைத்தான் என்று சொன்னார். அப்பொழுது அவர் சாதாரண பத்திரிகைச் சிறுகதை எழுத்தாளர். பிறகு அவர் பிரபல திரைப்படக் கதை எழுத்தாளர் ஆனார். பிரபல்யம் அடைந்தார். அவர் சமுதாயத்தின் ஏற்றத்தாழ்வுகளைக் கண்டித்து எழுதினார். அவர் அத்தகைய படங்களுக்கே வசனம் எழுத ஒப்புக் கொண்டார். பிறகு டைரக்டரும் ஆனார். ஏழைகளுக்காகக் கண்ணீர் வடித்துப் புரட்சி மிக்க வசனங்களை எழுதினார். எல்லோரும் அவரைப் பாராட்டினார்கள். விரைவில் பாரதநாடு வறுமையற்ற நாடாக ஆகிவிடும் என்று நம்பிக்கை கொண்டார்கள். எழுத்தாலேயே எதையும் சாதித்துவிட முடியும் என்ற நம்பிக்கை அப்பொழுது எழுந்தது. அவருக்கும் நிறைய பணம் சேர்ந்தது. அதற்குப்பின் அவர் ஆடம்பர வாழ்வில் திளைத்தார். மேல் நாட்டு உடையில் அவருக்கு மோகம் ஏற்பட்டது. மந்திரிகளிடம் கை குலுக்கினார். அவர்கள் பாராட்டுதலுக்கும் மிக விரைவில் இரையாகிவிட்டார்.

தனி உடைமை கூடாது என்று பேசினார்; தனிச் சொத்து நிறைய சேர்த்து வைத்தார். கதர்த்துணி கட்டினார். மில்களுக்கு அதிபர் ஆனார். அதற்குப்பிறகு அவர் எழுத்தே வரவில்லை. படங்கள் தோல்வி கண்டன. எழுத்துலகம் அவரை மறக்கத் தொடங்கியது.

அவருடைய முடிவுக்காலம் அணுகியது. யாரும் எதிர்பார்க்கவில்லை. இதயத்தாக்குதலால் பிரிய மனம் இல்லாமல் இந்த மனித வாழ்க்கையை நீத்தார். அவர்

வாழ்வில் ஏற்பட்ட முரண்பாடுகள் எனக்கு நினைவுக்கு வருகிறது.

அவர் வாழ்க்கையை எண்ணிப் பார்க்கிறேன். தூய சிந்தையும் மக்கள் எழுத்தும் அவர் பண்பாக இருந்தன. பின்பு அவர் படம் அதிகம் ஓடியதுடன் காசு சேர்ந்தது. இவர்தானா மக்கள் எழுத்தாளர் என்று ஆச்சரியப்படும்படி மாறிவிட்டார். எனக்கு இப்படி ஒரு கெட்ட பழக்கம் சாதாரண வாழ்க்கை நிகழ்ச்சியை நேரில் சொல்ல முடியாமல் நான் படித்த நாவல்களைக் கொண்டும் பார்த்த உண்மை மனிதர்களையும் கொண்டும் சொல்வது எனக்குப் பழக்கமாகிவிட்டது.

என்னைச் சிலர் 'அனுபவம்' என்றே புனை பெயர் வைத்து அழைத்தார்கள். அது என் நினைவுக்கு வருகிறது. கதாசிரியனுக்கு இருக்க வேண்டிய வாழ்க்கை அனுபவங் களைப் பேச்சுக்கு இடையே புகுத்துவது எனக்குப் பழக்கமாகி விட்டது.

தேவைக்குமேல் உழைப்பதால் இந்த நோய் வந்து விடுவதில்லை. ஆசா பாசங்களால்தானே இந்த நோய் வந்து விடுகிறது. வயதானவர்கள் இதை முக்கியமாகக் கவனிக்க வேண்டும். தாம் வளர்த்த பிள்ளைகள் போகப் போக முழுவதும் மாறிவிடுகிறார்கள். அம்மா மீது யார் அதிகம் பாசம் காட்டுகிறார்களோ அவர்கள் நிச்சயம் வருங் காலத்தில் தம் மனைவி மீது பாசம் காட்டுவார்கள். ஆரம்பத்தில் மகிழ்ந்தவர்கள் பின்னால் துக்கப்படுவார்கள். என்மீது அவன் உயிரே வைத்திருந்தான். கலியாணமான வுடன் அவள் கிழித்த கோட்டைத் தாண்டுவது இல்லை என்று வருத்தப்படுகிறார்கள். தாய் கிழித்த கோட்டைத் தாண்டாதவர்கள்தான் இப்பொழுது மனைவி கிழித்த கோட்டைத் தாண்டுவது இல்லை. மகன் தன்னிடம் பாசம் காட்டுவான் என்று எதிர்பார்த்து ஏமாற்றம் அடை கிறார்கள். அதுவே அவர்களுக்கு மனநோயை உண்டாக்கி

விடுகிறது. அது வளர்ந்து இரத்தக் கொதிப்பில் கொண்டு போய்விடுகிறது.

மகன் தன்னைவிட்டு விலகுவதைக் கண்டு தாய் மகிழ்ச்சி அடைய வேண்டும். அவன் மற்றவளின் அன்புக் கரத்தில் அகப்பட்டுத் தத்தளிக்கிறான். அதிகாரத்தால் அவள் அவனை ஆட்கொள்ளவில்லை. அவள் அவன்மீது உயிர் விடுகிறாள். தாய் காட்டிய பாசத்தைவிட அவள் அதிகம் காட்டுகிறாள். தாய் ஒரு மகன்மீது பாசம் காட்டுவதில்லை. தன் பிள்ளைகள் அனைவரின் மீதும் பாசம் காட்டுகிறாள். வந்தவள் ஒருவன் மீது முழு அன்பைச் செலுத்துகிறாள். தாயின் அன்பைவிட மனைவியின் அன்பு உயர்ந்து விடுகிறது.

இதை உணராத தாய் அவன் மாறிவிட்டானே என்று நினைத்து வருந்துகிறாள். மற்றும் ஒன்று சின்ன வயதில் அவனை எடுத்துச் சீராட்டி அவனைப் பெரியவன் ஆக்கினாள். அவள் கொடுத்ததை எல்லாம் அவன் வாங்கிக் கொண்டான். வயதானதும் தாய் திரும்ப ஏதோ எதிர் பார்க்கிறாள். அவன் அவளுக்குக் கொடுக்க இயலவில்லை. இயற்கை அவனைத் திசை திருப்பிவிடுகிறது. மற்றவர் களுக்கு அவன் கொடுக்க வேண்டிய கடமையும் கட்டுப்பாடும் ஏற்பட்டு விடுகிறது. தாய் மகனிடத்தில் எதையும் எதிர்பார்க்கக்கூடாது. அதை எதிர்பார்க்கும் பொழுதுதான் அவன் விலகிவிடுகிறான். தான் தன் மகனுக்குச் செய்யவேண்டிய கடமை முடிந்துவிட்டது. இனி அவன் மற்றவருக்காக வாழ்வதுதான் சரி என்ற எண்ணம் உண்டாகாவிடில் வேதனைப்பட வேண்டியதுதான். பாசம் அறிவை மயக்கிவிடுகிறது. அதனால் மனம் கெடுகிறது. இரத்தக் கொதிப்பு ஏற்படுகிறது. நீண்டநாள் வாழ முடிவதில்லை.

என் தாய்க்கு இதை எப்படி எடுத்துக் கூறமுடியும்? அவளை விட்டு நான் தொடக்கத்திலேயே விலகுகிறேன்.

அவள் லட்சியத்தை நான் நிறைவேற்ற முடியவில்லை. என்ன புதிய லட்சியம்?

ஆதாம் ஈவ் தோன்றிய நாள் முதல் இந்த லட்சியம் தான் ஒவ்வொரு தாயும் விரும்புவது. மகனுக்கு மனைவி யல்ல; தனக்கு மருமகள். தன்னை வைத்தே எதையும் பார்க்கும் பொழுது மனம் உளையத்தான் செய்கிறது. அவளை எப்படித் திருத்துவது. யாரையும் நாம் திருத்த முடியாது. அவர்களே திருந்துவார்கள். காலம் வரும் பொழுது அதுவரை காத்திருக்க வேண்டியதுதான். இதில் திருத்துவதற்கு என்ன இருக்கிறது. மனமாற்றம் ஏற்பட வேண்டும்.

மனிதன் உடம்பை மட்டும் கவனித்தால் நீண்டநாள் வாழ முடியாது. நூறாண்டு வாழும் கட்சியினர் 'காப்பி' குடிக்கக் கூடாது என்று சொல்லி எப்படியோ உடம்பைக் காப்பாற்ற முயற்சி செய்கின்றனர். மனம் நன்றாக இருக்க வேண்டும். அப்படியென்றால் பாசபந்தங்களுக்குக் கட்டுப் பட்டு அதிலேயே ஆழ்ந்து விடாமல் இருப்பதுதான் மனத் தூய்மைக்கு வழி செய்யும் என்று நினைக்கிறேன். பெரிய பெரிய கட்சிகள் எல்லாம் அழிவது கூட வேண்டியவர் களுக்கு நன்மை செய்து பொது நன்மையை மறப்பதால் தான். தனி மனிதன் நிலைமைதான் கட்சிகளுக்கும் ஏற்பட்டு விடுகின்றன. கட்சிகளுக்கும் இதயத் தாக்குதல் ஏற்படாமல் இல்லை; தவறு செய்து கொண்டே இருந்தால் கட்சிகள் சுக்குநூறாகச் சிதைந்து விடுகின்றன. ஒரு சிலருக்குக் கட்சிகள் நன்மை செய்கின்றன. அந்த ஒரு சிலர் எப்படிக் கட்சியைக் காப்பாற்ற முடியும்?

நினைத்துப் பார்க்கிறேன். கண்ணம்மாளை ஆசைப் பட்டது எவ்வளவு பயங்கரமான விளையாட்டு என்பதை, விதவையை மணப்பது தவறு அல்ல; இரண்டு குழந்தை களுக்குத் தாயை மணப்பது எவ்வளவு பெரிய சுமை.

இரண்டுக்குமேல் வேண்டாம் என்ற விளம்பரங்களைக் கண்டு நான் என்ன பதில் சொல்ல முடியும். ஆங்கிலத்தில் ஒரு பழமொழி சொல்வார்கள். 'என்னுடைய குழந்தைகள் உன்னுடைய குழந்தைகளோடு விளையாடுகின்றன. அந்தப் பழமொழியில் பாதி உண்மையாகிவிடும். மேல்நாட்டு நாகரிகம் அவ்வளவு தாராள மனப்பான்மை உடையது என்பதைத்தான் அப்பழமொழி காட்டுகின்றது. அதைப் பார்த்து என்னால் எள்ளி நகையாட முடியவில்லை. அது அவ்வளவு பரந்த மனப்பான்மையைக் காட்டுகிறது என்பதைத்தான் என்னால் நினைத்துப் பார்க்க முடிகிறது.

விதவைக்கு உதவவேண்டுமே தவிர மறுபடியும் அவளுக்கு வாழ்வு தரவேண்டும் என்பது அவசரப்பட்டு எடுத்துக் கொண்ட முடிவு என்றுதான் நினைக்கிறேன். நம் நாட்டில் உஷாவைப் போல வாழ்க்கையில் முறிவு ஏற்பட்டவர்கள் ஏராளம்; அதைவிட அவள் தங்கைகள் ஏராளம். இந்தச் சூழ்நிலையில் புரட்சியைப் பற்றி நினைத்தது அவள் பின் சென்றது அவ்வளவு பொருத்தமாகப் படவில்லை. பெர்னாட்ஷா சொன்னார் 'ஏழையாகப் பிறப்பது குற்றம்' என்று, அவளை அணைத்துக் கொண்டு ஆதரவு தருவது அவ்வளவு நியாயம் இல்லை. அதற்கு ஓவியர் இருக்கிறார். அவர் தொண்டுதான் நியாயமான தொண்டு.

ஒரு பெரிய தவறு செய்த பிறகுதான் எல்லாத் தவறுகளும் கவனத்துக்கு வருகின்றன. இரக்கம் காட்ட வேண்டிய இடத்தில் காதல் காட்டினேன். இரக்கத்துக்கும் காதலுக்கும் சில சமயங்களில் வித்தியாசம் இல்லாமல் போய்விடுகிறது. என் நிலைக்கு நான் குப்பத்துக்குச் சென்றது; அந்த ஓவியரோடு பழகியது; யாரும் ஒப்புக் கொள்ளமாட்டார்கள். ஏழைகளைப் பற்றி எண்ணுவது அவர்களுக்காக ஏதாவது செய்ய நினைப்பது தனிப்பட்ட

மனிதரால் சாதிக்கக் கூடிய செயல் அல்ல; சமுதாயத்தின் கூட்டுப் பொறுப்பு; அது. தனி மனிதர் உதவி என்பது பிச்சைக்காரத் தனத்தைத்தான் வளர்க்கும். கொடையாளிகள் என்று சிலர் பெயர் எடுக்கலாம்.

இந்த நாட்டின் ஏழ்மைக்குக் காரணம் என்ன? மனித முயற்சிகளையும் உழைப்பையும் வீண்படுத்துவது தான். தேவைகளைப் பெருக்கிக் கொண்டு மற்றவர்களுக்குப் பகிர்ந்து அளிக்க முடியாத நிலைதான். கல்வியில் மனித முயற்சியையும் உழைப்பையும் வீண்படுத்திக்கொண்டு இருக்கிறோம். ஒரு வேலை தான் காலி என்றால் ஓராயிரம் விண்ணப்பங்கள் வருகின்றன. இது எதைக் காட்டுகிறது. அந்தத் தகுதியைப் பெற்றவர்கள் ஓராயிரம் பேர் என்பதைக் காட்டுகிறது. இந்த ஓராயிரம் பேரை உற்பத்தி செய்வது வீண்தானே.

ஏனைய பொருள் உற்பத்தியை எடுத்துக்கொண்டால் தேவையை ஒட்டித்தான் அவை உற்பத்தி செய்யப் படுகின்றன. வாங்குவார் இல்லாவிட்டால் உற்பத்தி செய்யமாட்டார்கள். 'போட்டி' என்ற ஒரு பூதத்தை எழுப்பி விட்டு அதற்காகத்தான் நம் இளைஞர்களைப் பலியாக்குகிறோம். கல்வி என்ற பெயரால் கோடிக் கணக்கான பணம் செலவு செய்யப்படுகிறது. அவர்கள் கற்ற கல்வி அவர்க்கும் பயன்படுவதில்லை; நாட்டுக்கும் பயன்படுவதில்லை. ஒரு உத்தியோகத்திற்கு S.S.L.C போதும் என்றால் ஏன் எம்.ஏ.வை எடுக்க வேண்டும். அப்படி எடுப்பதால் வசதி இல்லாத குடும்பங்கள் எம்.ஏ. படித்தால்தான் வேலை கிடைக்கும் என நம்புகின்றன. அதற்காக விவசாயத்தைக் கவனிக்காமல் உள்ள தானியத்தை விற்றுப் பிள்ளைகளுக்குப் பணம் அனுப்பு கிறார்கள். பிள்ளையும் பயன்படுவதில்லை. விவசாயம் செய்ய ஆட்களும் கிடைப்பதில்லை. உள்ள பணமும் செலவழித்துக் கடன் தொல்லையில் சிக்கித் தவிக்கிறார்கள்.

கல்வித் தகுதி என்ற பேரால் நம் இளைஞர்களின் நேரம் பொழுது உழைப்பு அவ்வளவையும் பாழ்படுத்து கிறோம். அரசாங்கம் பொதுத் தேர்வுகள் நடத்தி ஆட்களைத் தேர்ந்து எடுக்கிறார்கள். இதில் நிறைய மதிப் பெண் வாங்குகிறவர்களில் ஒரு சிலரை மட்டும் எடுத்துக் கொள்கிறது. மற்றவர்கள் அந்த வேலைக்குத் தகுதி இல்லை என்று நெஞ்சு தொட்டுக் கூற முடியுமா? பொது அறிவு என்ற பெயரால் தேவை இல்லாத நுணுக்கமான செய்திகளை அவர்கள் படிக்கவேண்டி இருக்கிறது. இன்று 'குவிஜ்' என்ற பெயரால் தொலைக்காட்சியில் கேள்விகள் கேட்டு விடை சொல்கிறவர்களுக்கு மதிப்பெண் போடுகிறார்கள். கேள்விக்கு விடை தருகிறவர்கள் அறிவாளிகள்; மற்றவர்கள் முட்டாள்கள். இதுதான் இன்றைய மதிப்பீடு.

தொழிற் பதிவு நிலையங்கள் நல்ல நோக்கத்தோடு ஆரம்பிக்கப்பட்டன. முறைப்படி வேலை வாய்ப்புகளையும் பங்கிட்டுத்தர ஏற்பட்ட நிறுவனம் அது. ஒரு பதிவு நிலையமாகப் பயன்படுகிறதே 'தவிர அது வேலை வாய்ப்புத்தேடும் நிலையமாகச் செயல்பட வில்லை. ஒரு குறிப்பிட்ட வேலைக்கு இந்தத் தகுதி போதும் என்றால் அதற்கு மேலும் படித்தவர்களை அந்த வேலைக்கு வைக்கக் கூடாது. இந்த ஒரு கோட்பாடு செயல் முறையில் நடந்தால் ஆயிரக் கணக்கான இளைஞர்களின் உழைப்பையும் பணத்தையும் மிச்சப்படுத்தலாம். கல்லூரிகளில் இந்நாளில் இருக்கின்ற அமைதியின்மையின் அடிப்படைக் காரணம் அவனுக்குப் படிப்பில் இருக்கும் நம்பிக்கை குறைத்து விட்டதுதான்.

சமுதாயத்தில் அடிப்படை மாற்றங்கள் நிகழ்ந்தால் தவிர தனக்கு எதிர்காலம் இல்லை என்பதை உணர்கிறான். 'சம உடைமை' என்ற போராட்டத்தில் அவன் கால்' எடுத்து வைக்கிறான். பிற்பட்ட வகுப்பினர்க்குச் சம்பளச் சலுகை

தரப்படுகின்றது. அவர்கள் போட்டிபோட்டுப் படிக்க வேண்டி இருக்கிறது. போட்டியில் அவர்கள் பின் தங்கி விடுகின்றார்கள். பண்பட்ட சமுதாயம் அதில் முன் நிற்கின்றது. ஒருவரை உயர்த்துவதும் மற்றவரைத் தாழ்த்து வதும் தனிப்பட்ட முயற்சியில் வெற்றி பெறலாம். சமுதாயக் கண்ணோட்டத்தோடு பார்க்கும் பொழுது பிற்பட்ட வகுப்பினர் மேலே உயரலாம்; அதேசமயத்தில் மேல் நிலை மாணவர்கள் தாழ்நிலை அடைகின்றனர். மறுபடியும் அவர்கள் பிற்பட்ட வகுப்பினர் ஆகப்போகின்றனர். கல்வி நிலையில் போட்டிகளைத் தவிர்த்தால்தான் சமூகத்தில் சமநிலையைக் காணமுடியும்.

இந்தப் போட்டியின் விளைவுதான் இன்று நாட்டில் பெருகிவரும். 'கான்வெண்டு' ஆங்கிலப் பள்ளிகள், அங்கே படித்தால்தான் தம்பிள்ளைகள் மேல் நிலையை அடைய முடியும் என்று நினைக்கிறார்கள். சாதாரண குமாஸ் தாக்கள் கூட தம் பிள்ளைகளை அங்குச் சேர்க்கிறார்கள். தம் வருவாயில் பெரும் பங்கு படிப்புக்குச் செலவு ஆகிவிடுகிறது. விவசாயக் குடும்பங்கள் கொஞ்சம் வசதி உடையவர்கள் தம்பிள்ளைகளைப் படிப்பதற்காகவே குடும்பம் குடும்பமாக நகரங்களில் குடி ஏறுகிறார்கள்.

நாட்டுப் பண்பாட்டில் மக்கள் நம்பிக்கை இழந்து விடுகின்றனர். 'குவிஜ்' கேள்வி விடைகளும் ஆங்கில நடை உடைபாவனைகளும் இந்த மண்ணோடு ஒட்டாத உறவும் தான் விளைகின்றன.

கல்வியில் இந்தப் போட்டியை ஒழித்தால் நாட்டில் பாதிப்பிரச்சினைகளைத் தீர்த்துவிட முடியும். படிப்பில் முதல்வகுப்பு இரண்டாம் வகுப்பு மூன்றாம் வகுப்பு இப்படிச் சாதிப் பிரிவுகள் ஏற்படுத்தப் படுகின்றன. இந்தத் தேவையற்ற பாகுபாடுகள் மனிதர்களுக்குள் ஏற்றத் தாழ்வுகளை ஏற்படுத்தி விடுகின்றன. 'சம உரிமை' சம அந்தஸ்து, 'சம உடைமை' என்ற சமதர்மக் கொள்கைக்கு

இவை முரண்பட்டவைகள், ஒரு பக்கம் சமத்துவம் பற்றிப் பேசுகிறோம். நடைமுறையில் எந்தத் திட்டமும் அதற்கு ஏற்ப அமைக்கப்படுவதில்லை.

"வலிமை உடையது வாழும்" என்ற தத்துவம்தான் இன்று செயல் முறையில் நடைபெறுகிறது. இந்த அடிப்படையில்தான் சமூகம் இயங்கிக் கொண்டு இருக்கிறது. பிறகு 'சமநீதி' 'சமத்துவம்', 'சமதர்மம்' என்ற சொற்ககளுக்கு என்ன அர்த்தம் இருக்கின்றது. காட்டு நீதிதான் வலிமை உள்ளது வாழும் என்பது, கூட்டம் கூட்டமாக மான்கள் வாழவில்லையா? பசு, ஆடு முதலிய மிருகங்கள் ஒன்றைஒன்று அடித்துக் கொள்வதில்லை. தாமும் வாழ்கின்றன. சிங்கம் ஒன்று இரண்டு இருந்தால் போதும். இந்த மான் கூட்டத்தை ஒழித்துக் கட்ட.. நாடு காடாகக் கூடாது என்றால் நல்லவை வாழ வழி செய்ய வேண்டும். வல்லவை வாழ வழி செய்தால் அது சமத்துவத்தைத் தராது.

என் மனம் 'புரட்சியை' நோக்கிச் சென்றதால் அங்குள்ள சூழ்நிலைகளை அறிய முடிந்தது. ஓவியர் இந்தச் சமுதாயத்தைப் பற்றிய சிந்தனைகளைத் தந்தார். அந்த நோக்கோடு பார்க்கும்பொழுது நான் செய்தது தவறாகத் தெரியவில்லை. சமுதாயச் சட்டத்தில் சிக்குண்டு அடிமைப் பட்டுக் கிடந்த ஒருத்திக்கு விடுதலை தந்த பெருமை எனக்கு உண்டு என்று எண்ணம் எழுகிறது. உஷாவின் தங்கைக்கு வாழ்வு தானாக அமையும். உஷாவுக்கு? அந்தப் பிரச்சினை தீர்வதற்கு வேறு என்ன வழி இருக்கிறது? நான் எப்படிக் குற்றவாளி ஆகமுடியும்? அவளுக்கு வாழும் உரிமை தரப் படவில்லை. அது அவ்வளவு சீக்கிரம் பறிபோவது குற்றம்தானே. அதை மாற்றியமைப்பதில் தவறு இருப்பதாக இல்லை. இந்த மூன்றாவது நிலையை மாற்றி அமைப்பதை யாரும் அவ்வளவு சீக்கிரம் வரவேற்பதில்லை. கல்வியில்

சீர்திருத்தம் என்று பேசுவார்களே தவிர 'மாற்றம்' என்பதை அவ்வளவு தூரம் ஒப்புக் கொள்வதில்லை.

மாலைக் கல்லூரியில் தான் இனி வருங்காலத்தில் நிறைய இடம் கேட்பார்கள். அங்கே அமைதி இன்மையைக் காண முடியாது. வேலை கிடைத்தவர்களுக்குத் தான் மேற்படிப்பு என்ற திட்டம் உருவானால் மாணவர்கள் கிளர்ச்சிகளைத் தவிர்க்க முடியும். வேலைக்குக் கல்வியைப் பயன்படுத்தும் பொழுது அது தோல்வியை அடைகிறது. வேலை தர முடியாத கல்வித்திட்டம் வீண்தானே.

அதே போலக் கிளர்ச்சிகள் நடைபெறுகிறது என்றால் 'வசதிகள் தேவை' என்ற தத்துவத்தை உண்டாக்கும் பொழுது கிளர்ச்சிகள் நடைபெறத்தானே செய்யும். வசதிகள் தேவை என்ற நிலை மாறவேண்டும். வசதிகளை அனுபவிக்க முடியாது. அவற்றைத் தேடக்கூடாது என்ற நிலை ஏற்பட்டால் தானே மனநிறைவு ஏற்படுகிறது. விலை வாசி உயர்வுகூட இந்தப் போட்டியால்தான் ஏற்படுகிறது. எப்படியாவது பணம் சேர்க்க வேண்டும் என்ற தத்துவம் ஊறிவிட்டது. இவை எல்லாம் சமதர்மத்துக்கு மாறான கொள்கைகள். சமதர்மப் பாதையில் நாடு வேகமாக இயங்குகிறது என்றால் இந்தப் பிற்போக்குச் சக்திகள் தாமாக மறைந்துவிடும். அதில் அரசியல் கட்சிகள் நம்பிக்கை வைத்துச் செயல்படத் தொடங்கவேண்டும். அப்பொழுதுதான் நாட்டுக்கு விமோசனம் ஏற்படும் என்ற எண்ணம் உண்டாயிற்று. குப்பத்துத் தொடர்பு எனக்குக் கற்றுத் தந்த பாடங்கள் இவை.

இந்த வைத்தியப் படிப்புப்பற்றி எவ்வளவு முரண்கள் விவாதங்கள்; லஞ்ச ஊழலே இதைச் சுற்றித்தான் இயங் குவதாகப் பேசப்படுகிறது. ஒரு நாட்டு அமைச்சு இந்தச் சின்ன விஷயத்தில் தன் பெயரைக் கெடுத்துக்கொள்ள வேண்டிய தேவையே இல்லை. நேர்முகத்தேர்வு தேவை

இல்லை; வெறும் எழுத்துத் தேர்வு போதும் என்று பேசிக் கொள்கிறார்கள்.

ஏற்கனவே மாணவர்கள் தேர்வு எழுதிவிட்டு வருகிறார்கள். மறுபடியும் தேர்வு வைப்பதில் என்ன அர்த்தம் இருக்கிறது. மிகச்சிறந்த மாணவனும் இரண்டாவது முறை வைக்கப்படும் தேர்வில் வெற்றி பெறுவதற்கு வாய்ப்பு இல்லாமல் போகலாம். ஏன் இந்தத் தொல்லை. குறிப்பிட்ட மதிப்பெண்கள் இந்தத் துறைக்கு வேண்டுமென்று முதலில் கூறி அறுதிசெய்து கொள்ளட்டும். அந்த மதிப்பெண் உள்ள மாணவர்களின் பெயர்களைக் குலுக்குச் சீட்டுப் போட்டு எடுக்கட்டுமே! இந்தப் போட்டி மனப்பான்மையை ஒழித்துவிடலாமே. இடம் கிடைக்காத வர்களைத் தகுதியற்றவர்கள் என்று கூற தேவை இல்லை. 'வல்லமை தான் வாழவேண்டும்' என்ற கொள்கையால் தான் நாட்டிலே கேடுகள் விளைகின்றன. இந்தச் சீட்டு முறைப்படி எடுத்து விட்டால் யார்மீதும் எந்தக் குறையும் கூறமுடியாது. அவரவர் அதிருஷ்டம் துரதிருஷ்டம் எப்படியாவது முடியும். 'ஊழல்' நேர்வதற்கும் வாய்ப்பு இல்லை. அவசியமில்லாமல் மாணவர்கள் தேர்வுகள் எழுதி மன உளைச்சல் பட வேண்டியது இல்லை. யார் நாம் சொல்லிக் கேட்கப்போகிறார்கள். சொன்னால் சிந்தித்துப் பார்க்கட்டுமே. படிப்பு முறையில் போட்டி முறை ஒழிந்தால்தான் உண்மையான கல்வி நாட்டில் உண்டாகும். தேர்வுக்கு மதிப்புத்தரக் கூடாது; அறிவுக்கும் மனிதனுக்கும் மதிப்புத் தர வேண்டும். இவை எல்லாம் சமுதாயத்தைப் பற்றி எழும் சிந்தனைகளாக என்னிடம் எழுகின்றன.

என்ன செய்வது எதைப்பற்றியோ பேசிக் கொண்டிருந்த நான் வேறு விஷயத்தில் மனம் ஆழ்ந்துவிட்டேன். காதல் விஷயம் கதைக்குத் தேவையாக இருக்கலாம். அது சமுதாய வளர்ச்சிக்கு ஆக்கத்திற்கு அவ்வளவு அவசியம் என்று எப்படிக் கூறமுடியும்?

சமுதாய நிலையில் எந்த அடிப்படை மாற்றம் விரும்புகிறேனோ அதைத்தான் என் சொந்த வாழ்வில் அமைத்துக் கொள்கிறேன். அப்பொழுதுதான் பெண்ணுக்கு நீதி கிடைக்கிறது. சம்பிரதாயப்படி பார்த்தாலும் திருமணம் எதற்கு நடைபெறுகிறது. சமுதாயத்தைச் சாட்சியாக வைத்துத் தனி இருவர் செய்து கொள்ளும் ஒப்பந்தம்தான் திருமணம் என்றால் அந்தச் சமுதாய நல்லெண்ணத்துக் காகவாவது மதிப்புத் தரவேண்டுமே! அவள் சமுதாயத்தைச் சாட்சியாக வைத்து அவனை மணந்தாள். என் மனச் சான்றைச் சாட்சியாக வைத்து அவளோடு இணைந்தேன். அவன் சுரண்டல் கட்சியைச் சேர்ந்தவன். அவள் சுரண்டப்பட்டவள். அவளுக்குத் துணையாக நிற்பதுதான் சமூகநீதி. எளியோரை வலியார் வாட்டுதல் அநீதி; எளியோர் பக்கம் நின்று அவர்களை வாழ வைப்பதுதான் சமநீதி. இந்தச் சமநீதியின் பார்வையின் முன்னால் நான் செய்தது குற்றமாக எனக்குப் படவில்லை.

வள்ளுவர் குறள்வழி நான் குற்றவாளிதான். 'பிறன் மனை நயத்தல்' குற்றம்தான். அவளை என் மனைவியாக ஆக்கிக் கொண்ட பிறகு அது எப்படிக் குற்றமாகும். பழங்காலத்தில் விவாகரத்து என்பது இல்லாத காலம். அவர்களுக்குள் வெறுப்புப்பூசல் வந்தால் அது ஊடலாகத் தான் இருக்கும். அவன் பரத்தமையை விரும்பினால் அவள் ஊடல் கொள்வாள். மனைவி பொருள் கொண்டு வர வேண்டும் என்று எதிர்பார்த்ததாக எந்த இலக்கியமும் சொன்னது இல்லை. ஆண்மகன்தான் பொருள் முயற்சி செய்தான். காடும் மேடும் கடந்து நாடுகள் சென்று பொருளைத் திரட்டி வந்தான். 'வினையே ஆடவருக்கு உயிர்' ஆக இருந்தது. நாணமே பெண்ணுக்கு அழகைத் தந்தது. இன்று அவள் வெளியில் சென்று சம்பாதிக்க வேண்டும். வீட்டில் சமையலும் செய்ய வேண்டும். இயற்கை விதித்த கட்டளையை நிறைவேற்ற வேண்டும். தாய்மையை

விட்டு அவள் விலக முடியாது. அவளே மகனைப் பள்ளிக்கும் அழைத்துச் செல்கிறாள். இன்று அவள் தந்தை யாகவும் இருந்து கடமையாற்றுகிறாள். அவள் அழகாக இருந்ததை அவனால் ஏற்றுக் கொள்ளமுடியவில்லை. அவள் அழகை மற்றவர்கள் ரசிக்கக் கூடாது என்ற மனப்பான்மை எப்படியோ உண்டாகிவிட்டது.

பல பேர் அப்படித்தான் நினைக்கிறார்கள். தன் மனைவியின் அழகை மற்றவர்கள் ரசிப்பதைப் பொறுக்க மாட்டார்கள். மனைவிதான் அவனுக்கு உரியவள். அழகு காண்பவர் அனைவர்க்கும் உரிய பொது உடைமை. இந்த வித்தியாசத்தை உணர வேண்டும். கண்ணால் அழகைப் பருக அனைவர்க்கும் உரிமை உண்டு. அந்த உரிமையைத் தான் அவன் மதிக்கமாட்டான். இதுதான் அவன் மனச்சிக்கல். "ஏன் நீ அதிகமாக ஒப்பனை செய்து கொள்கிறாய்" இது அவன் கேட்ட கேள்வி. அழகாக இருக்க வேண்டுவது ஒவ்வொருவரின் கடமை. இது சமுதாயத்துக்கு இந்த வகையில் நாம் கட்டுப்பட்டவர்கள் தான். சிலர் உடம்பையே மூடி மறைத்துக் கொள்கிறார்கள். இரண்டு கண்களுக்கு மட்டும் ஒளி தருகிறார்கள். அவள் இந்த உலகத்தைப் பார்க்கலாம். உலகம் அவளைப் பார்க்கக் கூடாதாம். இந்தப் பழக்கம் எல்லாம் நாட்டை விட்டு மறைந்து விட்டன. இன்று ஆணும் பெண்ணும் சமுதாயத்தில் தொழிலாளர்கள் ஆகி விட்டனர். இருவரும் தொழில்துறையில் சமம் அடைந்து விட்டனர். எந்தத் துறையிலும் பெண் சக தொழிலாளியாகி விட்டாள். அவள் தனக்குத் தான் உரியவள் என்று நினைத்தான். அவளுக்கு உரிமை கொடுக்க மறுத்தான். அவளை அடக்கினான். அவள் அவனைத் திருத்த முயன்றாள். தன்னைச் சீர்படுத்திக் கொண்டாள். பிறகுதான் அடிப்படை மாற்றத்துக்கு இடம் தந்தாள்.

இவ்வளவும் அவளைப்பற்றி நான் எண்ணிய எண்ணங்கள். அவள் மனநிலை தூய்மையானதுதான். தன்

கணவனை அவள் முற்றிலும் இதயத்தை விட்டு அகற்றிய பிறகுதான் அவள் எனக்கு அந்த இடத்தைத் தந்தாள். ஒரு வீட்டில் இரண்டு பேர் குடித்தனம் நடத்தவில்லை. வீட்டுக்கு உரியவன் இடத்தைக் காலி செய்த பிறகு தான் நான் அங்குக் குடி புகுந்தேன். சட்டம் அதற்கு இடம் தராமல் இல்லை. அவனை அகற்றுவதற்கு அவள் நடத்திய போராட்டங்கள் அவை வெளியே தெரியாமல் இருந்தன. அவள் அந்தப் படங்களை அகற்றிய பிறகுதான் அவள் அதில் முழு வெற்றி பெற்றாள் என்று நினைக்கிறேன்.

"காதல் செய்வதற்கே வாய்ப்புக் கிடைக்கவில்லை. அப்படிக் கிடைத்திருந்தால் நிச்சயமாக நான் அவனுக்கு வாழ்க்கைப்பட்டு இருக்க மாட்டேன். உறவுக்காரன் என்ற ஒரே அடிப்படைதான் எங்களை ஒன்றுபடுத்தியது. அவன் தப்புக்கணக்குப் போட்டுவிட்டான். இன்ஸ்பெக்டராக இருந்தால் நிறைய காசு சம்பாதிப்பார் என்று எதிர் பார்த்தான். வருமான வரிக்குக் காட்ட முடியாத கணக்கு அவரிடம் குவியும் என்று நினைத்து ஏமாந்தான். நிறைய சொத்துக் கிடைக்கும் என்று நம்பினான். லஞ்சம் வாங்கு வார்கள், நிறைய சம்பாதிப்பதை விட அவர்கள் உறவினர்கள் தான் நிறைய சேர்த்து வைக்கிறார்கள். தம் பேரில் கணக்கு வைக்க முடியாது என்பதால் தம் சொந்தக் காரர்களின் மீது நிறைய சொத்து வாங்குவதைப் பார்த்திருக்கிறான். அந்த நிலையில் அவர் இவன் மீது நிறைய எழுதி வைப்பார் என்று எதிர்பார்த்தான். அது கிடைக்கவில்லை என்று தெரிந்ததும் என் மேல் வெறுப்புக் காட்டினான்.

என் அப்பா நிறைய பணம் சேர்த்து வைத்திருந்தால் என் குடும்பமே சந்தோஷமாக இருந்திருக்கும். அவர் லட்சிய வாழ்வில் வாழ்ந்து தொலைந்து விட்டார். அவர் சொல்கிறார் மனிதன் அறிவாளியாக ஆகிவிடலாம். வல்லவனாக இருக்கலாம். ஆனால் நல்லவனாக இருப்பது

தான் கஷ்டம் என்கிறார். நாங்கள் குற்றவாளிகளைத் திருத்தும் தூய பணியில் ஈடுபடுகிறோம். நாங்கள் பணம் வாங்குவது நல்லதா? வைத்தியனே நோயாளி ஆகிவிட்டால் இந்த நாட்டின் கதி என்ன ஆவது என்று கேட்டார்."

இதையெல்லாம் அவள் எடுத்துச் சொல்லி இருக்கிறாள். அந்த இன்ஸ்பெக்டர் சொன்ன சொற்கள் எனக்கு மிகவும் பிடித்திருந்தது. வல்லவனாக இருப்பது எளிது; நல்லவனாக இருப்பதுதான் கடினம் என்று சொன்னார். வல்லவர்கள் கையில் நாடு சிக்கித் தவித்தது. இனியும் வல்லவர்கள் கையில் நாட்டை ஒப்புவித்தால் அவர்கள் நல்லதை வாழவிட மாட்டார்கள் என்ற உணர்வு எழுந்துள்ளது. மக்கள் நல்லவர்களிடத்தில் தான் நம்பிக்கை வைக்கிறார்கள்; வல்லவர்களைக் கண்டு அஞ்சுகிறார்கள். அரசியல் தலைவர்களில் ஒருவர் இவ்வாறு தொலை ஒளியில் பேசக் கேட்டேன். அது கூட உஷாவின் வீட்டில் தான் என்று நினைக்கிறேன். அது தேர்தல் பேச்சு என்று நினைக்கிறேன்.

"நான் என்னை வல்லவன் என்று சொல்லிக் கொள்ளவில்லை. ஆனால் நல்லவன் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்." இந்தப் புதிய தத்துவம் எனக்குப் பிடித்து இருந்தது. "நல்லவனாக மட்டும் வாழ்ந்தால் போதாது. வல்லவனாகவும் வாழவேண்டும்'' என்று அண்மைக் காலத்தில் தமிழ் எழுத்தாளர்கள் வற்புறுத்திக் கொண்டு இருந்தார்கள். பாரதிதாசன் என்று நினைக்கிறேன். அவர்தான் 'பிசிராந்தையார்' என்ற நாடகத்தில் இக்கருத்தை வலியுறுத்துகிறார். அதை ஒட்டி மு.வ.வும் தன் எழுத்தில் இதை வற்புறுத்தி இருந்தார்; எல்லோரும் வல்லவராகத் தொடங்கி விட்டார்கள். நாட்டைச் சூறையாடுகிறார்கள். இந்த நாட்டு வரலாறே வல்லவர்கள் கையில் சிக்கிக் கொண்டது.

அவர் நல்லவராக வாழ்ந்ததால்தான் பணம் சேர்க்க முடியவில்லை. உஷாவின் வாழ்க்கைக்கு வேண்டிய வசதிகளைத் தர முடிந்தது. ஆனால் பிறர் மெச்சும்படி வாரி வழங்க முடியவில்லை. உறவுக்காரனுக்கு அவளைக் கட்டி வைத்தார்; அவன் அவளைத் துறவுக்காரியாக்கி விட்டான்.

அவள் சொன்னாள் "அதுக்கப்புறம் நான் என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்தேன், நல்ல காலம் நான் பி.யூ.சி. வரை படித்திருந்தேன். அது வரையிலும் ஒரு பெண்ணைப் படிக்க வைத்தால் போதும் என்றுதான் பொதுவாகப் பெற்றோர்கள் நினைக்கிறார்கள். அதாவது அவர்கள் கடமை அதோடு முடிகிறது என்று நினைக்கிறார்கள். அவர்கள் நினைப்பதுபோல எங்கே நடக்கிறது; தொடர்ந்து பி.காம். படித்தேன். பெண்கள் ஆடல் பாடல் இவற்றில் சிறந்து முன்னுக்கு வந்தது பழைய காலம். திரைப்படம் வந்த பிறகு ஒரு சிலர் தான் பாட முடியும்; ஆடமுடியும். மற்றவர்கள் அங்கே நாடவே முடியாது. இப்பொழுது பெண்கள் அறிவாளிகள் ஆகிக் கொண்டு வருகிறார்கள். முன்னால் எங்களுக்கே உரிய அழகை வைத்து முன்னுக்கு வரமுடிந்தது. இப்பொழுது அறிவை வைத்து முன்னுக்கு வருகிறோம்.

அவன் என்னை நிராகரித்ததால்தான் படிக்க வாய்ப்பே ஏற்பட்டது. நிச்சயமாக அவனுக்குத்தான் நான் என் நன்றியைத் தெரிவிக்கக் கடமைப்பட்டு இருக்கிறேன். படிக்கும்பொழுதுதான் 'சுதந்திரம்' எவ்வளவு முக்கிய மானது என்பதை உணரத் தொடங்கினேன். நான் வாழ்ந்த மணவாழ்க்கை நரகம் என்பதைத் தெரிந்து கொண்டேன்.

நான் படிக்கும்பொழுது பலருக்கு நான் மணமானவள் என்பது தெரியாது. கழுத்தில் செயின் போட்டிருந்தேன். அப்பொழுதுதான் இந்தச் செயின்

எவ்வளவு அவசியம் என்பதை உணர முடிந்தது. மஞ்சள் கயிறாக இருந்தால் உடனே நான் மணமானவள் என்பதைக் கொஞ்சம் கூட வெட்கமில்லாமல் வெளியே காட்டிவிடும். அதே மஞ்சள் நிறமுள்ள பொன் சரடு அழகுக்கு அழகாகவும் தாலி தொங்குவதற்கு அழகிய ஊஞ்சலாகவும் அமைந்து அதில் தாலி ரொம்பவும் அடக்கமாகச் சொன்ன பேச்சைக் கேட்டுக்கொண்டு உள்ளே மறைந்து கிடந்தது. என் இதயத்துடிப்பின் நாதத்தையும் உள்ளக் கொதிப்பின் வேகத்தையும் மாறிமாறி அனுபவித்துக் கொண்டிருந்தது. கம்ப ராமாயணத்தில் ஒரு கவிதை. சீதையிடம் அநுமன் கணையாழியைக் கொண்டுவந்து தருகிறான். அதை அவள் தன் மார்பில் அணைத்துக்கொண்டு மகிழ்கிறாள். அந்த மகிழ்ச்சியில் அது குளிர்ச்சி பெற்றது. விரக தாபத்தால் அது வெம்மையுற்றது என்று வருணிக்கிறார். ஏன்? இதயத் துடிப்பின் கீதத்தையும் வாழ்க்கைக் கசப்பின் சோகத்தையும் மாறிமாறி அது உணர்ந்து கொண்டிருந்தது. டாக்டர்கள் கழுத்தில் ஒரு மாலை போலப் போட்டுக் கொள்கிறார்களே அதுதான் 'ஸ்டெத்தாஸ்கோப்பு'; அதை வைத்துத் தொட்டு இதயத்துடிப்பை அறிவார்கள். அதேபாலத்தான் அந்தத் தாலி என் இதயத்துடிப்பை அறிந்துகொண்டே இருந்தது. அவர் என்னைவிட்டுப் பிரிந்தார்; இல்லை என்னைப் பிரித்தார். ஆனால் அந்தத்தாலி மட்டும் என்னோடு ஒட்டி உறவு கொண்டது. அது என்னைவிட்டு நீங்கவில்லை. அந்தப் புனிதமான ஒளிப்பிழம்பை என் மார்பில் அணைத்துப் போன்றினேன். அது அவன் கட்டியது என்பதற்காக அல்ல; சமுதாயம் அதைக் கட்டும்பொழுது மங்கல முழவோடு சேர்ந்து அதை வாழ்த்தியதால்தான். வந்த தந்திகள்; அதுதான் வாழ்த்துச் செய்திகள் கணக் கற்றவை; அவசரச் செய்தியாக அவை வந்து சேர்ந்தன. அவற்றையெல்லாம் கூட அவ்வப்பொழுது பார்த்துப் பொழுது போக்கி இருக்கிறேன்.

'இந்த இன்பம் என்றும் நிலைத்திருக்க' என்று வாழ்த்தினார்கள். 'ஆல்போல் தழைத்து அருகுபோல் வேர்விட்டு' வாழும்படி வாழ்த்தினார்கள்; 'பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு' வாழவேண்டுமென்று வாழ்த்தினார் கள். அந்தப் பதினாறு என்ன என்பது எனக்குத் தெரியாது. நிச்சயமாக 16 குழந்தைகள் அல்ல. ஒரு குழந்தை பெறுவதற்கு முன்னால் வாழ்க்கையில் முறிவு ஏற்பட்டு விட்டது. அது எப்படி 16ம் பெறும்வரை வாழ்க்கை தொடர்கிறது. சங்கிலித் தொடர்போல் இந்தக் குழந்தைகள் இருவரையும் இணைக்கின்றன என்று நினைக்கிறேன். அந்த வாழ்த்துக்களுக்கு மதிப்புத் தருகிறேன். அதனால்தான் அந்தத் தாலியைக் கழுத்தில் போட்டுக் கொண்டு கௌரவம் அளித்தேன்.

மறுபடியும் ஒரு நிகழ்ச்சி கவனத்துக்கு வருகிறது. தாலி அணிந்ததும் மகளிர் கைந்நிறைய வளையல்கள்; கழுத்து நிறையச் சங்கிலிகள்; காது நிறையத் தோடுகள்; விரல்கள் நிறைய மோதிரங்கள்; இப்படிப் பல அணிகள் அணிகின்றனர். இந்த அணிகள் அந்தத் தாலிக்கு நன்றி செலுத்த வேண்டும். அந்தத் தாலி இல்லையென்றால் அந்த அணிகளுக்கு அவ்வளவு கௌரவம் கிடைக்காது.

அநுமன் சீதையிடம் சொன்னானாம், இராவணன் அவளை எடுத்துச்சென்றபோது அவள் அணிந்திருந்த நகைநட்டுகளை எல்லாம் வழியில் போட்டுக்கொண்டே போனாளாம். அந்த நகைகள் அவர்கள் கையில் கிடைத்தனவாம். அந்த நகைகள்தாம் சீதை உயிரோடு இருக்கிறாள் என்ற செய்தியை இராமன் அறிவதற்குத் துணை செய்தனவாம். ஏனைய நகைகள் எல்லாம் மங்கல அணியைக் காத்தன என்கிறார் கம்பர்.

இந்தக் கதையைக் கதாகாலட்சேபத்தில் கேட்டிருக் கிறேன். அதை நினைத்துப்பார்க்கிறேன். இராமன் உயிரைக்

காப்பாற்றியதே அந்தத் தாலிதானாம். சீதை உயிரோடிருக் கிறாள் என்ற நினைவு அவனை வாழவைத்ததாம். அந்தத் தாலி அவனுக்கு என்னைப்பற்றிய நினைவுகளை உண்டாக்கும்; மனம் திருந்துவான் என்ற நம்பிக்கையை அது ஊட்டி வந்தது. அதைப்பார்க்கும் போதுதான் அம்மாவுக்கு மன நிறைவு. தன் மகள் வாழ்கிறாள் என்று நினைப்பாள். கம்பன் தன் இராமகாதையில் அந்தத் தாலிக்கு மதிப்புத் தருகிறான். ஆடவர் அதற்குத் தனிமதிப்புத் தருகின்றார்கள். பிற ஆடவரும் மணமானவள் என்றால் தனி மதிப்பைக் காட்டுகிறார்கள்.

வழியில் உந்து நிலையங்களில் செல்லும்பொழுது அதை வெளியே தெரியும்படி மாட்டிக்கொள்வேன்; வட்டமிடும் இளைஞர்களும் என்னைப்பற்றி எந்தத் திட்டமும் இடமாட்டார்கள். 'அம்மா' என்ற மரியாதைக் குரிய சொற்களை அது தந்து கொண்டிருந்தது. ஆனால் 'அம்மா'வாக ஆகமுடியாது என்பது அவர்களுக்கு எப்படித் தெரியும்.

நான் படித்தது பெண்கள் கல்லூரியாகப் போய் விட்டது. நல்லகாலம் எந்த அனுபவமும் இல்லாமல் வெளியேறினேன். ஆண்கள் கல்லூரியில் படித்தால் மட்டும் என்ன? அங்கே படித்த என் சிநேகிதிகள் சொல்லி இருக்கிறார்கள். சும்மா அனாவசியமாகப் பயப்படு கிறார்கள். பண்பட்ட ஆடவர்கள் பலர் இருக்கிறார்கள். அவர்களோடு பழகுவதே ஒரு நல்ல அனுபவம். சகோதர பாசம் என்பதை அங்குதான் பார்க்க முடியும். சும்மா கதை எழுதுகிறவர்கள் ஏதாவது தவறாக எழுதுகிறார்கள். அப்படித்தான் என்ன காதல் ஏற்படுவது இயற்கைதான். அந்தக் கற்பனை அழகானதுதானே. இப்படி அவள் எடுத்துக்கூறி இருக்கிறாள். எனக்கு அந்தக் கற்பனை எழ வாய்ப்பே இல்லாமல் போய்விட்டது. நான் எங்குப்

படித்தாலும் ஒன்றுதான். அங்குப் படித்தால் ஒரு வேளை அவன் நினைவுகள் என்னை வாட்டியிருக்கும். இங்கே அந்த நினைவுகள் எழ வாய்ப்பில்லை. தனிப்பட்டவருக்கு ஏற்படும் துன்பங்கள் கூட்டத்தில் பழகும்போது தானாக மறைந்து விடுகின்றன. அதற்காகவே படிப்பு அவசியம் என்று பட்டது, இப்படி அவள் தன் கல்லூரிப்படிப்பின் அவசியத்தையும் ஆரம்பத்தையும் எடுத்துச் சொன்னாள். பாரத நாட்டில் இப்பொழுது ஒரு புத்தெழுச்சி ஏற்பட்டுவிட்டது. மகளிர் பெற்றோர்களுக்குச் சுமையாக இருக்கமாட்டார்கள். வயிற்றில் கிடக்கும்பொழுது தாய்க்குச் சுமை. வளர்ந்த பிறகு தந்தைக்குச் சுமை. கட்டிக்கொண்டு வெளியேறும்போது கணவனுக்குச் சுமை. அது பழைய காலமாக மாறிக் கொண்டிருக்கிறது. இன்று பெண்கள் யாருக்கும் சுமையாக இருக்கப் போவதில்லை. நாங்கள் சம்பாதிக்கத் தொடங்கிவிட்டால் எங்கள் பிரச்சனை பாதிதீர்ந்தது" என்று சொன்னாள்.

அவள் சொன்னது உண்மைதான். எங்கள் ஆபீஸில் நான்கில் இரண்டு பேர் அவர்கள்தாம். ஆபீஸூம் நன்றாகத்தான் இருக்கிறது. சுறுசுறுப்பாக வேலையும் நடக்கிறது. அவர்களின் ஒருத்தியாகத்தான் உஷா இடம்பிடித்து விட்டாள். அங்கேயே நிற்கவில்லை. என் வாழ்க்கையிலும் அவளுக்கு ஓர் இடம் தந்துவிட்டேன். ஆனால் அவளுக்குச் சமூகத்தில் இடம் கிடைக்குமா? அதுதான் என்கதையில் முக்கியமான சிக்கல். அது போகப் போகத்தான் தெரியும்.

## 12

என் மனம் ஒரு நிலையில் இல்லை. சலனம் என்பதன் அர்த்தத்தை இப்பொழுதுதான் உணரத்

தொடங்குகிறேன். நான் என் நெஞ்சை அவளிடம் றிகொடுத்து விட்டேன். எந்தத் தவறையும் யாரும் உடனே செய்து விடுவதில்லை. அதற்கு வேண்டிய அடிப்படைகளும் மெல்லத்தான் உருவாகின்றன. மனிதன் தவறாமல் இருக்க ஒரு குறள் போதுமே! அது போதவில்லை என்று தெரிந்துதான் ஆயிரத்து முந்நூற்று முப்பது குறள்கள் எழுதினார் என்பதைத் தெரிந்து கொண்டேன். அகிலனின் சித்திரப் பாவை படித்து இருக்கிறேன். எப்பொழுதோ படித்திருக்க வேண்டிய நாவல் படிக்கத் தவறிவிட்டேன். நாவலுக்குப் பரிசு கொடுப்பது எவ்வளவு அவசியம் என்பது பின்னர்தான் தெரிந்தது. அந்த நாவலுக்குப் பரிசு கொடுத்ததால்தான் அதைப் பல்லாயிரக்கணக்கான வாசகர்கள் படித்தார்கள். எவ்வளவு உயர்ந்த கருத்துகள் நாட்டில் பரவின.

அந்த நாவலுக்குப் பரிசு கொடுத்தது சரியில்லை என்றும் வாதித்தார்கள். அதற்காக வாசகர்கள் அரங்குகளும் விவாதமும் நடத்தினார்கள். அவருக்குக் கொடுத்திருக்கக் கூடாது, இவருக்குக் கொடுத்திருக்க வேண்டும் என்று வாதிட்டார்கள் பலர். சிலர் கட்சிக் கண்ணோட்டத்தில் அவரை எதிர்த்து முணகிக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது தமிழ்ப்பற்று எங்கோ போய்விடுகிறது. இந்திய நாட்டில் ஒரு தமிழ் எழுத்தாளன் பரிசு பெற்றதைக் கண்டு ஒவ்வொரு தமிழனும் பெருமைப் பட வேண்டியதுதான். என்னைக் கேட்டால் பாரதிக்குப் படம் வைத்தது போல அவருக்கும் படம் வைக்கலாம் என்று தோன்றுகிறது. ஓவியரிடம் சொல்லி ஒரு படம் எழுதச் சொல்லி இருக்கலாம்.

அகிலனின் கைவண்ணம் முழுவதையும் அச்சித்திரப் பாவையில் காண முடிகிறது. பரிசு பெற்ற பிறகுதான் படித்தேன். அதில் அவள் அதுதான் ஆனந்தி மற்றொரு வனுக்கு வாழ்க்கைப்பட்டாள். அவள் தாலியை அவன்

கையில் கழற்றிக் கொடுத்துவிட்டாள். சமுதாயக் கட்டுப்பாட்டுக்கும் வள்ளுவர் குறளுக்கும் அஞ்சித்தான் அவனுக்கு அதுதான் மாணிக்கத்துக்கு அவள் தன் உடலைக் கொடுத்து விட்டாள். உள்ளத்தைக் கொடுக்க முடியவில்லை.

உஷா சொன்னாள். ஆரம்பத்தில் என் உள்ளத்தை முழுவதும் அவனுக்குக் கொடுத்திருந்தேன். 'தெய்வம்' என்றால் என்ன என்பதை நான் கண்டதில்லை. கணவனிடம் அந்தத் தெய்வத் தன்மையைக் காண முயன்றேன். அவனிடம் பேய்க் குணம்தான் வெளிப் பட்டது. யாருக்கு இதை எப்படிச் சொல்வது என்று தெரியவில்லை.

மேலும் அவள் தொடர்ந்து சொன்னாள். அவன் என்னை அன்பாக நடத்திப் பார்த்ததே இல்லை. 'அன்பு' என்பது என்ன என்று அவனிடம் கற்றுக்கொள்ள முடியவில்லை. தலையில் பூச்சூடி இருப்பேன்; யாரை மயக்க என்று கேட்பான். "உன்னைத்தான்" என்பேன். "அதற்கு வேறு யாரையாவது பாரு" என்று சகஜமாகச் சொல்லி விடுவான். எதைப் பேசுவது எப்படிப் பேசுவது என்பதே அவனுக்குத் தெரியாது. அவன் வாழ்க்கையில் எதையோ பறிகொடுத்தவனாகக் காணப்பட்டான்.

கடைசியில் அவன் வீட்டைவிட்டு நான் வெளியேறியபோது பயங்கரமான இரவு. விக்கி விக்கி அழுதேன். என் கண்கள் சிவந்தன. கோபத்தால் சிவக்க வேண்டிய கண்கள் அன்று அழுகையால் சிவந்தன. அந்த வீட்டில் என் ஒருத்திக்குத்தான் இடம் இல்லையா என்று கேட்டேன்.

அவன் செவிகள் அன்று செவிடாகி விட்டன. கண்கள் குருடாகி விட்டன. அறிவு மங்கிவிட்டது. "உனக்கு என்னடி நீ எப்படியும் பிழைக்கலாம். உன் அழகே போதுமே" என்றான். அப்பொழுதுதான் என் அழகு அவனுக்குப் பயன்படாது என்பதை உணர்ந்தேன்.

இன்றும் அந்தத் துன்பக் காட்சிகளைச் சொல்லி என்ன பயன்; என்னை நன்றாக வாழ்வேன் என்றுதான் நம்பி வாழ்த்தினார்கள். மறுபடியும் கூட்டி ஒரு அழைப்பிதழை விடுத்து அவர்கள் முன்னிலையில் நான் ஏன் விவாக ரத்து செய்யக்கூடாது என்று நினைத்தது உண்டு. அதைப்போல் யாரும் செய்தது இல்லை.

கண்ணகிக்கு முன் யாரும் அரசு அவைக்களத்தில் சென்று வழக்குத் தொடுத்தது இல்லை. எனக்கு நீதி மன்றங்களுக்குச் செல்வதில் நம்பிக்கை இல்லை. என்ன பெறமுடியும்? அவனிடம் மாதம் இவ்வளவு தரவேண்டும் என்று வாதாடி வெற்றி பெறலாம். தியாகபூமி கதையும் அப்படித்தான் முடிகிறது. ஸ்ரீதர் வழக்குத் தொடுத்தான் என்று நினைக்கிறேன். அவன் தியாகபூமியில் அடியெடுத்து வைத்தான். அந்தக் கதை கவனத்துக்கு வரவில்லை. எங்கே அந்தக் கதைகள் முழுவதும் கவனத்துக்கு வருகிறது.

"அவன் படித்தவன்தானே"

"பட்டம் வாங்கியவன்"

"அப்படி என்றால்?"

"பட்டத்துக்காகப் படித்தவன். பண்புக்காகப் படிக்க வில்லை."

மேலும் விளக்கினாள். அவன் படிப்புத் திட்டத்தில் ஒரு பெரிய குறை இருந்தது. ஆண்களும் பெண்களும் பழகுவதற்கே வாய்ப்பு ஏற்பட்டது இல்லை. வெறும் ஆண்கள் படிக்கும் கல்லூரியில் அவன் படித்தவன். அதனால்தான் அவன் பண்பு பெறவில்லை. இன்று கல்வித் திட்டத்தில் 'சமூக சேவை' என்று புகுத்தியிருக்கிறார்கள். ஆணும் பெண்ணும் சேவை செய்வதில் ஒன்றுபடுகின்றனர். இந்த ஆண் பெண் பழக்கத்தைப் பயங்கரமாகத் தீட்டி இருந்தார்கள். எந்தப் பெண்ணோடும் தனிமையில்

பழகினால் கெட்டுவிடுவார்கள் என்ற கற்பனையில்
பழக்கினார்கள். அத்தகைய போக்கில் அவன் பழகினான்

அவன் வீட்டில் தங்கையோடு பிறந்திருந்தால் அவன்
பண்பட்டு இருப்பான்; அந்த வாய்ப்பும் அவனுக்குக்
கிடைக்கவில்லை. அன்பு என்பது என்ன என்பதை அவன்
அறியாதவனாக வாழ்ந்துவிட்டான். வாலைக்குழைக்கும்
நாயைக்கூட அவன் தடவிக்கொடுக்க மாட்டான்
கல்லெடுத்துத்தான் பழக்கம்.

அவன் அன்பின்மைக்கு அவளுக்குத் தோன்றிய
காரணங்களைச் சொல்லி வந்தாள். தங்கையோடு
பிறந்தவர்களே அன்பு செலுத்துகிறார்கள் என்பது
உறுதியில்லை என்பது என் அனுபவம். இதெல்லாம்
தனிப்பட்டவரின் பழக்க வழக்கங்களைப் பொறுத்தது
என்பது என் கருத்து.

அவன் பணம் உடையவளை மணம்செய்து
கொண்டிருந்தால் வாழ்க்கை வசதிகளைப் பெற்றிருப்பான்
வாழ்க்கை வசதிகளில் மயங்கும்பொழுது அவளைப்பற்றி
அவன் கவலைப்படத் தேவை இல்லை. அழகு என்பது
எப்படி இருக்கும் என்று தேடிக்காண முடியாத
பெண்களிடம் அமைதியாகத் தாம்பத்திய வாழ்க்கையை
நடத்துகிறார்கள் என்றால் என்ன அர்த்தம். அவனுக்கு
அவளைப் பற்றிச் சிந்திக்க நேரம் இருப்பதில்லை.

அவனைக் கவர்வதற்குப் பல விஷயங்கள்
ஏற்பட்டுவிடுகின்றன. பணம் அவனை மேலோட்டமாக
வாழச்செய்கிறது. அந்த வசதிகளை நான் உண்டாக்கித்தர
முடியவில்லை. தனக்கு அழகிய மனைவி இருக்கிறாள். அது
போதும் என்று மன நிறைவு கொள்ளவேண்டியவன்
தனக்கு எது எது இல்லையோ அதை நினைத்துப் போராடி
அவற்றை அவள் கொண்டு வந்துதரவில்லை என்று
நினைத்து அலுப்பும் அங்கலாய்ப்பும் கொள்கிறான்.

மணவாழ்க்கை எல்லா வகையான இன்பங்களை அனுபவிக்க என்ற தவறான கருத்துப் பலரிடம் குடிகொள்வதால் இந்தத் தொல்லைகள் ஏற்படுகின்றன. இன்பம் என்பது எல்லா வாழ்க்கையிலும்தான் இருக்கிறது. மண வாழ்வில்தான் இன்பம் இருக்கிறது என்று நினைப்பதால் தான் இந்தத் தவறுகள் ஏற்படுகின்றன. துன்பத்தையும் இன்பமாகக் காணும் மன அமைதி மணவாழ்க்கையில் ஏற்படுகிறது. அவ்வளவுதான் கூறமுடியும். துன்பத்தைத் தாங்கும் சக்தி மணவாழ்வில் ஏற்படுகிறது. இதை உணர்ந்து வாழ்பவருக்கு மண வாழ்வு நிறைவைத் தரும். அவன் அதை உணராதவனாகிவிட்டான்.

அவள் தன் வாழ்வின் வரலாற்றை ஆதியோடு அந்தமாகப் பத்திரிகைத் தொடர்கதை போல விட்டு விட்டுச் சொன்னாள். இடையிடையே சில வாழ்க்கைத் தத்துவங்களையும் சேர்த்துச் சொன்னாள். அது கதாசிரியனுக்கு உரிய பண்பு; அது அவளிடமும் அமைந்து கிடந்தது.

அவள் அதைச் சொன்னதும் எனக்குப் பல வாழ்க்கைச் சித்திரங்கள் நினைவுக்கு வந்தன. முன் பெல்லாம் ஆனந்த விகடனில் படித்திருக்கிறேன். வைர மோதிரம் வாங்கித் தராவிட்டால் தீபாவளிக்கு மாப்பிள்ளை வர பிகு பண்ணுவதைச் சித்திரங்களாகத் தீட்டப்பட்டிருந்தன. அவை வெறும் வேடிக்கை என்று நினைத்து வந்தேன்.

இன்னும் இதைப் போன்ற நிகழ்ச்சிகள் அவள் வாழ்க்கையில் ஏற்பட்டு இருந்தன. அவற்றை எல்லாம் அவள் அப்பொழுது சொன்னது இல்லை. சொல்ல விரும்பவும் இல்லை. அந்த அனுபவங்களை அவள் மனத்தில் போட்டு வைத்தாள்.

நான் சொல்லிப் பார்த்தேன். மறுபடியும் அவனோடு வாழ்க்கை நடத்துவதுதான் நல்லது என்று. அவள்

சொல்லுகிறாள். "அவனைப் பொறுத்தவரை என் உடலைத்தான் கொடுக்க முடியும்."

"அதைக்கூட ஏன் கொடுக்க வேண்டும்? அதனால் என்ன பயன்? அவன் மிருக உணர்வுகளைத்தானே நான் வளர்ப்பேன். அவனை உயர்த்த முடியாமல் தாழ்த்துவதால் என்ன பயன்? மிருக உணர்வும் அவசியம்தான். ஆனால் அதுவே தொடக்கமும் முடிவும் என்பதை என்னால் ஒப்புக்கொள்ள முடியாது."

"இச்சைக்காகத்தான் நான் வாழ வேண்டுமென்றால் அதைவிட நஞ்சு உண்டு சாக விரும்புகிறேன்" என்று பச்சையாகச் சொன்னாள். "அதற்கு மேல் அவளிடம் எப்படி வாதிடுவது."

இதெல்லாம் பழைய கதை; இந்தப் படிகளை எல்லாம் கடந்ததால்தான் இப்பொழுது ஒரு முடிவில் வந்து நின்றோம். மறுபடியும் நாங்கள் பலர் அறிய மணம் செய்து கொள்வதாக யாரிடம் எப்படி இதைச் சொல்வது என்ற பிரச்சனையில் ஆழ்ந்து விட்டேன்.

ஓவியர் ஒரு முறை சொன்னார் வாழ்க்கையில் போராட்டமும் அதிருப்தியும் இருக்கும் வரைதான் அது வாழத்தக்கதாக அமைகிறது. மனநிறைவு ஏற்பட்டு விட்டால் அப்புறம் அழிவுதான் என்று சொல்லி இருக்கிறார். என் வாழ்வில் மன நிறைவு ஏற்படாமல் இருக்கச் சரியான சிக்கலில் மாட்டிக்கொண்டேன்.

ரொம்பவும் தொல்லை கொடுக்கிற நோய் 'ஆஸ்த்துமா' என்று சொல்லுகிறார்கள். அதனால் ஆயுள் நீட்டிப்பும் உண்டு என்று கூறுகிறார்கள். அதே போலத்தான் இந்த மாதிரி இழுபறிப் பிரச்சனைகள் என்று நினைக்கிறேன். நான் ஒரு ஆஸ்த்துமா நோயாளிபோல் இருப்பதாக இப்பொழுது எல்லாம் நினைப்பது உண்டு.

நோய் வரும்பொழுதுதான் உடம்பின் அருமையே தெரிகிறது. ஒவ்வொரு நோயையும் தீர்த்து அதைச் சரிப்படுத்த விரும்புகிறோம். அதே போலத்தான் இந்த நிலைவந்தபிறகுதான் வாழ்க்கையைப் பற்றிய குறைகள் கண்முன் வருகின்றன.

நோய் முற்றி விட்டால் வைத்தியரிடம் சென்றால் அவர் அறுவைச் சிகிச்சைக்கு சிபாரிசு செய்கிறார். அது தவறா? என்னைப் பொறுத்த வரை நான் டாக்டர் என்று என்னைப் பற்றி நினைத்துக் கொண்டேன். அவளோடு பழகிய பிறகு நானும் ஒரு நோயாளியாகி விட்டதை உணர முடிந்தது. என் நோய் தீர அவள் அவசியம் என்ற நிலை வந்த பிறகுதான் அந்தத் தவறைச் செய்தேன். அவள் இல்லாமல் நான் வாழ முடியாது என்ற நிலைமை ஏற்பட்டு விட்டது. புரட்சியில் தொடங்கிய என் வாழ்க்கை காதலில் அடிவைத்தது.

பிறகு அவளே மனம் மாற்றிக் கொண்டிருந்தால், அதாவது அவனோடு வாழ முடிவு செய்து கொண் டிருந்தால், நிச்சயமாக அவளைத் தடுத்து விட்டு இருப்பேன். எனக்கு உயிர்ப் பிச்சை கேட்டு இருப்பேன். நான் மிகவும் தாழ்ந்து விட்டு இருப்பேன். வல்லார் முன் சொல் வல்லேன். இப்பொழுது அவள் முன் மென்மையுற்று விட்டேன் என்ற நிலை வந்து சேர்ந்து விட்டது. இந்த முப்பது ஆண்டுகளாக இந்த ஒரு வாழ்வுக்காகத்தான் காத்துக் கொண்டிருந்தேனோ தெரியாது. கடலிலே தோன்றும் முத்து அணிபவர்க்குச் சொந்தம்; யாழிலே பிறக்கும் இசை கேட்பவர்க்குச் சொந்தம்; மலையிலே கிடைக்கும் சந்தனம் பூசிக் கொள்பவர்க்குச் சொந்தம் என்று எங்கோ எப்பொழுதோ படித்திருக்கிறேன். அவள் எனக்கு முத்தாகவும், இசையாகவும், மணமாகவும் விளங்கினாள்.

காதற் காவியங்கள் எல்லாம் என் உள்ளத்தின் உணர்வுகளில் தீட்டிக்காண முடிந்தது. அவள் இல்லாமல் நான் வாழ முடியாது என்ற நிலைக்கு வந்துவிட்டேன்.

நீரில் நீந்தத் தொடங்கிய பிறகு கைகளுக்கு ஓய்வு கொடுக்க முடியுமா? நீந்துவதில் இன்பம் இருப்பதால் தானே நிரில் குதித்து விளையாடுகிறோம். வாழ்க்கை ஒரு நீச்சல் குளம் என்றால் அதில் நீந்துவது ஒரு மகிழ்ச்சியைத் தந்துதான் தீரும். அவளும் என்னோடு நீர் தெளித்து ஆடிப்பாடி விளையாடுகிறாள். தனிமை என்பது சுகம் தரும் என்று ஞானிகள் கூறி இருக்கிறார்கள். உண்மைதான் நாங்கள் இருவரும் இருக்கும் தனிமை அதைத்தான் தந்து இருக்கிறது.

என் மனச் சான்றுக்கு ஓய்வு கொடுத்து விட்டேன். காரண காரியங்களை ஆராய்ந்து கொண்டிருக்க என்னால் முடியாமல் போய்விட்டது. யார் தவறு? எது தவறு என்று எண்ணுவதுதான் தவறு என்ற நிலைக்கு வந்துவிட்டேன்.

அவள் இல்லாமல் நான் வாழ முடியாது. நான் இல்லாமல் அவள் வாழ முடியாது. எவ்வளவு வேலைகள் இருந்தாலும் விட்டு விட்டு அவளைத் தேடிச் செல்வது ஏன்? அவள் மலர்ந்த முகத்தைக் காணும்போது, ஏன் என் இதயம் மலரவேண்டும்.

அவளும் சொல்கிறாள் என்னைப் பிரிந்து இருக்க இயலவில்லை. வாரம் ஒரு முறையாவது என்னைப் பார்க்கத் துடிக்கிறாள். நாளுக்கு ஒரு முறையாவது என்னோடு தொலைபேசியில் தொடர்பு கொள்கிறாள். அந்தத் தொலைபேசிக்கு அவளால்தான் அந்த இனிமை உண்டாயிற்று. என் சொற்கள் ஏன் அந்தத் தொலை பேசியின் காதுகளோடு உறவு கொள்கின்றன. அவை என்னிடம் இரகசியம் பேசுகின்றன. அவள் பேசும் பொழுது நான்தான் அவற்றைக் கேட்க முடியும். தொலைபேசியில்

ஏன் காதலர்கள் அவ்வப்பொழுது பேசுகிறார்கள் என்பதை அப்பொழுதுதான் உணர முடிகிறது. அவளிடம் பேசும் பொழுது மட்டும்தான் என் குரல் மென்மை அடைகிறது. கத்தாது; சத்தம் இல்லாமல் பேச முடிகிறது.

முன்பெல்லாம் தொலைபேசியில் யாராவது குறுக்கிட்டுப் பேசுவார்கள். அது சில சமயம் காதல் பேச்சாக இருக்கும். அது காது கொடுத்துக் கேட்காமல் இருக்க முடிவது இல்லை. நான் சலனமுள்ளவன்தான். அவர்கள் என்னதான் பேசுகிறார்கள் என்று கேட்க முயல்வேன். அதற்குள் அவர்கள் கீழே வைத்து விடுவார்கள். இனி நான் மற்றவர்கள் பேசுவதைக் கேட்டுக் கெட்டவன் என்ற பெயர் எடுக்கத் தேவை இல்லை. நானே கெட்டவனாகி விட்ட பிறகு பிறர் எப்படிக் கெடுக்கிறார்கள் என்பதை ஏன் கேட்டுக் கொண்டிருக்க வேண்டும்.

கண்டு கேட்டு உண்டு உற்று இன்னும் என் னென்னவோ படித்திருக்கிறேன். இந்த ஐந்து இன்பங்களும் ஓசை இன்பமாக உருவெடுக்கும் என்பதைத் தொலை பேசியில்தான் கண்டு கேட்டு உணர்ந்து உற்று அறிந்து இருக்கிறேன்.

நான் ஆபீசிலிருந்து பேசுவதில்லை. ஏன் அவளோடு நான் ஆபீசில் இருப்பதால்தான். நான் வீட்டில் இருப்பதே அவளோடு தொலைபேசியில் பேசுவதற்குத்தான். அதற்காகவே அவள் சினேகிதி வீட்டில் சென்று பேசுவாள். அங்கேதான் அவளுக்கு அந்த வசதி கிடைத்தது. என் மாமனார் மாஜி இன்ஸ்பெக்டர்தானே. அவருக்கு போனைக் கண்டாலே ஒரு 'அலர்ஜி.' இரவு தூக்கங்களை யெல்லாம் அவை கெடுத்துவிட்டன. போனுக்கும் போலீசுக்கும் நெருங்கிய தொடர்பு. அதனால் அவருக்கு அதைக் கண்டாலே பிடிக்காது.

இந்தத் தொலைபேசி பழங்காலத்தில் கண்டுபிடித்து இருந்தால் தமிழில் தூது இலக்கியங்களே தோன்றி

இருக்காது என்று நினைக்கிறேன். பேசாத நண்டோடும் கேளாத வண்டோடும் பேசியதாகக் கவிதைகள் படித்து இருக்கிறேன். "கானலும் கூறாது, கழியும் கூறாது, புன்னையும் மொழியாது; அன்னமும் செப்பாது; மயிலும் சொல்லாது; நீதான் சொல்ல வேண்டும் என்று தலைவி ஒருத்தி பாடியதாகக் கவிதை படித்திருக்கிறேன். சித்திராங்கதை மேகத்தைத் தூது விட்டு அர்ச்சுனனுக்குச் செய்து செப்பினாள். கிளியைத் தூது அனுப்பி அழகரின் மாலையைக் கொண்டு வரும்படி ஒரு தலைவி சொன்னதாகப் படித்து இருக்கிறேன். இந்த அருமையான கருவி அவர்களுக்குக் கிடைக்கவில்லை.

நாங்கள் என்னதான் பேசினோம் எவ்வளவு நேரம் பேசினோம் என்பதை எப்படி எடுத்துக் கூற முடியும். அந்த மாதம் அவர்கள் பில் அனுப்பிய பிறகுதான் அதன் தண்டனை என்ன என்பதை உணர முடிந்தது.

இந்த இன்ப அலைகளில் நாங்கள் தத்தளித்துக் கொண்டு இருந்தோம். அதே சமயத்தில் புற நிகழ்ச்சிகளின் கொத்தளிப்பில் அகப்பட்டு அவதியுற்றோம். எங்கள் பயணம் நீண்ட பயணம்; ஆனால் நிலைத்த பயணம். தனித்துச் சென்றால்தானே துன்பம். எவ்வளவு தூரம் வேண்டுமானாலும் துடுப்புகளை இருவரும் தள்ள எங்கள் படகு அசைந்து ஆடிச் செல்லும். அதே சமயத்தில் சூறாவளியும் காற்றும் அலைகளும் மோதத்தான் செய்யும். அந்த நிலையில் படகைச் செலுத்துவதில்தான் எங்கள் திறமையும் ஆற்றலும் இருக்கின்றன.

சுழியில் படகு சிக்கித் தவிக்கும்போது ஏன் ஏறினோம் என்று எண்ணத்தான் செய்கிறோம். சுழிகள் எப்பொழுதும் நீடித்து இருப்பது இல்லை. அதைக் கடந்து சென்று விட்டால் படகு ஆடி அசைந்து கரை சேரும்.

எங்கள் காதற்பயணம் தொடங்கியபோது அவளே அதற்காக வருத்தப்பட்டாள். அவள் ஆபீசு வேலையை

இராஜிநாமா செய்துவிட்டாள். அதைப் பற்றிக் கேட்பது அநாகரிகமாகப்பட்டது. மறுபடியும் அவள் என் கீழ்க் குமாஸ்தாவாக இருக்க விரும்பவில்லை என்று நினைக்கிறேன். அதில் அவசியமில்லாமல் வேறுபாடு தோன்றத்தான் செய்கிறது. அவளோடு நான் ஒன்றிவிட்ட பிறகு உத்தியோகத்திலும் அவள் தாழ்ந்து போவதை நானும் விரும்பவில்லை.

'கூட்டு ரோடு' என்று சொல்லுவார்கள். நாலு தெருக்கள் சந்திக்கும் அகலமான பாதை அது. சாலைகளும் கூடும்; அங்கு வரும் மக்களும் கூடிப் பிரிவார்கள். உந்து வண்டிகள் நிற்கும்; அது ஓய்வு எடுத்துக் கொஞ்ச நேரம் அந்த இடத்தை விட்டு நகர மறுக்கும். ஒரு சிலர் பஸ் மாறுவதற்காகவும் இறங்குவார்கள். அங்கே 'டீ' கடைகள் சமூக சேவை செய்யும். பழைய ரேடியோ பெட்டி கிராமபோன் பெட்டியைப் போல அலறும் குரலில் பாடிக்கொண்டு இருக்கும். பீடிக்கு நெருப்புக் கேட்டுப் பற்ற வைக்கும் இளைஞர்கள் பக்கத்தில் போஸ்டரைப் பார்த்துக் கொண்டிருப்பார்கள்.

டீக்கடைகள் என்னைக் கவர்ந்தது உண்டு. ஓவியர் குப்பத்து டீக் கடை நினைவும் வருவது உண்டு. இது 'மக்கள் கட்சி' என்று நினைப்பது உண்டு. 'சிங்கிள் டீ' என்று கத்துவான். வேண்டுமென்றே நான் 'டபுள் டீ' கேட்டது உண்டு. அவன் என் அறியாமையைத் திருத்துவான். 'கப் டீ தான் உண்டு' என்று கூறுவான். Sheep — என்ற சொல்லுக்கு ஆங்கிலத்தில் பன்மைச்சொல் கிடையாது Sheep— என்றுதான் கூறுவார்கள். அதே போலச் சிங்கிள் டீக்குப் பன்மை கிடையாது என்பதை உணர்ந்தேன். நான் அரை 'டீ' குடித்து வாயை நனைத்துக் கொள்வது உண்டு. அதற்கு மேல் என் வாய் சும்மா இருக்காது. காய்ந்து போன வடையையும் உலர்ந்து போன முறுக்கையும் கடித்துச் சுவை பார்ப்பேன். எவ்வளவு சாப்பிட்டாலும் பயம் இல்லை.

நகரத்துப் பெரிய ஹோட்டல் போல அஞ்ச வேண்டிய தில்லை. அவர்களுக்கு எது லாபம் எது அசல் என்ற வேறுபாடே தெரிவதில்லை. எல்லாம் 'லாபம்' என்ற அளவில் பில் போடுகிறார்கள். பில் மிகுந்தால்தான் அந்த ஓட்டல்களுக்கே மதிப்பு.

காய்ந்த வடையும் உலர்ந்த முறுக்கும் எனக்கு ரொம்பப் பிடிக்கும், அவற்றைத் தவிடு பொடி செய்து முடிப்பேன். இதெல்லாம் எனக்கு ரொம்ப திருப்தி. அவர்களோடு பேச்சுக் கொடுப்பேன். அவர்களும் ஏதாவது பதில் சொல்லுவார்கள். என்ன பேசுவேன்? எப்படி உங்கள் வியாபாரம் என்பேன். ஏதோ சுமாராக நடக்கிறது என்று கூறுவார்கள். அந்தக் கூட்டுச் சந்தியில் இளைப்பாறுவதற்கு வசதியும் உண்டு; பலகை போட்டு இருப்பார்கள். குளிர்ந்த நிழலை அங்குக் குடிகொண்டிருந்த தூங்கு மூஞ்சி மரங்கள் தரும். அங்கு இளைப்பாறி ஓய்வு சிறிது எடுத்துக் கொண்டபிறகே என் வருகையை எதிர் நோக்கி இருக்கும் சுற்றமும் நட்பும் ஆகிய அந்த பஸ்ஸில் ஏறுவேன். எல்லோருடைய தலையையும் எண்ணிய பிறகுதான் கண்டக்டர் 'விசில்' தருவார், மறுபடியும் என் பயணம் தொடரும். தலைகள் சரியாக இருக்கின்றன என்று தெரிந்த பிறகுதான் அவர் தலை அசைப்பார். அதற்கப்புறம் தான் வண்டியின் சக்கரங்கள் உருளும்.

உஷா தன் தொழிலுக்கு ஓய்வு கொடுத்து விட்டாள். சில நாட்களாகத் தொலைபேசியும் தொலைபேசியாகி விட்டது. அவள் குரலே கேட்க முடியாமல் போய்விட்டது. அவள் ஏதோ தவறு செய்தவளைப் போலக் காணப்பட்டாள். மறுபடியும் அவளுக்குச் சமூகம் பெரிய பூதமாகக் காணப்பட்டது என்று நினைக்கிறேன். சமூகத்தின் முன் நான் ஒரு சாதாரண வஸ்துவாகக் காணப்பட்டேன் என்று நினைக்கிறேன்.

அவள் வீட்டுக்குப் போக முடிவது இல்லை. அவளும் என்னை வரவேற்கும் நிலையில் இல்லை. அப்பொழுது மிக பெரிய தவறு செய்த குற்றவாளி போல் ஆயினேன். அவள் வீட்டில் புதிய சூழ்நிலை உருவாகத் தொடங்கியது என்று நினைக்கிறேன். உஷாவின் தங்கைக்கு யாரோ பெண் வந்து கேட்டுக் கொண்டிருந்தார்கள் போல இருந்தது. அப்பொழுதுதான் உஷா குற்றவாளிக் கூண்டில் நிறுத்தப்பட்டாள். எங்கள் உறவு அன்று வெளிப்படாத நிலை. அந்த நிலையிலேயே உஷாவின் வாழ்க்கை பரிசீலனை செய்யப்பட்டது. வருகிறவர்கள் உஷாவின் தங்கையைப் பற்றி விசாரிப்பது இல்லை. அவள் ஏன் வாழ வில்லை என்ற கேள்வியைக் கேட்டுத் தொல்லைப் படுத்தினார்கள். அவள் வாழ்க்கையைப் பற்றி வந்தவர்கள் மிக்க அக்கரை கொண்டவர்களாகக் காணப்பட்டார்கள்.

அவள் ஏதோ தவறு செய்து இருக்க வேண்டும் என்ற அடிப்படை உண்மையைக் கொண்டு அவர்கள் ஆராய்ச்சியும் குறுக்குக் கேள்விகளும் அமைந்தன. தங்கைக்கு மணமானதும் அவள் போவாள் என்று வீட்டிலே சமாதானம் சொல்லிப் பார்த்தார்கள். ஆராய்ச்சி என்பது தெரியாமல் இருந்து எதையும் தெரிந்து கொள்ள முயல்வது. இந்த மாதிரி விஷயங்களில் மட்டும் ஏற்கனவே ஒரு முடிவை மனத்தில் கொண்டு பிறகு ஆராய்ச்சி செய்கிறார்கள். தான் அந்த வீட்டில் இருப்பது எவ்வளவு பெரிய சுமை என்பதை அவ்வப்பொழுது உணர்ந்து வந்தாள்.

என்னைப் பற்றியும் பேச்சு நடந்திருக்கிறது. உஷா அவர்களைப் பேசவிட்டுத்தான் சும்மா இருந்திருக்கிறாள். எனக்கு வயது அதிகம் என்று பேசப்பட்டதாம். அதனால் எனக்கு அங்கிருந்து விடுதலை கிடைத்தது. அவர்கள் என்னை அதிகாரபூர்வமாக நிராகரித்து விட்டார்கள் என்று தெரிந்த பிறகு அந்தப் பெண்ணின் மீதே என் மனம்

மேலோட்டமாகச் சென்றது. நான் அவளை ஒப்புக்கொண்டிருந்தால் இந்தப் பிரச்சனையில் அகப்பட்டுக் கொண்டிருக்கத் தேவை எழுந்திராது என்று எண்ணினேன். ஆனால் அந்தப் பெண் என்னைப் பொறுத்தவரை ஒரு நிழலாகவே பட்டாளேயன்றி ஒளியாகப்படவில்லை.

இதற்கு முன்னால் சில நிகழ்ச்சிகள் நடந்து இருக்கின்றன. அவள் ஸ்கூட்டர் வாங்கும்படி சிபாரிசு செய்திருந்தாள். பஸ்ஸில் நாங்கள் பயணம் செய்த நாட்களில் சில சிரமங்கள் ஏற்பட்டுக் கொண்டிருந்தன. நான் நின்று கொண்டே இருப்பேன். அவள் உட்கார்ந்து கொள்ள இடம் கிடைக்கும். 'ஆபீசர்' நிற்க 'குமாஸ்தா' உட்காருவது அங்கேதான் பார்க்க முடிந்தது. அங்கே நாங்கள் அப்படிப் பழகவில்லை; அந்த நினைப்புத் தோன்றவில்லை. உட்கார்ந்து பேச முடியாத நிலைமை சர்வ சாதாரணமாக இருந்தது. மற்றும் நாங்கள் அங்கே எப்படிப் பேச முடியும்.

மேலும் எங்கள் உறவு முற்றுகின்ற காலம்; அதற்கு ஸ்கூட்டரும் அவசியமாகப்பட்டது. அவள் என்னோடு ஸ்கூட்டரில் பயணம் செய்து இருக்கிறாள். அவளுக்கும் அந்தத் துணிவு வந்து விட்டது. அப்பொழுதுதான் அவனுக்கு அவளைப் பற்றிய அக்கரை ஏற்பட்டது. யாரோ சொல்லி இருக்கிறார்கள் அவள் யார் பின்னாலேயோ போகிறாள் என்று.

அதற்குப் பிறகு அவனுக்குப் புதிய அக்கரை பிறந்தது. அவளைத் தான் வைத்து வாழ முடிவு செய்து விட்டதாகவும், பணம் ஏதும் தேவை இல்லை என்றும் அவள் தன் வீட்டில் வந்து இருந்தால் போதும் என்றும் சொன்னானாம். தான் திருந்திவிட்டதாக இன்ஸ்பெக்டருக்கு நீண்ட கடிதம் எழுதிக் கையெழுத்திட்டு அனுப்பினானாம்.

அவள் அப்பாவுக்கு இந்த உத்தியோகம் கிடைத்திருந்தாலும் அவ்வளவு சந்தோஷப்பட்டிருக்க மாட்டார். அவன் ஒற்றைக் காலில் நிற்கிறானாம். மற்றொரு கால் என்ன ஆயிற்று என்று தெரியவில்லை. அப்படிப் பேசிக்கொண்டார்கள் என்று தெரிகிறது. "நீ போக வேண்டும்; நீ போனால்தான் இரண்டாவது மகளுக்கு மணம் பேச முடியும்" என்று கணைமாரி தொடுத்தாராம்.

"நீ ஸ்கூட்டரில் போனது உண்மைதானே"

"பஸ் கிடைக்கவில்லை"

"அது தெரியும்"

"ஹெல்மெட்டுப் போடவில்லை"

"அதை நான் கேட்கவில்லை"

"இல்லேப்பா அதுக்குத்தான் சார்ஜ் பண்ணுகிறீர்கள் என்று நினைத்தேன்."

"அது அல்ல. ஒரு ஆம்பிளை பின்னால் உட்காரலாமா?"

"எல்லோரும் ஆம்பளைங்க பின்னால்தான் உட்காருகிறார்கள்."

"ஒரு ஆம்பளை"

அந்த ஒரு என்ற சொல்லுக்கு அர்த்தம் இருப்பதைக் காண முடிந்தது அவளால்.

"முதலில் நீ 'ரிசைன்' செய்ய வேண்டும்."

அதுதான் காரணம் அவள் வேலையை விட்டதற்கு என்று நினைக்கிறேன். உண்மை? அது எனக்குத் தெரியாது. அதற்கப்புறம் என்ன நடந்தது என்று எனக்குத் தெரியாது.

நான் மனம் அமைதி இழந்தேன். மறுபடியும் கூட்டு ரோடுக்குப் போவது போன்ற அனுபவம் ஏற்பட்டது. கொஞ்சம் ஓய்வு எடுப்பது நல்லதுதான். அங்கே

திசைகாட்டும் பலகை இருந்தது. கிழக்கு மேற்கு தெற்கு வடக்காக அம்புக் குறிகள் போடப்பட்டிருந்தன. அவள் அங்கே உட்கார்ந்தாள். நானும் அங்கேதான் உட்கார்ந் திருந்தேன். இருவரும் ஒன்றாகத்தான் வந்தோம். அவளுக்கும் திக்குத் தெரியவில்லை. எனக்கும் தெரியவில்லை. எங்கே போவது என்று தெரியாமல் இருக்கும் பொழுது யாரிடம் வழி கேட்பது. இரண்டு பேரும் மௌனம் சாதித்தோம். மறுபடியும் நான் அதே டீ கடைக்குப் போகிறேன். அவளும் என்னோடு வருகிறாள். இரண்டு 'சிங்கிள்' டீ கேட்டேன். அவனுக்கு ஏன் என்று தெரியவில்லை. அவளை அவன் கவனிக்கவில்லை. அவளோடுவந்த பிறகு,. என் அந்தஸ்து உயர்ந்து இருந்தது. அவளோடு நான் டீ குடிக்க வருவேன் என்று அவன் எதிர் பார்க்கவில்லை. அவன் எங்களை ஒரு மாதிரியாகக் கவனித்தான். இப்படி டீ குடிக்க வரும் தம்பதிகள் பலரை அவன் சந்தித்திருக்கிறான். நான் குடித்தேன்; தவறு மெல்லப் பருகினேன்; அவள் குடித்தாள். மறுபடியும் கூட்டு ரோடு எங்களை விட்டு மறைந்தது.

இது வெறும் உருவகம். இப்படி என் நினைவுகள் ஓடின. எதிர்ப்பு வந்தால்தான் மனம் தெளிவு பெறுகிறது. செயல் பிறக்கிறது என்பதை அறிய முடிந்தது.

"அப்பா! அவருக்கு விவாகரத்துக் கொடுக்கத் தீர்மானித்து விட்டேன்."

அவருக்கு அதிர்ச்சி ஏற்பட்டது.

மாஜிஸ்ட்ரேட்டுக்கு முன்னால் பல வழக்குகள் கொண்டு சென்றிருக்கிறார். பல கேஸ்கள் தள்ளுபடியாகி இருக்கின்றன. அவற்றை எந்தச் சலனமும் இல்லாமல் ஏற்றுக் கொண்டிருக்கிறார்.

அவர் நெஞ்சில் சலனம் ஏற்பட்டது; அதோடு சஞ்சலமும் கலந்துவிட்டது.

"என்னம்மா சொல்றே"

"வக்கீலைப் பார்க்கணும்"

"விவாக்ரத்து செய்தால் மெயின்டனன்ஸ்தான் கேட்க முடியும்."

"அவனிடம் அதையும் எதிர்பார்க்கவில்லை. அவனுக்கு விடுதலை அளிக்க விரும்புகிறேன்."

"அப்புறம் அவனைப் பிடிக்க முடியாது. அவன் வேறு கலியாணம்...!"

"தங்கையை அவனுக்குக் கொடுத்து விடப்பா"

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவள் ஏன் இந்த முடிவுக்கு வந்தாள்.

அவள் சொன்னாள், "அப்பா நான் ஒரு முடிவுக்கு வந்துவிட்டேன். என் தங்கைக்கு மணம் செய்விக்க வேண்டும். அதற்கு ஒரு வழி இதுதான்" அதற்கு மேல் அவள் விளக்கவில்லை.

"அவனுக்கு மனைவி தானே வேண்டும்"

"என்னம்மா சொல்றே"

"அப்பா! இந்தக் குடும்பம் தாழக் கூடாது என்பதில் எனக்கு அக்கறை இருக்கிறது"

"அதற்காக"

"அவன்தான் அவளுக்கு ஏற்றவன்"

"என்னம்மா"

"அவன் திருந்திவிட்டான். மனைவியைப் புறக்கணித்தால் அவள் என்ன ஆவாள் என்பதை என் வாழ்வில் அவன் பாடம் கற்றுக்கொண்டான். தெரிந்துதான் ஒரு ஆம்பளையின் பின்னால் ஸ்கூட்டரில் சென்றேன். அவன் அதைக் கண்டு உள்ளம் புழுங்க வேண்டும். பெண்ணுக்கும் இந்த நாட்டில் 'சம உரிமை' உண்டு

என்பதை அவன் உணரச் செய்ய வேண்டும். சம உரிமை என்பது தவறு செய்ய அல்ல; வாழ்வை ஏற்படுத்திக் கொள்ள. பெண்ணை ஒதுக்கித் தள்ளினால் அவள் வாழமாட்டாள் என்று நினைத்தான். அவன் எனக்குச் சமூகத்தில் கொடுத்த அந்தஸ்து 'வாழாவெட்டி' என்பது. எனக்கும் வாழ்க்கையில் மற்ற பெண்களைப் போலச் சம அந்தஸ்து பெறமுடியும். அதற்காகச் சில மாற்றங்கள் செய்ய வேண்டியிருந்தது; அதை விளம்பரப்படுத்தத்தான் பகிரங்கமாக ஒருவன் பின்னால் சென்றேன்" என்றாள்.

அவனுக்கு ஓர் அதிர்ச்சி ஏற்பட்டு இருந்தது. அவன் செய்த தவறுகளை அவன் உணரத் தொடங்கினான்.

அவள் மேலும் என்னிடம் சொன்னாள். "இந்த விளைவை ஏற்படுத்திய பிறகுதான் துணிந்து உங்களோடு உறவு கொண்டேன் என்றாள். என் தங்கைக்கு மணம் செய்விப்பது என் கடமை; அவளுக்கு மணம் என்றால் நான் 'வாழா வெட்டி' என்ற பட்டத்தினின்று விலக வேண்டும். சமூகத்தில் சம்பிரதாயம் கெடாமல் நானும் ஒரு சுமங்கலியாக (இது பெண்கள் பெறும் அந்தஸ்து) வாழ்க்கை நடத்த வேண்டும். அதற்கு அவன் வழி செய்ய வில்லை. அவனுக்கு ஓர் அதிர்ச்சியை ஏற்படுத்திய பிறகு ஒரே கல்லில் இரண்டு காயை வாழ்த்தினேன் என்றாள். பெண்ணை அடக்கி ஒடுக்கிக் கொடுமைப்படுத்துவது எவ்வளவு தீமை என்பதைப் புரிந்து கொண்டான் அவன்."

அவள் மேலும் என்னிடம் நிதானமாகப் பேசினாள். "நான் தெரிந்துதான் தங்களைக் காதலித்தேன். அதற்காக வருத்தப்படவில்லை, நிச்சயமாக நான் அவனோடு வாழ முடியாது. திருமண 'ஆல்பத்தை' அவனுக்கு எப்பொழுதே தபாலில் அனுப்பி விட்டேன். அவன் அதைப் பார்த்துக் கொண்டிருக்கட்டும் என்று அனுப்பிவிட்டேன். அந்த வாழ்க்கை வெறும் நினைவுகளாக இருக்கட்டும். அதில் ஒரு

பெண்ணின் கதையைக் காண்பான். வாழவேண்டிய பெண் ஒருத்திக்கு வாழ்க்கை தராவிட்டால் அவள் வெறும் நினைவுகளாகத்தான் நிலைப்பாள் என்பதை அவன் அறிந்து கொள்ளட்டும். நான் தாலியை அனுப்பவில்லை; அது எனக்குத் தேவைப்படுவதால், அதை அவனிடம் கொடுக்கவில்லை. அவன் அதற்கு மதிப்புத் தராததால்" என்று முடித்தாள்.

மேலும் தொடர்ந்தாள். "அப்பாவுக்கு நான் வாழ்க்கையில் சுமையாக இருக்க விரும்பவில்லை. அவர் கைகளுக்கு நான் விலங்காக இருந்தேன். அவர் போலீசு இன்ஸ்பெக்டர். அவர் எத்தனையோ பேருக்குக் கைகளில் விலங்கு மாட்டி இருக்கிறார். நான் அவர் கைகளுக்கு விலங்காக இருந்தேன். இது 'பெண் விலங்கு': பெண்ணைப் பெற்றதால் ஏற்பட்ட பிணைப்பு. அதனால் அவர் தன் இளைய மகளுக்கு எதையும் செய்ய முடியாமல் களைத்து நின்றார். வந்தவர்கள் என் வாழ்க்கையைப் பற்றிப் பேசும் பொழுதுதான் இந்த முடிவுக்கு வந்துவிட்டேன். நான் இந்த வீட்டை விட்டு வெளியே சென்றால்தான் அவருக்கு விடுதலை கிடைக்கும் என்பதை உணர்ந்தேன்.

அப்பாவுக்கு நான் வாழ்க்கையில் சுமையாக இருக்க விரும்பவில்லை. தங்கை அவருக்குச் சுமைதான். அவளுக்கு எந்தப் பிரச்சனையும் தராமல் இருப்பதற்காகவே இறைவன் நிறைய அழகு கொடுக்காமல் படைத்துவிட்டான். அது அவளுக்கு நல்லதுதான். அப்பாவிடம் சல்லிக்காசு கிடையாது. அவர் வாங்கும் பென்ஷனைத் தவிர. அவர் யோக்கியமாக வாழ்ந்ததற்கு அவரைத் தண்டிக்க விரும்பவில்லை அவர் வாழ்ந்த வாழ்க்கை புனிதமானது. அந்தக் களங்கமற்ற வாழ்வு இந்த நாட்டுக்குத் தேவைதான் நான் அவருக்குக் கைம்மாறு செய்வது என்றால் இதுதான். என் கணவனை அவளிடம் ஒப்புவிப்பதைத் தவிர வேறு வழி தோன்றவில்லை.

இந்த நாட்டில் மணமாகாத பெண் ஒரு குடும்பத்தில் முக்கியமான பிரச்சனை. அதற்கு நான் ஏதாவது செய்ய வேண்டுமானால் இதைத்தான் செய்ய முடியும். இதை மனத்தில் வைத்துக்கொண்டுதான் தங்களிடம் நெருங்கிப் பழகினேன், உங்களை அவளுக்குக் கட்டித் தருவது என்று முயன்றேன். நீங்கள் அதற்கு இசையவில்லை. உங்கள் நாட்டம் என்னைச் சுற்றியே கிடந்தது. உங்களைக் காக்க வேண்டிய பொறுப்பும் எனக்கு இருந்தது. 'காதலுக்குக் கண் இல்லை' என்ற தவறான படத்தைப் பார்த்துக் கொண் டிருந்தீர்கள். அது தவறு. 'அவர்கள்' படத்தைப் பார்க்க வேண்டும் என்று சொன்னேன். அந்தப் பாத்திரங்களுள் ஒருவராக நான் அமைந்து விட்டேன் என்பதை அந்தப் படம் பார்க்கும் பொழுதே உணர்ந்தேன். என் நாடகத்துக்கு மற்றொரு நடிகரும் தேவைப்பட்டது. அது நீங்களாக இருக்கலாம் என்று தோன்றியது. உங்களையும் பார்க்கச் சொன்னேன். படம் வந்தால் அப்படித்தான் வரவேண்டும். காதலுக்குக் கண் இல்லை. அதை ஒரு படமாக நான் கருதவில்லை. அந்த ரசனையிலிருந்து உங்களை மாற்ற விரும்பினேன். ஆனால் பாலச்சந்தர் கொண்டு போன முடிவு சரியாகப் படவில்லை. வாழ்க்கையில் பிரச்சனை களை எழுப்புகிறாரே தவிர விடை அவரால் காணமுடிய வில்லை. ரசிகர்களின் செண்டிமெண்டு அவரைத் தடை செய்கிறது. நான் செண்டிமெண்டுக்கு அஞ்சி இப்படியே அழிந்து போக விரும்பவில்லை. யாராவது புதுவழி காட்டினால் தான் இந்தச் சமுதாயம் திருந்தும். 'என்கதை' தனிப்பட்ட ஒரு பெண்ணின் கதை அல்ல. மற்றவர்கள் இந்த உண்மையைக் காண முடியாது; அவர்கள் இந்தக் கண்ணோட்டத்தில் பார்க்க வேண்டிய தேவை ஏற்படவில்லை.

நான் பழகும் குடும்பங்கள் பலவற்றில் இந்தக் கதையைக் கேட்டுக் கொண்டுதான் வருகிறேன்.

'வாழாவெட்டி' என்ற இனத்தை இந்த ஆணினம் படைத்துக் கொண்டு தான் இருக்கிறது. மாமனார் கார் வாங்கித்தர வில்லை என்று ஒரு பெண்ணை அடித்துத் துரத்தி இருக்கிறான். சொத்து தன் பேரில் மாற்றித் தரும்படி அடித்து விரட்டி இருக்கிறான் மற்றொருவன். பேசிய வரதட்சணைப் பணம் தரவில்லை, என்பதற்காகச் சாந்தி முகூர்த்தத்தை மறுத்து விட்டிருக்கிறான் மற்றொருவன். சீர்வரிசை கொண்டுவரவில்லை என்று துரத்தி விட்டிருக் கிறான்.

பெண்களின் வாழ்க்கை வழுக்கு நிலமாகத்தான் இருக்கிறது. நிலைத்து நிற்பது அரிய முயற்சியாகத்தான் இருக்கிறது. யாரும் இதை எடுத்துச் சொல்வது இல்லை. என் வாழ்க்கைப் பிரச்சனையை யாரிடம் எடுத்துக் கூற முடியும். பெண்ணைக் கொடுமைப் படுத்தினால் அவள் மற்றொருவனை மணப்பது தவறு அல்ல. அது தான் சரி என்ற எண்ணம் இந்த நாட்டில் உருவாக வேண்டும். அப்படி உருவானால் ஆண்கள் இந்தத் தவறைச் செய்யமாட்டார்கள். அவன் நிச்சயமாக என் தங்கையைச் சரியாக வைத்து வாழ்வான். என் வாழ்க்கையில் அவன் விளக்கம் கண்டான்.

வாழா வெட்டி என்ற சொல்லுக்குக் கருத்து அப்பொழுதுதான் விளங்கியது. வாழ்வதில் பயன் இல்லை என்ற உணர்வு தோன்ற வாழும் வாழ்க்கையைத்தான் இந்தச் சொல்லால் சொல்கிறார்கள் என்பதை உணர் கின்றேன்.

"ஏன் வேலையை விட்டு விட்டாய் நீ" என்று கேட்டேன்.

"என் கணவர் வசதிமிக்க வாழ்க்கை உடையவர். நான் மேலும் தொடர்ந்து வேலை செய்வது சமூகத்துக்குச் செய்யும் துரோகம். பெண்கள் வேலை செய்ய வேண்டும்.

வசதி உடையவர்கள் செய்யக்கூடாது. அந்த வாய்ப்பை மற்றவர்களுக்குத் தரவேண்டும். அதற்காகத் தான் வேலையை விட்டுவிட்டேன்." என்றாள்.

என் கற்பனை எங்கோ பறந்தது. எனக்கு ஒரு மனைவி வாய்த்துவிட்டாள். வேளைக்குச் சோறு; அன்புக்கு இனிய சொல், உறவுக்கு ஒருத்தி இந்தப் புதிய கண்ணோட்டத் தோடு என் வாழ்க்கையைப் பார்த்தேன்.

"சே! பிரமசாரியாக வாழ்ந்தது எவ்வளவு தவறு!" என்பது அப்பொழுதுதான் தெரிந்தது. மனை மாட்சி உடையவள் அவசியம் தான். அதில் ஒரு குறையும் உஷாவிடம் இருப்பதாகத் தெரியவில்லை. மங்கலமாகத் தான் என் குடும்ப வாழ்வு தொடரும் என்று எண்ணத் தொடங்கினேன்.

அம்மாவுக்கு எப்படி விளக்குவது? உஷா தன் குடும்பத்தில் விளக்கேற்றி வைத்தாள். அவர்களுக்கு வெளிச்சம் தெரிகிறது. அம்மாவுக்கு எப்படி விளக்க முடியும். தடுமாறும் குருடர்களுக்கு விளக்கேற்றினால் மட்டும் என்ன பயன்? அந்த விளக்கு அவர்களுக்குப் பயன் படப் போவதில்லை. விளக்குக்குப் பயன் இல்லை.

என்ன செய்வது என்பதே எனக்குத் தெரியவில்லை. என் கால்கள் சென்ற வழியே நடந்தேன். வழியில் பல காட்சிகள் என்னைக் கவர்ந்தன. குஷ்டரோகி முகமெல்லாம் தடிப்பு; கைகள் எல்லாம் குறைப்பு; வாழ்க்கையே வெறுப்பு அவனுக்கும் ஒரு பத்தினி இருந்து அவனை வண்டியில் வைத்து இழுத்துச் சென்றாள்! வயது எண்பது இருக்கும். ஒட்டிய உடல், மெலிந்த தோற்றம், நலிந்த வாழ்வு. அக்கிழவரின் கைகள் முன்னால் நடந்து சென்ற கிழவி ஒருத்தியின் தோள்களைப் பிடித்துச் சென்றன. அந்த அன்புக் காட்சியைப் பல நாள் பார்த்து இருக்கிறேன். அன்றும் அதைப் பார்த்தேன். இளம்

துளிர்கள் இணைந்து சென்றது ஒன்றும் புதிதாகப் படவில்லை. நடந்து சென்ற குடும்பம். தோள் மேல் அவன் ஒரு குழந்தையை வைத்து நடந்தான்; அவன் பின்னால் அவன் மனைவி தொடர்ந்தாள். அவள் தன் இடுப்பில் ஒரு குழந்தையை வைத்திருந்தாள். இருவரும் நடந்து கொண்டே சென்றார்கள். எங்கே போகிறார்கள்? வாழ்க்கைப் பயணம் தனியாக அமைவது இல்லை.

பாவம் அந்த ஓவியர் வாழ்க்கை தனிப் பயணம்தானே. இயற்கையாக எழுகின்ற அன்பும் கடமையும் அவரைக் கட்டுப் படுத்தவில்லை. வானத்து மழையால் குளம் நிறையவில்லை. கால்வாய் நிரம்பி வழிந்து ஓடி விழுந்த தண்ணீரால் குளம் நிறைந்தது. அவரிடம் செல்லலாம் என்பதுதான் என் நோக்கம்

அவரிடம் சென்றால் என் சொந்தப் பிரச்சனையை எப்படி அவரிடம் கூறுவது? அவரிடம் அரசியல் பேசலாம், சமூக இயல் அறியலாம், காதல் பிரச்சனையை எப்படிப் பேச முடியும். அவர் என்ன ஜோசியரா என்னை ஏமாற்ற; எதிர்பாராத விதமாக அந்தப் புரட்சி அதுதான் பழக்காரி அந்த வழியே வந்து சந்தித்தாள்.

"உங்கள் வீட்டுக்குத் தான் வருகிறேன்," என்றாள்.

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. "தீர்மானமாக முடிவு செய்து கொண்டேன்; தங்களோடு வாழ முடிவு செய்து விட்டேன்" என்றாள். எனக்கு இடியோசை கேட்பது போல் இருந்தது.

"உங்களுக்கு அவகாசம் தந்தேன்; யோசனை பண்ணச் சொல்லி; பிறகு முடிவு கூறும்படி; உங்களால் முடியவில்லை, நான் யோசித்து முடிவு செய்து விட்டேன்."

"என்ன பைத்தியம் பிடித்து விட்டதா உனக்கு?"

"இல்லை அந்த இரண்டு குழந்தைகளையும் அந்தப் பெரியவர் பார்த்துக் கொள்வார். நீங்கள் போனவுடன் தங்கள் கருத்தை எடுத்துச் சொன்னேன். அவர் அதற்கு ஒப்புக் கொண்டார். அவரே முன்னிருந்து மணம் முடித்து வைப்பதாகச் சொன்னார்" என்று சொன்னாள்.

"மேலும் அவர் சொன்னார் விதவை மணம் செய்து கொள்வது தவறு இல்லை. இந்த இளம் வயதில் இப்படியே காலம் கடத்துவது நல்லதல்ல என்று அறிவுரை சொன்னார். நீங்கள் அங்கு வருவீர் என்று எதிர்பார்த்தேன். வரவில்லை. அதனால்தான் நானே வந்து விட்டேன்."

"உனக்கு எப்படி இவ்வளவு தைரியமாகப் பேச மனம் வருகிறது?"

உண்மை சொல்வதற்கு ஏன் பயப்பட வேண்டும். நாணம் வெட்கம் அதெல்லாம் அது சின்ன வயசில். இப்பொழுது எதையும் துணிந்து பேசும் பழக்கம் வந்துவிட்டது.

"உங்கள் வீட்டுக்குத்தான்."

"எங்கள் அம்மா!"

"அவர்களை நான் பார்த்துக் கொள்கிறேன். உங்கள் பிள்ளை தான் இந்த முடிவுக்கு வந்தார். அவர் அடிக்கடி குப்பத்துக்கு வருவார். எங்கள் வீட்டில் தங்குவார்' என்று நான் எடுத்துக் கூறுகிறேன்" என்று சொன்னாள்.

பிள்ளையார் பிடிக்கப் போய் குரங்காக முடிந்து விட்டதே என்று பயந்து விட்டேன்.

"நீ பயப்படாதேய்யா. நான் பேசுகிறேன். வா போகலாம்" என்றாள்.

"எங்கே?"

என்னால் ஒன்றும் பேசமுடியவில்லை. அவள் பிடிவாதமாக இருந்தாள்.

அதற்கப்புறம் சொன்னாள்; "பயப்படாதே எனக்கு எல்லாம் தெரியும், உங்க ஆபீசிலே இதுதான் பேச்சாமே, உஷாவை நீங்கள் கலியாணம் செய்துகொள்ளப்போவதாக ஓவியரிடம் சொன்னேன். அவர் தான் அனுப்பி வைத்தார். உங்கள் அம்மாவிடம் நல்ல விதமாகப் பேசி அதுக்கு வேண்டியதைச் செய்யச் சொன்னார்."

"அது எப்படி உன்னால் முடியும்"

"நீங்கள் கவலைப்படாமல் வாங்க நான் முடிக்கிறேன்" என்றாள்.

அதை மறுக்க முடியவில்லை. எனக்கு ஏதோ ஒரு அசாதாரண துணிவும் ஏற்பட்டது. அம்மாவுக்கு எடுத்துச் சொல்ல யாராவது அவசியம் தானே. 'அவள்' தான் வந்து போகட்டுமே என்று அழைத்துச் சென்றேன்.

கண்ணம்மா வீட்டுக்குள்ளே சென்றாள்.

"ஓ! நீயா இங்கே எங்கே வந்தாய்?"

"வேலைக்கு அல்ல; நான் இந்த வீட்டு எசமானி."

"என்னடி இது"

"ஆமாம் உங்கப் பிள்ளையைக் கலியாணம் செய்து கொண்டேன். அவர்தான் புரட்சி என்று சொல்லி என்னிடம் வந்து பேசினார். இல்லை என்று சொல்ல முடியுமா கேட்டுப் பாருங்கள்."

"ஆமாம்"

"உங்கள் கையாலே என் நெற்றிக்குப் பொட்டு வைத்தால்தான் கலியாணத்திற்குச் சம்மதிப்பேன் என்று சொல்லி அவரை நேரே வீட்டுக்கு அழைத்து வந்தேன்."

"விதவைக்குக் குங்குமமா? இதுவரை நான் கொடுத்ததே இல்லையே"

"அவள் இனிமேல் விதவையாக இருக்கமாட்டாள். சுமங்கலியாகத்தான் இந்த வீட்டில் இருக்கப் போகிறாள். அதற்கு உங்கள் வாழ்த்தைக் கோருகிறாள்."

"அவன் குழந்தை குட்டியுமா இருக்க வேண்டியவன் அவனை!"

"அதுக்குக் கவலைப்படாதீங்க" இவ்வாறு சொல்லிக்கொண்டே இருக்கும் பொழுது அந்தக் குழந்தைகளை அழைத்துக் கொண்டு ஓவியர் வந்து சேர்ந்தார்.

"இவர்கள் என் குழந்தைகள்; பேரனும் பேர்த்தியுமாக இருப்பார்கள்."

அம்மாவுக்கு அதிர்ச்சி தாங்க முடியவில்லை.

"என்ன ஓவியரே இதெல்லாம் உங்களுக்கு நல்லாஇருக்கா! அவன்தான் தெரியாமல் நடந்து கொண்டால் நீங்க புத்தி சொல்லி இருக்கக் கூடாதா. அவ்வளவு தூரம் பழகவிட்டது உங்களுக்கு நியாயமாகப் படுகிறதா?"

"என்னம்மா செய்யறது; வயசு பிள்ளை. அது அது தன் இஷ்டமாகத்தான் நடந்து கொள்ளும்."

"அதுக்கு ஒரு முண்டச்சிதான் கிடைத்தாளா?" என்று கடுமையாகச் சொன்னாள்.

"அவளும் ஒரு பெண்தானே!"

"ஆமாம் பெண்; இரண்டு குழந்தைக்குத் தாயாகி விட்டவளுக்கு இந்தக் கேடுகெட்ட புத்தி ஏன் ஏற்படணும்?"

"அதனால் அவளைப் பெண் இல்லை என்று சொல்ல முடியுமா. இப்பொழுது அவள் ஒரு விதவை; நீ பொட்டு இட்டால் அவள் சுமங்கலி."

"அப்பகூட அவள் எப்படி என் மருமகளாக முடியும்?"

"ஏன் முடியாது. சொன்ன வேலையைத் தட்டாமல் செய்வாள்; இதுதானே மருமகளுக்கு வேண்டிய லட்சணம்."

"முடியவே முடியாது. அவளுக்குக் குழந்தைகள் இல்லாவிட்டாலும் பரவாயில்லை. ஒழிந்து போவுது என்று ஏற்றுக்கொள்வேன். இந்த மாதிரி வரும் என்று எதிர்பார்க்கவில்லை?"

"குழந்தைகள் தானே பாரம். நான் வேண்டுமானால் குழந்தைகளை வளர்த்துக் கொள்கிறேன்."

"முடியவே முடியாது; வேண்டுமானால் அவன் செய்த தவறுக்கு நான் மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன். எவ்வளவு தொகை வேண்டுமானாலும் வாங்கிக் கொண்டு போய்விடுங்கள்."

"அவரைச் சொல்லச் சொல்லுங்க; நாங்க போறோம்."

"என்னடா வேடிக்கை பார்க்கிறே"

"இல்லை. சந்தர்ப்பம் வரும்போதுதானே பேச வேண்டும்."

"அவர்கள் அத்தனை பேரும் வெளியே போக வேண்டியதுதான்"–

"அப்படின்னா!"

"நானும் அவர்களோடு போறேன். நீ மட்டும் இந்த வீட்டிலே"

"இருப்பேன் என்று எதிர்பார்க்கிறாயா!"

"ஒரு சாண் கயிறு."

"நான் செய்த தவறுக்கு."

“ஆமாம் அப்புறம் எப்படியாவது கெட்டு ஒழிந்து போ”

“ஆக நீங்கள் செத்த பிறகு எந்தத் தவறும் செய்யலாம் இல்லே.”

“கடவுளே! எனக்கு ஒன்றும் புரியவில்லை.”

“புரியும். நீங்க நினைக்கிறதுதான் சரின்னு எப்படிச் சொல்ல முடியும்.”

“இதை யாரும் ஒப்புக் கொள்ளமாட்டார்கள்.”

“இப்ப காலம் மாறிப் போச்சு அம்மா. மேல் நாட்டிலே விதவையை மணப்பது சகஜம். கணவனோடு வாழ முடியாமல் விவாகரத்து செய்து கொள்பவர் மறுமணம் செய்து கொள்கிறார்கள்.”

“அதெல்லாம் சினிமாக்காரிதான் செய்து கொள்வாள். அவளுக்கு அந்த அவசியம் ஏற்படுகிறது. அதனால் செய்து கொள்கிறாள்.”

“இல்லேம்மா, அவளால் வாழமுடியாமல் தான். கணவன் அவள் தொழில் செய்ய உரிமை கொடுக்காததால் தான்.”

“அது சரி. அவளுக்கு அது அவசியம். தன் உரிமையைக் காப்பாற்றிக் கொள்ள விரும்புகிறாள்.”

“ஆமாம்மா. பொதுவாகச் சம்பிரதாயப்படி கலியாணம் செய்து கொள்கிறார்கள். அவள் பிற ஆடவரோடு சேர்ந்து நடிக்க வேண்டி ஏற்படுகிறது. இதை அவள் கணவன் தாங்கிக் கொள்ள முடிவது இல்லை. அந்தப் பண்பாடு இல்லாமல் போய் விடுகிறது. அதனால்தான் விவாகரத்து ஏற்படுகிறது.”

"அது சரிதான் அப்படித்தான் யாரையாவது பிடித்து வந்தாலும் பரவாயில்லை. நீ ஒரு பழக்காரி, வேலைக்காரி, குழந்தைக்காரி, அவளைப் போய்ப் பிடித்து வந்துவிட்டு."

"அப்படியும் ஏற்படலாம் என்று காட்டுவதற்குத் தான் அவர்களை அழைத்து வந்தேன்."

"அப்படின்னா"

"அந்த ஓவியர் மனிதருள் மாணிக்கம். அவர் மீதி விஷயத்தைச் சொல்வார்" என்று முடித்தேன்.

"தம்பி ஆபீசில் வேலை செய்கிறாள். அழகாக இருப்பாள். இன்ஸ்பெக்டர் மகள். அவளைக் காதலித்தது உங்கள் மகன்."

"கலியாணம் செய்து கொள்ளப் போகிறானா" அதை முதலிலேயே சொல்லக் கூடாதா."

"அதைத்தான் சொல்ல வந்தேன். அவள் விவாகரத்து செய்து கொண்டவள். அவன் சரியாக வைத்துக்கொண்டு வாழவில்லை. அவர்களுக்கு வேறு எந்த பந்தமும் இல்லை."

"அப்படியானால்"

"அவள் உன் மகனுக்காகவே அவனை விவாகரத்து செய்து விட்டாள். அவளை ஏற்றுக்கொண்டுதான் தீர வேண்டும்."

"என்ன இது"

"அவள் இல்லை என்றால் உன் மகன் இந்தக் குடும்பத்தையே ஏற்று இருப்பான். உங்கள் வீட்டில் அவள் வேலைக்காரியாக வந்தபோது இவளைக் கண்டு இருக்கிறான். தொடர்ந்து அவள் பின்னால் சுற்றி இருக்கிறான். அவளை மணக்கவும் உறுதி செய்து கொண்டான். அந்த முடிவில் இருந்து மாற்றியவள்

உஷாதான். அந்த நன்றிக்காகவாவது நீ அவளை ஏற்றுக்கொண்டு தீர வேண்டும்."

"இதுவா கதை."

"இதுதான் கதை" என்று ஓவியர் என் கதையை முடித்தார்.





## ஆசிரியரின் கதை நூல்கள்

1. வழுக்கு நிலம் (நாவல்)
2. அரை மனிதன் (நாவல்)
3. வெறுந்தாள் (நாவல்)
4. நனவோட்டங்கள் (நாவல்)
5. குப்பைமேடு (சிறுகதைகள்)
6. படித்தவள் (சிறுகதைகள்)
7. பரிசு மழை (சிறுகதைகள்)
8. கிளிஞ்சல்கள் (சிறுகதைகள்)